இரண்டு புத்தகங்கள்

# கல்கி

KALKI
23.3.2003
ரூ.6.00



"ஊழல் கேஸா? ஊதி விடுவோம்... ஊதி!"



நட்சத்திர சந்திப்பு: ஸ்ரீகாந்த்

106



திருச்சி விசிட்டில் 'ஜெ' ஆசையாய் வாங்கிய பொருள் எது? 2,3

அது ராமர் கட்டிய பாலம் தானா? 25

யாரைத் தாக்குகிறார் கு.ஞா? 50

தேர்தல்களில் வாக்காளர்கள் ஜெயிக்கும் காலம் வருமா? 4,5



**கல்கி**

23.3.2003

சங்கடம் தீர்க்கும் சரபேஸ்வரர்!

52,53



● பெரம்பலூர், கரூர், திண்டுக்கல், திருவாரூர், தருமபுரி, திருச்சி ஆகிய மாவட்டங்களில் அரசின் நலத் திட்டங்களைத் துவக்கி வைக்கும் விழாக்களில் கலந்து கொள்வதற்காக, திருச்சியில் ஐந்து நாட்கள் தங்கி முகாமிட்டிருந்தார் தமிழக முதல்வர் ஜெயலலிதா. அவரு



# குட்டிச் சுவரைக் கட்டித் தர முயலும் ஜெ!

டன் தனி விமானத்தில் வந்து இறங்கியவர் உடன்பிறவா சகோதரி சசிகலா.

● திருச்சி சங்கம் ஹோட்டலில் தங்கியிருந்த ஜெயலலிதா, அரசு விழாக்கள் நடைபெற்ற எந்த இடத்துக்கும் சசிகலாவை அழைத்துச் செல்வதை முற்றிலும் தவிர்த்திருந்தார். ஆத்மார்த்த முறையில் அரங்கனைத் தரிசிக்க ஸ்ரீரங்கம் கோயிலுக்கு வந்திருந்த போது மட்டுமே, சசிகலாவை உடன் அழைத்து வந்திருந்தார் ஜெயலலிதா. கோயில் யானைக்குப் பழம் கொடுத்து ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டார்கள்.

● முதல்வர் திருச்சியில் ஐந்து நாட்கள் தங்குவதை முன்னிட்டு, பதினைந்து நாட்களுக்கு மாநகர எல்லைக்குள் ஊர்வலம், பொதுக்கூட்டம், மறியல், உண்ணாவிரதம் போன்றவற்றுக்குத் தடை விதித்திருந்தது மாநகரக் காவல்துறை. ஒவ்வொரு நாளும் சங்கம் ஹோட்டலிலிருந்து ஒரு கி.மீ தூரத்தில் அமைந்திருக்கும் ஹெலிகாப்டர் தளத்துக்கு ஜெயலலிதா கிளம்பி வரும் ஐந்து நிமிடத்துக்கு முன்னர் மட்டுமே, போக்குவரத்து நிறுத்தி வைக்கப்பட்டது. போக்குவரத்து நிறுத்தம் அதிக நேரம் நீடிக்க விடாமல் காவல் துறையினர் பார்த்துக் கொண்டதால், பொதுமக்கள் வழக்கமான அவதியிலிருந்து தப்பித்தனர்.

● கஜானா காலி, கடும் நிதி நெருக்கடி ஆகிய தொடர் பல்லவிகளுக்கு மத்தியில் ஜெயலலிதா ஐந்து நாட்களில் துவக்கி வைத்த மக்கள் நலத் திட்டங்களின் மொத்த மதிப்பீடு 11.53 கோடி ரூபாய். இதில் ஐந்தில் ஒரு பங்கு தொகைக்கான நலத்திட்டங்கள் முன்னரே செய்து முடிக்கப்பட்டவை.

● ஐந்து நாட்களிலும் கட்சிக்காரர்கள் அம்மா புகழ் பாடி நாளேடுகளில் தந்திருந்த விளம்பரங்கள், சுவரொட்டிகள் போன்றவற்றுக்கும், குறைந்தது இரண்டு கோடி ரூபாய்க்கு மேல் செலவாகியிருக்குமென கணக்கிடப்படுகிறது. (கட்சிக்காரர்களிடம் பணப்புழக்கம்?)

● எல்லா மேடைகளிலும் குட்டிக் கதைகள் நிறையவே சொல்லி வந்த ஜெயலலிதா, கதைகளின் முடிவில் கருணாநிதிக்குக் குட்டு வைத்து நிறைவு

செய்ய மறக்கவில்லை. 'முதல்வர் கூறிய கதைகளில் குட்டு வாங்கிய கருணாநிதி!' என்று அ.தி.மு.க.வினர் தனிப் புத்தகமே வெளியிடலாம்.

● திருச்சி விழாவின்போது ஸ்ரீரங்கம் மற்றும் உத்தமர் கோயில் மேம்பாலம் இரண்டும் முதல்வர் கரங்களால் திறந்து வைக்கப்பட்டது. அந்த மேம்பாலங்கள் அமையக் காரணமாயிருந்த மறைந்த முன்னாள் மத்திய அமைச்சர் ரெங்கராஜன் குமாரமங்கலத்தின் மனைவி கிட்டி குமாரமங்கலம், தமது மகன் மற்றும் மகளுடன் விழாவுக்கு வந்திருந்து வி.ஐ.பி வரிசையில் அமர்ந்திருந்தார். ஆனால் விழா மேடையில் முதல்வரோ, மற்றவர்களோ, அவரைப் பற்றி ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

● மற்ற நகரங்களைவிட திருச்சியில் அதிக நேரம் எடுத்துக் கொண்டு பேசிய ஜெயலலிதா, குட்டிக் கதைகளைக் கொட்டி முழங்கினார். தாம் கொண்டு வந்த கோயில் அன்னதான திட்டத்துக்கு, ஆண்டாள் பாசுரமே முன்னோடி என சுட்டிக் காட்டினார்.

● "இன்றுள்ள சூழ்நிலையில் தமிழக முதல்வர் பதவியை ஏற்க யாருமே முன் வர மாட்டார்கள். எதையெடுத்தாலும் நிதி இல்லை, நிதி இல்லை என்றுதான் அரசு அதிகாரிகளிடமிருந்து பதில் வருகின்றது. ஆணிகளால் ஆன சிம்மாசனத்தில் அமர்ந்து கொண்டு முள் கிரீடத்தை அணிந்துள்ளேன்!" என்றார்.

● "ஒரு இடத்தில் முற்றிலும் புதிதாக ஒரு கட்டடத்தை எளிதாகக் கட்டி முடித்து விடலாம். ஆனால் பாழடைந்து சிதைந்து குட்டிச் சுவராய்க் காட்சி தரும் ஒன்றின் மீது கட்டடம் எழுப்புவது என்பது மிகவும் சிரமமான காரியம். தமிழ்நாடு இப்போது அந் நிலையில்தான் இருக்கின்றது. இந்தியாவிலேயே முதன்மை மாநிலமாக ஆக்க வேண்டி, அந்தக் குட்டிச்சுவரைக் கட்டித் தரும் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன் நான்!" என்றார்.

● சுக்கிர ஸ்தலமான அரங்கனின் கோயிலுக்கு மாலை மூன்றரை மணிக்கு (சுக்கிர ஓரை நேரத்தில்) சசிகலாவுடன் வந்திருந்தார் தமிழக முதல்வர். நுழைவாயிலின் உள்ளே வெயில் படும் பிரகார நடையில் முதல்வர் நடந்து வரும் பாதையில், சிவப்புக் கம்பளம் விரித்திருந்தனர் கோயில் நிர்வாகத்தினர். அந்தச் சிவப்புக் கம்பளம் மீது நடந்து வராமல், மிதமான சூட்டுடன் கூடிய கல் பாவிய தரைமீது நடந்து சென்றே மூல ஸ்தானத்தில் நம் பெருமாளை தரிசித்தார். திரும்பி வரும் சமயத்தில் ரெங்கவிலாஸ் மண்டபக் கடையொன்றில் கடைக்காரார் பணம் வாங்க மறுத்தபோதும், வற்புறுத்தி பணம் தந்து, காமாட்சியம்மன் பித்தளை விளக்கு ஒன்றை வாங்கிச் சென்றார் ஜெயலலிதா.

— ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி.ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**செ. ஏக்நாத் ராஜ்**
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

● கே. சண்முகம், ஆதமங்கலம்புதூர்.

*? தேர்தல்களில் வாக்காளர்கள் ஜெயிக்கும் காலம் எப்போது வரும்?*

! நேர்மை உறங்காதபோது!

● ஒய்.எஸ்.ப்ரீதா, சென்னை - 12.

*? சுகாதார மையங்களில் பெண் குழந்தை பெறுகிற கிராமப்புறப் பெண்களுக்கு, ஆயிரம் ரூபாய் ஊக்கத் தொகை அளிக்கப்படுமென்று மத்திய மந்திரி சுஷ்மா சுவராஜ் அறிவித்திருக்கிறாரே?*

! பெண் சிசுக் கொலை இதனால் குறையும் என்று நினைக்கிறார் 'சிசு'மா, ஸாரி சுஷ்மா!

● கா. அப்துல் மஜீத், திருமயம்.

*? நடந்து முடிந்த தேர்தலில் பா.ஜ.கவுக்குப் பெரும் சரிவு ஏற்பட்டதால், வரவிருக்கும் பாராளுமன்றத் தேர்தலில் படுதோல்வி அடையும் என்பது பற்றி...?*

! அந்த நினைப்பில் காங்கிரஸ் அசந்து இருந்து விடக் கூடாது. நல்ல செயல்திட்டம் உருவாக்கி உழைத்தாக வேண்டும். இல்லாவிட்டால், ராமர் கோயில் விவகாரத்தைத் 'தோண்டி'க் கொண்டிருக்கும் பா.ஜ.க. அதைப் பெரிதாக்கி, வாக்காளர்களை மூளைச் சலவை செய்து ஜெயிக்கும் வாய்ப்பு இருக்கிறது.



• சுயநல யோசனை!

● முகவை முத்துசாமி, தொண்டி.

*? சமீபத்திய எரிச்சல்?*

! ராமர் கோயில் முன்பு இருந்ததா என அயோத்தியைத் தோண்டிப் பார்க்க அலகாபாத் கோர்ட் உத்தரவிட, 'அங்கே எங்கள் கோயில் இருந்தது' என்று ஜைனர்கள் புதிதாய்ப் பிரச்னை கிளப்பியதுதான்!

● பா.க. மணிவண்ணன், திருப்பூர் - 4.

*? பெண்கள் தினம் என்பதற்கு ஏதேனும் சரியான காரணம் உண்டா?*



• சும்மா அறிவிப்பு!



• வலிக்காத விளாசல்!

! 1857ம் வருடம் மார்ச் எட்டாம் தேதி, நியூயார்க் நகரில் கார்மெண்ட் ஃபேக்டரியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த பெண்கள் தங்கள் உரிமைகளுக்காகப் போராடினாங்க. இரண்டு வருஷம் கழிச்சு தொழிலாளர் அமைப்பையும் அவங்க உருவாக்கினாங்க. இந்த அமைப்புக்கு நல்ல வரவேற்பு கிடைக்க, 1908ம் ஆண்டு மார்ச் எட்டாம் தேதி, பதினைந்தாயிரம் பெண்கள் நியூயார்க்கில் மெகா பேரணி நடத்தினாங்க. பிப்ரவரி மாசம் கடைசி ஞாயிறு தேசிய பெண்கள் தினமா அறிவிக்கப்பட்டது. அதுக்கப்புறம் பல்வேறு தேதிகளுக்கு மாறி, மார்ச் எட்டாம் தேதியையே சர்வதேச மகளிர் தினமா ஐ.நா. அறிவிச்சது.

❒ ரூ. 100/- பரிசு பெறுபவர்:
ஏ.ஜி.கலியாணசுந்தரம்,
'சரவணா இல்லம்',
மணியக்காரன்பாளையம்,
கோவை - 641 006

• ரூ. 50/- பரிசு பெறுபவர்:
கே. சண்முகம்,
ஜெயசித்ரா ஸ்டோர்ஸ் மளிகை,
ஆதமங்கலம் புதூர் - 606 901.

● என். பாலகிருஷ்ணன், மதுரை.

*? சமீபத்தில் உங்களை வியக்க வைத்த செய்தி?*

! எட்டாம் வகுப்பு படிக்கும் மகேஷ் என்ற நெல்லை மாண

வனுக்கு திடீர்த் திருமணம் செய்து வைத்த அறநிலையத் துறையின் சாதனைதான்!

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்.

*? தர்மம் இருப்பதால்தான் அ.தி.மு.கவுக்கு வெற்றி கிடைக்கிறது என்று ஜெயலலிதா குறிப்பிடுகிறாரே?*

! நிஜம்தான்! வாட்ச், குடம், புடைவை, கிரிக்கெட் மட்டை என்று தர்மம் நிறையவே இருந்தது தெரிஞ்சதுதானே?

● ஏ.ஜி. கல்யாணசுந்தரம்,
மணியக்காரன்பாளையம். ❒

*? அரசு பல ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டும் வறுமைக் கோட்டிற்குக் கீழ் கோடிக்கணக்கானவர்கள் வாழ்வதற்கு என்ன காரணம்...?*

! திட்டமிடுவதில் உள்ள அடிப்படைத் தவறுதான் காரணம். இருக்கிற வரிப் பணத்தை இது இதற்கெல்லாம் செலவழிப்போம் என்று ஒதுக்கீடு செய்கிறார்கள். மாறாக, மக்கள் சக்தியைக் கணித்து, அவர்கள் ஆற்றலை, உழைப்பை, முழுமையாகப் பயன்படுத்தத் திட்டமிட்டு, அதற்குரிய விதத்தில் நிதி ஒதுக்கீடு செய்தல் வேண்டும். ஜனத்தொகையில் பெரும் பகுதி கிராமப்புறங்களில் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

● தி. மகராசன், கடமலைக்குண்டு.

*? 'ஈராக் மீது போர் தொடுத்தால் அமெரிக்காவில் நிலவும் பொருளாதார மந்தம் சீரடையும்' என்று புஷ்ஷின் ஆலோசகர்கள் கூறியிருப்பது பற்றி...?*

! தொலைநோக்கற்ற, தவறான, சுயநலப் பேச்சு.

● மைக்கேல் சாமுவேல், மும்பை - 19.

*? இந்தியாவுக்கு வரும் அயல் நாட்டுத் தலைவர்கள் அனைவரும் சோனியா காந்தியையும் சந்திக்கிறார்களே ஏன்?*

! ஜனநாயகம் என்பது எதிர்க்கட்சியையும் உள்ளடக்கியதே. எதிர்க்கட்சித் தலைவருக்கு அவ்வளவு முக்கியத்துவம் உண்டு. எதிர்க்கட்சி எத்தனை ஆக்க பூர்வமாகச் செயல்பட வேண்டும் என்பதையும் இது உணர்த்துகிறது.

● கு. அருணாசலம்,
தென்காசி.

*? நமது முன்னாள் கிரிக்கெட் வீரர்கள், வர்ணனையாளர்களாகச் செல்வதில்தான் முனைப்பு காட்டுகிறார்களே தவிர, அம்பயராகச் செல்வதில்லையே, ஏன்?*

! அதற்கு ரொம்பப் படித்து, பரீட்சை எழுதி



• அவசிய விஜயம்!



• தர்மத் தலைவி!

## தேர்தல்களில் வாக்காளர்கள் ஜெயிக்கும் காலம் வருமா?

பாஸ் பண்ணணும் சுவாமி!

● சேலம் செல்வக்குமார், காங்கேயம்.

? அன்று பெண்களின் உரிமைக்குப் பாடு பட்டவர்களில் ஆண்கள்தான் அதிகம். இன்று, பெண்களுக்கு எதிரான குற்றங் களில் ஆண்கள் அதிகம் இருக்கக் காரணம் என்ன...?

! இன்றுபோல் அன்றும் பெண்களுக்கு எதிரான குற்றங்கள் இழைக்கப்பட்டுதான் வந்தன. மீடியா முழக்கம் இன்று அவற்றைப் பரவலாக வெளிக் கொணர்வதுடன் பெண் களே வெளிப்படுத்தவும் தயாராகியிருக் கிறார்கள்.

● இரா. உமா மகேசுவரி, விருதுநகர்.

? தார்மீகம் என்றால் என்ன...?

! ஜெயலலிதாவிடம் கேளுங்கள். இன்று அவர்தான் அதிகமாக தர்மம் குறித்து காலட்சேபம் பண்ணுகிறார்!

● வசந்தா காந்த், கருப்பம்புலம்.

? சாத்தான்குளம் தேர்தல் குறித்து இளங்கோவன் கோர்ட்டுக்குப் போகிறா ராமே? ஏதாவது அனுகூலம் கிடைக் குமா?

! இங்கே நீதி கிடைப்பதற்குள் அடுத்த தேர்தல் வந்துவிடுமய்யா!

● மல்லிகை மன்னன், மதுரை.

? விதிமுறைகளை மீறியதற்காகக் கண்டனம் தெரிவித்த பிறகும், சில அரசியல் தலைவர்கள் வெட்கப்படுவதோ வேதனைப்படுவதோ இல்லை. இது வருத்தம் தரும் விஷயம்' என்று தேர்தல் கமிஷனர் நம் புரட்சித் தலைவிக் குக் கொடுத்திருக்கும் சாட்டையடி எப் படி...?

! யாருக்கும் வலிக்காமல், ரொம்பக் கால தாமதமாகக் கொடுக்கப்பட்ட சாட்டையடி. தேர்தல் கமிஷனின் செயல்திறன் இன் மைக்கு ஒப்புதல் வாக்குமூலம்.

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

? திருச்சி, புத்தூர் குழுமாயி அம்மன் கோவில் விழாவில் அருளாளியிடம் அரசு சார்பில் திருச்சி தாசில்தார் சடகோபன், நிர்வாக அதிகாரி சம்பத் குமார் ஆகியோர் ஆடு வழங்கியது சரியா?

! இறைவழிபாட்டின்போது உயிர்ப்பலி யிடுதல் கிரிமினல் குற்றம். இதில் அரசு அதிகாரிகளே ஈடுபடுவது 'டபுள்' குற்றம். அதை போலீஸார் கண்டுகொள்ளாமல் இருந்தால் டிரிபிள் குற்றம்!




# வெற்றித் திருமகன்
# அப்துல் கலாம்

**(வாழ்க்கை வரலாறு) நெல்லை சு. முத்து எழுதியது.**

சாதாரண ஏழைக் குடிமகனாகப் பிறந்து சின்னஞ்சிறு வயதிலேயே கல்வி அதிகம் கற்று உயர்ந்து, சாதனைகள் புரிய வேண்டும், நாட்டின் உயர்வுக்கு தன்னால் இயன்றதைச் செய்ய வேண்டும் என்று கனவுகளை வளர்த்துக் கொண்டவர் அப்துல் கலாம்.

தம் உழைப்பாலும் திறமையாலும் இன்று இந்தியாவின் முதல் குடிமகனாகும் தகுதியைப் பெற்றிருக்கும் வெற்றித் திருமகன் அப்துல் கலாம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றை, இளைஞர்களுக்கும் பெரியவர்களுக்கும் பயன் தரக்கூடிய விதத்தில் திரு. நெல்லை சு. முத்து சுவாரசியமாக எழுதியிருக்கிறார். ஊக்கமும் உற்சாகமும் அறிவியல் நாட்டமும் கொண்ட இளைஞர்கள் சிலர், ஆசிரியரிடம் கேட்கும் கேள்விகளுக்கு ஆசிரியர் சொல்லும் பதில்களின் மூலம் டாக்டர் கலாம் அவர்களின் வரலாற்று உண்மைகளைத் தெரிந்து கொள்ளும் விதத்தில் நூல் அமைந்திருக்கிறது.

வாழ்வில் உயர வேண்டும்; சாதனைகள் புரிய வேண்டும்; வெற்றி பெற வேண்டும் என்று உள் உந்துதலுடன் உழைப்பவர்களுக்கு ஊக்கமும் நம்பிக்கையும் அளிக்கக் கூடியது வெற்றித் திருமகன் அப்துல் கலாம் வாழ்க்கை வரலாறு.

**224** பக்கங்கள் (50 படங்களுடன்)

விலை: ரூ.70/- தபால் செலவு தனி வி.பி.பி.யில் பெற கடிதம் எழுதவும்

## வானதி பதிப்பகம்



23, (ப. எண்:13), தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை - 600 017.
தொலைபேசி எண்: 24 342 810

---

**கல்கி வாசகர்களுக்கு ஒரு பரிசு**

அமரர் **கல்கி** எழுதிய **'பொன்னியின் செல்வன்'**

*மகத்தான வரலாற்றுப் புதினத்தின் அழியா கதாபாத்திரங்களான*

வந்தியத்தேவன், இளையபிராட்டி, அருள்மொழிவர்மர், வானவன்மாதேவி,
போன்ற அமர கதைப் பாத்திரங்களை நீங்கள் சந்திக்கும் வகையில்

**கலைமாமணி விக்கிரமன்** எழுதிய

# நந்திபுரத்து நாயகி

மூன்று பாகங்கள் 1200 பக்கங்கள் ஓவியர் மணியம் மேலட்டையுடன்

விலை ரூ. 280. சலுகை விலையில் ரூ. 200க்கு வழங்கப்படுகிறது.
விக்கிரமன் பவழ விழாவை முன்னிட்டு இந்தச் சலுகை வழங்கப்படுகிறது.

**15.4.2003 வரையே இந்தச் சலுகை**

*ரூ. 200/- மணியார்டர் அல்லது டிராப்ட் அனுப்பவும். வெளியூர் காசோலை என்றால் ரூ. 20/- சேர்த்து அனுப்பவும்.*

*விக்கிரமன் பவழ விழா 30.3.2003 அன்று சென்னை ஆனந்த் திரையரங்கில் காலை 9.00 மணி முதல் நடைபெறுகிறது. விழா அரங்கிலும் வாங்கிக் கொள்ளலாம்.*



**இலக்கியபீடம்**

*விக்கிரமன் பதிப்பகம், 3, ஜெய்சங்கர் தெரு,*
*மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.*

'நியாயஸ்தான்' என்று ஒரு நாடு. அங்கே நீதிபதிகள் லஞ்சம் வாங்குகிறார்கள் என்று குற்றச்சாட்டு எழுகிறது. அதைத் தொடர்ந்து அந்நாட்டு பாராளுமன்றம் சில சட்டங்களைக் கொண்டு வருகிறது. அதன்படி சுப்ரீம் கோர்ட் சில நீதிபதிகளை இடமாற்றம் செய்கிறது. நீதிபதிகளை இடமாற்றம் செய்வதற்குரிய வழக்கமான விதிமுறைகள் கடைபிடிக்கப்படவில்லை என்கிற விமர்சனம் எழுகிறது. வக்கீல்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடுகிறார்கள். வக்கீல்கள் வேலை நிறுத்தம் நியாயமற்றது. என்று பாதிக்கப்பட்ட இருவானர் பொது ஜனம் கோர்ட்டுக்குப் போகிறார். இப்படியே சங்கிலியாய்த் தொடர்கிறது ஊழல் பிரச்னை.

'எங்கே இருக்கிறது நியாயஸ்தான்?' என்று குழம்ப வேண்டாம். அது ஒரு கற்பனை தேசம். மேலே சொன்ன சம்பவங்களும் கற்பனையே. ஆனால் இந்த விஷயம் குறித்து, பல்வேறு சட்ட நுணுக்கங்களையும் அலசி ஆராய்ந்து, வாதிட வேண்டும்.

இதில் வேடிக்கை என்னவென்றால், வாதி அல்லது பிரதிவாதி தரப்பில் வாதிடாமல், இருதரப்பினரது வாதங்களையும் ஒருவரே முன்வைத்து வாதிட வேண்டும்.

இதென்ன கலாட்டா?

சட்டம் பயிலும் மாணவர்களுக்காக நடத்தப்படும் 'மூட் கோர்ட்' (Moot Court) எனப்படும் மாதிரி நீதிமன்றத்தில்தான் இப்படி ஒரு நியாயஸ்தான் தேசத்து வழக்கைக் கொடுத்து, வாதம் புரியச் சொன்னார்கள்.

ஹைதராபாத் நல்சார் துணை பல்கலைக் கழகத்தில் வாதத் திறமைக்கான இந்தப் போட்டியில் கோப்பையைத் தட்டிக் கொண்டு வந்திருக்கிறார்கள், சென்னை சட்டக் கல்லூரி மாணவிகளான பவித்ராவும், அர்ச்சனாவும்.

"இந்தப் போட்டியில் கலந்து கொள்வதற்கு ஒரு மாத காலம் அவகாசம் தரப்பட்டது. கொடுக்கப்பட்ட சம்பவம் அரசியலமைப்புச் சட்டம் சம்பந்தப்பட்டது என்பதால், அரசியலமைப்புச் சட்டம் குறித்து, ஆழமாகப் படித்தோம். எங்கள் கல்லூரிப் பேராசிரியர்கள், நூலகம், மூத்த வக்கீல்கள் என்று பலரையும் கலந்து ஆலோசனை செய்து, இந்த வழக்கின் பல்வேறு சட்ட நுணுக்க அம்சங்களையும் புரிந்து கொண்டோம். வாதப் பிரதிவாதங்களை முதலில் எழுத்து வடிவில் சமர்ப்பித்த பிறகு, நேரடி விவாதப் போட்டி நடைபெறும். இதற்கு நடுவராக உயர் நீதிமன்ற நீதிபதிகள், அட்டர்னி ஜெனரல் போன்று மிக உயர்ந்த அரசுப் பொறுப்பில் பணியாற்றிய சட்ட நிபுணர்கள் ஆகியோர்தான் இருப்பார்கள் என்பதால், நம்மைவிட சட்ட அறிவிலும், அனுபவத்திலும் மூத்தவர்களான அவர்கள் திருப்தியடையும் விதமாக நமது வாதங்கள் இருக்க வேண்டும். இடையில் நிறுத்தி, ஏதாவது விளக்கம் கேட்டால், அதற்குத் தக்கபடி பதில் சொல்லத் தெரிய வேண்டும். சட்ட அறிவு, வாதத் திறமை என பலவிதமான அளவு கோல்களின் அடிப்படையில், யாருக்குக் கோப்பை

# "ஊழல் தேசமா? ஊதி விடுவோம்... ஊதி!"


* அர்ச்சனா


* பவித்ரா

என்பது முடிவு செய்யப்படும்" என்றார்கள்.

வாதத் திறமைக்கான கோப்பையை விடுங்க. பேச்சுப் போட்டி, ஓவியம், வார்த்தை விளையாட்டு என்று ஏராளமான போட்டிகளில் ஜெயித்து, நிறைய கோப்பைகளை, கை கொள்ளாமல் அள்ளிக் கொண்டு வந்திருக்கிறது. பவித்ரா - அர்ச்சனா ஜோடி.

"இதற்குமுன், பூனா, மும்பையில் நடந்த மூட் கோர்ட் போட்டிகளில் பங்கெடுத்துப் பரிசுகளை வென்றிருந்தாலும், தேசிய அளவில் வெற்றி பெற்று, அமெரிக்காவுக்கு அனுப்பப்பட்ட அனுபவம் மறக்க முடியாதது. அமெரிக்காவில் ஃப்புளோரிடாவில் நடைபெற்ற



பவித்ராவின் அப்பாவுக்கும் வக்கீல் தொழில்தான். ஆனாலும் பள்ளிப் படிப்பை முடித்து விட்டு, ஸ்டெல்லாவில் ஃபைன் ஆர்ட்ஸ் பட்டப்படிப்பில் சேர்ந்து விட்டார். அதை முடித்தபின் சட்டம்மீது ஆர்வம் ஏற்படவே, சட்டக் கல்லூரியில் சேர்ந்து விட்டாராம்.

பவித்ராவுக்கு ஜூனியர் அர்ச்சனா. அர்ச்சனாவின் தாத்தா ஓய்வு பெற்ற நீதிபதி. அண்ணன் வக்கீல். படிக்கிற போது, மூட் கோர்ட் போட்டிகளில் பங்கேற்று, கோப்பைகள் பல வென்ற அண்ணன்தான் அர்ச்சனாவுக்கு இன்ஸ்பிரேஷன்.

அர்ச்சனாவுக்கு ஹாபி பரதநாட்டியமும், டேபிள் டென்னிஸும். பவித்ராவுக்கு ஓவியம் தீட்டுதல். கல்லூரி நாட்களில், என்.சி.சி.யில் சேர்ந்து, தேசிய விருது பெற்றிருக்கிறார்கள்.

அதெல்லாம் சரி பவித்ரா, அர்ச்சனா! நியாயஸ்தான் கோர்ட்டில் வாதம் புரிந்தீர்களே. தீர்ப்பு என்ன சொன்னார்கள்?

"மாதிரி கோர்ட்தானே அது? அதற்கு சட்டபூர்வ அங்கீகாரம் ஏதுமில்லை! எனவே, வாதங்கள்தான் நடக்கும். எங்கள் அணியின் வாதம்தான் சிறந்தது என்று முடிவாகி, கோப்பையைத் தந்துவிட்டார்கள்."

ரொம்ப நியாயம்தான் போங்கள்!

அகில உலக அளவிலான போட்டியில், முன்னேறிய நாடுகள், வளரும் நாடுகளுக்கு இடையிலே நிலவும் சட்ட சிக்கல்கள் சம்பந்தப்பட்ட ஒரு சூழ்நிலை தரப்பட்டது. நம் ஊர் பாரம்பரிய வேம்பின் காப்பு உரிமையை மேல்நாட்டு நிறுவனம் பெற்றது போன்றதொரு சிக்கல் அது! அதில் கால் இறுதிவரை ஜெயித்ததே ஒரு திரில்லிங்கான அனுபவம்" என்று சந்தோஷமாய்ச் சொல்கிறார்கள் இருவரும்.

சந்திப்பு : **எஸ்.சந்திரமௌலி**

அட்டை, படங்கள் : **டிஜிட்டல் சண்முகம்**

| | | | |
|---|---|---|---|
| 15. Dictionary of Quotations *with Tamil Translation* | 406 | 40.00 | **24.00** |
| 16. Dictionary of Idioms & Phrases *with Tamil Translation* | 522 | 80.00 | **50.00** |
| 17. Letter Writing தமிழ் மொழிபெயர்ப்புடன் | 458 | 60.00 | **32.00** |
| 18. தமிழ் - தமிழ் அகராதி | 908 | 100.00 | **60.00** |
| 19. சுக்கிர நீதி | 456 | 70.00 | **40.00** |

## கையடக்கப்பதிப்பு

| | | | |
|---|---|---|---|
| 1. நாலடியார்- மூலமும் தெளிவுரையும் | 176 | 10.00 | **6.00** |
| 2. சிலப்பதிகாரம்- மூலமும் தெளிவுரையும் | 500 | 45.00 | **35.00** |
| 3. மணிமேகலை- மூலமும் தெளிவுரையும் | 437 | 45.00 | **35.00** |
| 4. நாமக்கல் கவிஞர் பாடல்கள் | 528 | 60.00 | **30.00** |
| 5. திருக்குறள்-நாமக்கல் கவிஞர் உரையுடன் | 284 | 20.00 | **10.00** |
| 6. பொய்மான் கரடு - கல்கி<br>7. கள்வனின் காதலி - கல்கி<br>8. மகுடபதி - கல்கி<br>9. தியாகபூமி - கல்கி | 1001 | 130.00 | **78.00** |
| 10. நாயன்மார் வரலாறு- திரு.வி.க. | 334 | 40.00 | **28.00** |
| 11. மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் திரு.வி.க. | 480 | 45.00 | **30.00** |
| 12. வாழ்விக்க வந்த காந்தி தமிழில் : ஜெயகாந்தன் | 272 | 40.00 | **25.00** |

★ *நேரில் பெற :* எமது புதிய விற்பனை நிலையத்தில் சலுகை விலையினை ரொக்கமாகச் செலுத்தி நூல்களை உடனே பெறலாம். நேரம் : காலை 10.00 மணி முதல் இரவு 8.00 மணிவரை இடைவேளையின்றி.

★ *தபாலில் பெற :* கடிதம் மூலம் தொடர்பு கொள்க. விபரம் தெரிவிக்கின்றோம்.

**புதிய விற்பனை நிலையம்**

## வர்த்தமானன் பதிப்பகம்

40, சரோஜினி தெரு, தி.நகர், சென்னை -17. (உஸ்மான்ரோடு- கீதாஞ்சலி ஹோட்டல் அருகில்)

**இச்சலுகை 31.3.2003 அல்லது ஸ்டாக் உள்ள வரை மட்டுமே !**

பலன் தரும் பண்ணை நிலம் - பழத்தோட்டம் - சொந்தமாக வாங்குதல் - செய்தி

# "கல்கி வார இதழ்கள் 5 ஆண்டுகளுக்கு அன்பளிப்பு"

வாலாஜாபாத் அருகே (காஞ்சிபுரம் செல்லும் வழி) பாலாற்றங்கரையில் ஆசூர் கிராமத்தில் முன்பு அறிவித்த திட்டத்தின்படி ஏற்றுமதித் தரம் வாய்ந்த மாங்கன்றுகள் ஏற்கெனவே நடப்பட்டு பராமரிக்கப் பட்டு வருகின்றன. பலர் அந்த நிலங்களை வாங்கியுள்ளனர்.

புதிய திட்டத்தின்படி 1200 ச. அடி உள்ள பண்ணை நிலங்கள் ரூபாய் 24,000/- மட்டுமே.

உங்கள் வாழ்நாள் முழுமையும், பிறகும் உங்கள் குடும்பத்திற்கு ஆண்டுக்கு ஒரு முறை கணிசமான வருமானம் கிடைக்கும். முழு தொகையும் மொத்தமாக கொடுப்பவர்களுக்கு சலுகை விலையில் ரூ.21,000 மட்டுமே.

உடனே எங்கள் செலவில் பத்திரம் பதிவு செய்து தரப்படும். விலை கொடுத்து வாங்கிய நிலம் உங்களுடையதாகி விடுகிறது.

அந்த நிலத்தை கட்டாந்தரையாக விடாமல் நல்ல வருவாய் தரும் மாங்கன்றுகளை நட்டு, உங்களுக்குக் கவலையில்லாமல் நாங்களே பராமரித்துத் தருகிறோம்.

5 ஆண்டுகளுக்குப் பிறகு மாங்கனிகள் விற்பனை மூலம் கிடைக்கும் வருவாய் வாழ்நாள் முழுமையும் உங்களுக்குத்தானே.

5 அல்லது 6 ஆண்டுகளில் சுவையான மாங்கனிகள் உள்நாட்டில் வெளிநாட்டில் விற்பனை மூலம் ஆண்டிற் கொருமுறை நல்ல வருமானம் ஈட்டலாம்.

விருட்ஷ சாஸ்திர மேதை ஸ்வாமி, திரு. கண்ணன் பட்டாச்சார்யா அவர்கள் திட்டத்தினைத் தொடங்கி வைக்கிறார்கள்.

ரூ.24,000 மொத்தமாகக் கொடுக்க முடியாதவர்களுக்கு மாதம் ரூபாய் 600 வீதம் 40 மாதாந்தர தவணைகளில் செலுத்தும் தவணைமுறைத் திட்டமும் உண்டு.

இந்த புதிய திட்டத்தின்படி பண்ணை நிலங்கள் வாங்கும் அனைவருக்கும் ஐந்து ஆண்டுகளுக்கு வைரவிழா கண்ட 'கல்கி' வார இதழ்கள் அன்பளிப்பாக அனுப்பப்படும்.

மேலும் அமுத சுரபி விக்ரமன் ஆசிரியராக இருந்து அவர்களால் வெளியிடப்படும். 'இலக்கியப்பீடம்' எனும் உயர்தர மாத இதழ் ஐந்து ஆண்டுகளுக்கு அன்பளிப்பாக அனுப்பப்படும்.



மேலும் விவரங்களுக்கு,

**மணி விக்கிரமன்,**

**அன்னை ஆர்ச்சர்ட்ஸ் (பி.) லிட்,**

3, ஜெய சங்கர் தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.

தொலைபேசி : 24812822 மொபைல் : 31022 646 E-mail : manivikraman@yahoo.com

## ஐயோ பாவம், சென்னைவாசி!

'தமிழகத்தில் நிதி நெருக்கடி நிலை பிரகடனம் செய்யுமாறு மத்திய அரசுக்குச் சிபாரிசு செய்ய வேண்டியதுதான்!' என்று கடுமையாக விமர்சித்திருக்கிறார் சென்னை உயர்நீதிமன்ற தலைமை நீதிபதி சுபாஷன் ரெட்டி. போதிய அளவில் நீதிமன்ற ஊழியர்களை நியமிக்காததற்காகவும் நீதிமன்றங்களின் அடிப்படைத் தேவைகளை அபிவிருத்தி செய்ய, போதிய அளவில் நிதி ஒதுக்கீடு செய்யாததற்காகவும் தமிழக அரசைக் கண்டனம் செய்திருக்கிறார்.

இதே நேரத்தில் தமிழக அரசு மாவட்டத்துக்கு மாவட்டம் புதிய நலப் பணிகளையும் திட்டங்களையும் அறிவித்து முதல்வரின் ஆளுயரப் படத்துடன் நாளிதழ்களில் முழுப் பக்க விளம்பரம் செய்து வருகிறது. 'கஜானா காலி' என்று ஆட்சியைத் தொடங்கி, ஆள் குறைப்பு, போனஸ் குறைப்பு என்று சகட்டு மேனிக்கு அறிவித்த தமிழக முதல்வரும் இத்திட்டங்களைத் துவக்கி வைக்கச் சூறாவளிச் சுற்றுப் பயணம் செய்வதுடன் தமது சாதனைகளையும் எதிர்க்கட்சியினர் தமக்குத் தரும் 'ரோதனை'களையும் மக்களிடம் விவரிக்க அந்த விழா மேடைகளைப் பயன்படுத்தி வருகிறார். விழாக்களுக்கும் முதல்வர் பயணத்துக்கும் செய்யப்படும் ஆடம்பரச் செலவுகளுக்கு அளவேயில்லை.

இந்த அரசியல் நாடகம் ஒரு பக்கம் நடந்த வண்ணம் இருக்க, இன்னொரு பக்கம் சென்னை மாநகராட்சியின் பட்ஜெட் வெளியிடப்பட்டி



# கல்கி



2003 மார்ச் 23
சித்ரபானு பங்குனி 9
மலர் : 61
இதழ் : 34




ருக்கிறது. அதில் பல அம்சங்கள் முற்றிலும் நடைமுறைக்கு உதவாத வீண் செலவினங்கள் என்பது கவனத்துக்குரிய விஷயம்.

சாலைகள் சீரமைப்புக்கு 99 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது! 95 கோடிக்கும் அதிகமான தொகை இரண்டாவது ஆண்டாகத் தொடர்ந்து அறிவிக்கப்பட்டிருப்பதாகப் பெருமை கொள்கிறார்கள்.

கடந்த ஆண்டு ஒதுக்கப்பட்ட தொகை முழுதும் செலவழிக்கப்பட்டிருப்பதற்காகத் தங்களைத் தாங்களே தட்டியும் கொடுத்துக் கொள்கிறார்கள்! ஆனால், சென்னைச் சாலைகளில் பயணம் செய்வோருக்குத் தெரியும், அவை எந்த லட்சணத்தில் சீர்செய்யப்பட்டுப் பராமரிக்கப்பட்டு வருகின்றன என்பது!

கடந்த பருவ மழையின்போது சாலைகளில் தேங்கி நின்ற நீர், மழை நீர் வெளியேற்றுக் கால்வாய்களின் லட்சணத்தைப் பறைசாற்றின. இவ்வாண்டு, மழைநீர்க் கால்வாய்களைப் பராமரிக்க கூடுதல்தொகை ஒதுக்கப்பட்டிருப்பதை வரவேற்கலாம். ஆனால், அத்தொகை நேர்மையாகப் பயன்படுத்தப்படுமா? சாலைகள் சீரமைக்கப்படுமுன் இப் பராமரிப்புப் பணி நடைபெற்று முடியுமா? இல்லாவிட்டால் மழை நீர் கால்வாய் பராமரிப்பு என்ற பெயரில் சாலை ஓரங்கள் மீண்டும் தோண்டப் பட்டு விபத்துக்களின் நிலைக் களனாகிவிடாதா?

மாநகராட்சியின் இது நாள் வரையிலான செயல்பாடுகளைப் பார்க்கும்போது இவைபோன்ற ஏராளமான சந்தேகக் கேள்விகள் எழுகின்றன.

எல்லாவற்றிலும் முக்கியமான வினா இவ்வளவு செலவுகளுக்கும் வருமானம் எங்கிருந்து வரப்போகிறது என்பதுதான்.

அது பற்றிய யதார்த்த நோக்கே இன்றி உபரி பட்ஜெட்டாகப் போடப்பட்டிருக்கிறது.

'இதுநாள் வரை இப்படி உபரி பட்ஜெட் போடப்பட்டதில்லை. இது ஏமாற்று பட்ஜெட்' என்று எதிர்க்கட்சிகள் குற்றம் சாட்டுவதில் அர்த்தம் இருக்கிறது.

சொத்து வரி மூலம் 240 கோடி ரூபாய் வசூலிக்கப் போவதாக பட்ஜெட்டில் கணக்கு கூறப்




பட்டிருக்கிறது. இது நடைமுறை சாத்தியமற்ற மிகையான எதிர்பார்ப்பு என்று எதிர்க்கட்சியினர் வர்ணிப்பதில் நியாயம் இருக்கிறது. இந்த இலக்கு பூர்த்தி செய்யப்படுமானால் அது மக்களை வதைப்பதாகத்தான் இருக்கும்.

போதாக்குறைக்கு, இந்த வரியை வசூலிப்பதற்காக செயற்கைக்கோள் உதவியுடன் நகரின் கட்டட வரைபடம் எடுக்கப்படும் என்றும் அதற்கு ஆறுகோடி செலவாகும் என்றும் தெரிவிக்கிறது பட்ஜெட்!

மாநகராட்சி அனுமதியோடு கட்டப்படும் கட்டட விவரங்கள் யாவுமே கம்ப்யூட்டர் மயமான ஆவணங்களாக்கப்பட்ட பிறகு, மீண்டுமொரு 'மேப்பிங்' முயற்சிக்கு அவசியமென்ன? யார் காட்டில் மழையோ!

கொசு ஒழிப்பு என்பது மாநகராட்சி ஆண்டாண்டு காலமாகச் செய்து வரும் பணி. கொசுக் களின் உற்பத்தி மையமான நீரோட்டமில்லாத கூவம், அடையாறு நதிகளும் சாக்கடைகளும் பக்கிங்ஹாம் கால்வாயும் சுத்தமாக்கப்படும்வரை கொசுத் தொல்லை குறையாது என்பதும் தெரிந்த விஷயமே. இவ்வாறிருக்க, கொசு ஒழிப்புக்கென்று முதல்வர் தலைமையில் உயர் மட்டக்குழு என்பது ஒரு பிரமாதமான ஜோக்!

ஊழல் என்பது நடைமுறையாகவே ஆகிவிட்ட மாநகராட்சியின் செயல்பாடுகளில் அதிர்ச்சி வைத்தியம் நடந்து, ஒரு மாற்றம் புகுத்தப்பட்டாலன்றி உபரி பட்ஜெட்டாலும் செயற்கைக்கோள் வரைபடத்தாலும் புண்ணாக்கு உபயோகமும் இராது.

மாநகராட்சியின் செயல்பாடுகளைச் சீரமைத்து, லஞ்ச - ஊழல் குறைப்புக்கு வழி வகுக்க துணை மேயரும் கமிஷனரும் முனைப்பு காட்டியிருந்தால் வரவேற்றிருக்கலாம் - ஆனால், மோசமான செயல்பாடுக்காக உயர்நீதிமன்றத்தின் கடும் கண்டனத்தைப் பெற்றுக் கொண்ட பின்னரும் துணைமேயரும் கமிஷனரும் துளிக்கூட அசைந்து கொடுக்கவில்லை.

'தலைவி எவ்வழி, தாங்களும் அவ்வழி' என ஜெயலலிதா பாணியில் தடாலடித் திட்டங்களை அறிவித்துத் தள்ளியதோடு திருப்தியடைந்து விட்டார்கள். ஐயோ பாவம், சென்னைவாசி! ○

'வீடு, மனை, மகிழ்ச்சி' இலவச இணைப்பு மட்டுமல்ல, இலவச இனிப்பும்கூட!
திருவாரூர், ஆர்.வாணி

வீட்டு மொழி, ஜோக்ஸ் - சட்டதிட்ட ஆலோசனைகள் - சமையலறை ஐடியா அறுசுவை கொண்ட அருமையான இணைப்புக்கு ஒரு டிஸ்டிங்ஷன் போட்டேன் மகிழ்ச்சியோடு!
நெல்லை, ஆர்.ஜி.அம்பிகைராமன்

சமீப காலமாக தாங்கள் பி.ஜே.பி. எது செய்தாலும் வன்மையாக எதிர்ப்பதுபோல் தெரிகிறது. அரசியல் கட்சிகளின் முக்கிய நோக்கம் வோட்டு வங்கி. அதற்காக எந்த எல்லைக்கும் போவார்கள். ஆனால், என் போன்ற கல்கி வாசகர்கள் தங்களிடம் எதிர்பார்ப்பது - எந்தக் கட்சி அரசாட்சி செய்

# புரட்டவிடாமல் புரட்டியது!

தாலும் நல்லவை நடந்தால், மனதாரப் பாராட்டுங்கள். தப்பு நடந்தால், துணிந்து தட்டிக் கேளுங்கள். யோசனைகளையும் ஆணித்தரமாக அளியுங்கள். பத்திரிகைப் பணி சிறக்கும்.
மதுரை, பாலு

"வரலாறு காணாத வெற்றி" என்கிறார் முதல்வர்! நீங்க, 'வரலாறு காணாத சதி' என்று சொன்னால், எப்படி? இடைத் தேர்தல்களில் ஆளுங்கட்சி ஜெயிப்பது ஒன்றும் வானத்தை வில்லாகவும், மணலைக் கயிறாகவும் திரிக்கும் வித்தை அல்லவே! என்ன செய்ய? தேர்தல் கமிஷனை, யார் தட்டிக் கேட்பது?"
திருச்சி, இ.முகம்மது ஹசன்

(வட்ட) மேஜையை இவ்வளவு முன்னுக்கு இழுத்துப் போடுவீர்கள் என நினைத்துக் கூடப் பார்க்கவில்லை. எங்கள் நெஞ்சங்களுக்கு 'கல்கி' தரும் மதிப்பே தனி.
திருநெல்வேலி, எஸ்.சுந்தர்

அசத்தலான அட்டையில் மெய்மறந்தேன். பக்கங்களைப் புரட்ட மனமில்லாமல் எங்கள் மனங்களைப் புரட்டி எடுத்து விட்டது.
திருவாரூர், எஸ்.பாலச்சந்தர்

'மகளிர் தின ஸ்பெஷல்' சொல்லாமலே ஜொலித்தது. எதிர்நீச்சல் கட்டுரைகள் அனைத்தும் ஏ-ஒன்!
மயிலாடுதுறை, வேலவன்

பட்டை தீட்டிய வைரமாக ஜொலித்து வரும் அபிமான கல்கி இதழ்களில் நான் முதலில் பார்த்து ரசிப்பது 'சிவகாமியின் சபதம்' தொடருக்கான ஒப்பற்ற ஓவியங்கள் தான். பத்மவாசனின் கைவண்ணம் (கறுப்பு -வெள்ளை கூட) மீண்டும் மீண்டும் ரசிக்க வைக்கிறது. அன்னை கற்பகத்தின் அருள் கூடி அவரது கலைப்பணி மேலும் அங்கீகாரமும் ஆதரவும் பெற வேண்டுகிறேன்.
சென்னை, ஆர்.ஸ்ரீதரன்

உமா மகேஸ்வரி பேட்டி படித்தேன். அதில் 'பிற நீர் மாக்களின் அறிய ஆயிடைப் பெய்நீர் போலும் உணர்விற்றென்ப" என்ற தொல்காப்பிய நூற்பாவுக்குத் தவறான பொருள் சொல்லப்பட்டிருக்கிறது. புதுக் கலத்துப் பெய்த நீர் பொசிந்து காட்டுதல் போலத் தலைவன் தன் தலைவியின் உணர்வினைக் குறிப்பால் உணர்வான் என்பதே பொருள். புதுப் பானையில் நீர் ஊற்றினால், வியர்வை போல நீர் வெளியே தெரியும். அதைப்போல காதலியின் மன விருப்பங்களை, சில குறிப்புக்களால் கொண்டவன் அறிவானாம். தன் ஆசையை பெண் புலப்படுத்தவே கூடாது என்று நம் இலக்கியங்கள் சொல்லவில்லை. பெண் குறிப்பால் புலப்படுத்துவதும், ஆண் புரிந்து கொள்வதும் அலாதி சுகம் தருபவை.
சென்னை, ஞா.மேகலா






- செந்தில் முருகன், நெல்லூரர்.

''என்னங்க... நம்ம மந்திரி வீட்டில் கிரிக்கெட் மாட்ச் கணக்கா 47 நாட் அவுட்'ன்னு போர்டு வச்சிருக்கு?''

''அதுவா... பதவியில் தொடர்ந்து '47 நாட்கள்' இருந்திருக்கிறாராம்.''

- நாமக்கல் பாலு

# 47... நாட் அவுட்!




''என்ன சித்திரகுப்தரே, நமது கிங்கரர்கள் இப்போதெல்லாம் காலையில் ரன்னிங் பிராக்டிஸ் செய்கிறார்கள்?''

''பூலோகத்தில் நான்கைந்து பைனான்ஸ் முதலாளிகள் உயிரை எடுக்க வேண்டியுள்ளதே எமதர்மரே!''



''கஜானா காலியான விஷயத்தை மூடி மறைத்திருக்க வேண்டும் மந்திரியாரே...''

''ஏன் மன்னா?''

''என்னைப் புகழ்ந்து பாட புலவர்கள் யாருமே அரண்மனைக்கு வருவதில்லை!''

- வி. சகிதா முருகன்



# இனி எல்லாமே ஈஸிதான்!

**இண்டர்வியூக்குப் போனா இங்கிலீஷ்,**
**ஈ-மெயில் அனுப்பணும்னா இங்கிலீஷ்,**
**கம்ப்யூட்டர் கத்துக்கணும்னா இங்கிலீஷ்,**
**கணவருடன் பார்ட்டிக்குப் போனா இங்கிலீஷ்,**
**பசங்க படிக்கற ஸ்கூலுக்குப் போனா இங்கிலீஷ்,**
**எங்கே போனாலும் இங்கிலீஷ்.. இங்கிலீஷ்.. இங்கிலீஷ்!**

என்ன... மற்றவர்கள் இங்கிலீஷில் பேசுவதை உங்களால் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் உங்களால் சகஜமாக இங்கிலீஷில் பேச முடியவில்லை. ஏதாவது தவறாகப் பேசிவிடுவோமோ என்று தயக்கமாக இருக்கிறது!

**இதுதானே உங்க ப்ராப்ளம்? NO PROBLEM!**

உங்களது ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டால் போதும்!



**ஸ்பீச் ஜெனரேட்டிங் ஃபார்முலா SGF™** அடிப்படையில் நாங்கள் அமைத்துள்ள ஓர் எளிய பயிற்சியின் மூலம் நீங்கள் சுலபமாக இங்கிலீஷ் பேசக் கற்றுக் கொள்ளலாம்.

கடந்த **22** ஆண்டுகளில் **15** லட்சத்திற்கும் மேற்பட்டவர்கள் எங்களது **ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸின்** மூலம் பயனடைந்துள்ளனர்.

வீட்டிலிருந்தபடியே, ஓய்வு நேரத்தில் தினசரி அரைமணி நேரம் செலவிட்டு எங்களது பாடங்களைப் பிராக்டிஸ் செய்தால் போதும். **தயக்கமின்றி இங்கிலீஷ் பேச உங்களால் முடியும்.**

கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து இன்றே அனுப்புங்கள். பாடங்களை V.P.P. மூலம் உங்களுக்கு அனுப்பி வைக்கிறோம். தபால்காரரிடம் **ரூ.395/-** செலுத்திப் பெற்றுக் கொள்ளவும்.

கோர்ஸ் பாடங்களை தினசரி அரைமணி நேரம் பிராக்டிஸ் செய்து, மடமடவென இங்கிலீஷில் பேச ஆரம்பியுங்கள்.

**இதோ கூப்பன்**

நானும் **விவேகானந்தாவின் ஸ்போக்கன் இங்கிலீஷ் டிரெயினிங் கோர்ஸில்** சேர விரும்புகிறேன். எனக்குப் பாடங்களை V.P.P. மூலம் அனுப்புங்கள். தபால்காரரிடம் **ரூ.395/-** செலுத்திப் பெற்றுக் கொள்கிறேன்.

பெயர் : ..............................................................

முகவரி : ..............................................................

..............................................................

..............................................பின்கோடு..............................

**VIVEKANANDA INSTITUTE**



EKL

9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை - 600 017.

**விவேகானந்தாவின்**
**ஸ்போக்கன் இங்கிலீஷ்**
**டிரெயினிங் கோர்ஸ்**
**இனி தடையேதுமில்லை**
**இங்கிலீஷ் பேச...**

02 / TAM / 03 / NAGA

கண்ணிமைக்கும் நேரத்தில் நடந்து விட்டது அந்த விபத்து. லால் தர்வாஜா முனையில், குறுக்கே வந்த சிறுவனைத் தவிர்ப்பதற்காக ஆட்டோ ரிக்ஷாவை ஒரேயடியாக ஓட்டுனர் வளைத்திருக்க வேண்டும். அப்படியே குடை சாய்ந்தது ஆட்டோ.

மோட்டார் பைக்கைச் சட்டென்று ஓரமாக நிறுத்திவிட்டு, கூட இருந்த இரண்டு பேரின் உதவியுடன் உள்ளே இருந்த பெண்ணை மேலே தூக்கி விட்டு விட்டு, ஓட்டுனரையும் இழுத்தான் நாராயணன். நல்ல வேளையாக, பெரிதாக அடியோ, எலும்பு முறிவோ, இல்லை. முழங்காலிலும், கையிலும் நிறைய சிராய்ப்புக்கள். அருகில் இருக்கும் பதரா கோயிலில் பூஜை செய்துவிட்டுத் திரும்புகிறவன்போல, கையில் சிறிதாக ஒரு பூக் கூடை.

"டீக் ஹை ஆப்?" என்று கேட்டான் நாராயணன்.

"ஹாங்."

''எங்கே போய்க் கொண்டிருக் கிறீர்கள்?"

"நவ்ராங்புராவுக்கு. என் வீடு அங்கே தான் இருக்கிறது."

ஆட்டோ ஓட்டுனர் வண்டியைச் சுற்றி வந்து ஒரு பார்வை பார்த்துவிட்டு, வலது முனையில் மட்டும் நசுங்கியிருந்த பகுதியைத் தட்டிப் பார்த்துவிட்டு, "பைட்டியே" என்றார்.

''உட்கார்ந்து கொள்ளுங்கள். வண்டிக்கும் சேதம் அதிகம் இல்லை'', என்று நாராயணன் சொல்லிவிட்டு ஓரமாக வைத்திருந்த பைக்கை உதைத்தான்.

"தாங்க்ஸ்" என்றாள் அவள்.

நாராயணனின் செவியில் அந்த நன்றி பாய்ந்து, அவனிடமிருந்து ஒரு புன்னகை பதிலாக வெளிப்பட்டபோது ஆட்டோ புறப்பட்டுவிட்டது. வெளிர் நீலத்தில் அவள் கட்டியிருந்த புடைவையின் நுனி காற்றில் படபடத்தது.

நாராயணனுக்கு இத்தாலியன் பேக்கரியில் ரொட்டி வாங்க வேண்டியிருந்தது. ஆமதாபாத்வாசியான மறு நாளில் இருந்தே, ரொட்டி காலைக் காப்பியுடன் சேர்ந்து கொண்டுவிட்டது.



சர்தார் பட்டேல் காலனி வழியாகப் போய், ரெயில்வே கிராசிங்கைத் தாண்டி, இடப்புறம் திரும்பி, தனது ஹவுசிங் சொசைட்டியை அடையும் வரை, அந்த ஆட்டோவின் ஆபத்தான திருப்பமும், அது கவிழ்ந்த காட்சியும், உள்ளேயிருந்து மெலிதாக வெளியே நீட்டப்பட்ட சந்தன நிறக் கரங்களும் நினைவில் வந்து கொண்டே இருந்தன.

# சித்தார்த்

வன்முறையின் வெறியாட்டமும் ஓலமும் ஒரு வழியாக ஓய்ந்து போய், கான்பூர், ஜமால்பூர் பகுதிகளில் இப்போது



அமைதி தெரிந்தது. ஆனால் வெளிப்படையான புன்னகைகள் அவரவர் உதட்டோடு உறைந்து போயிருந்தன. ரணம் ஆறிக் கொண்டிருந்தது உண்மை. ஆனால் அது காய்வதற்கு முன் யாரும் மறுபடி கீறிவிட்டு விடக் கூடாதே என்ற அச்சம், பலரிடம் பிரார்த்தனை போலவே வெளிப்பட்டுக் காற்றோடு கலந்திருந்தது.

"பஸ், மஜாமா. தமே கேம் சோ?" (நான் நலம்தான். தங்கள் நலன் எப்படி?) என்றான் நாராயணன் சரளமாக.

"பரவாயில்லையே, குஜராத்தி நன்றாகப் பேசுகிறீர்களே?"

"தமிழனால் எதுவும் முடியும்!" என்றான் நாராயணன். "ஆமாம், நீங்கள் இங்கே டான்ஸ் கற்றுக் கொள்ளுகிறீர்களா என்ன?"

"ஏன், கற்றுக் கொள்ளக் கூடாதா?"

"ஓ.கே. ஆனால் பரத நாட்டியம்...?"

"ஒய் நாட்? ஒரு குஜராத்தி பரத நாட்டியம் கற்றுக் கொள்ளக் கூடாதா என்ன? என் சிநேகிதிகள் நிறையப் பேர் இங்கே கற்றுக் கொள்கிறார்கள்."

"எப்படிப் போகப் போகிறீர்கள் வீட்டுக்கு? ஆட்டோவிலா?"

"ஆமாம். ஆனால் அன்றைக்கு மாதிரி கவிழாது என்று நினைக்கிறேன். பத்திரமாகப் போய்ச் சேர்ந்துவிடுவேன். கவலைப் படாதீர்கள்!"

"அதற்கில்லை. இன்னும் மூன்றே மூன்று டாக்டர்களைப் பார்த்து விட்டால் என்னுடைய கால்ஸ் முடிந்துவிடும். அதற்குக் கொஞ்ச நேரம் ஆகும்.



# காதலைத் தாண்டி

உஸ்மான்புராவில் 'தர்ப்பணா' அகடமி அருகே நாராயணன் நெருங்கியபோது, சில பெண்கள் அதன் வாயிலருகே சிரித்தபடி வந்து கொண்டிருப்பதைப் பார்த்து, வண்டியின் வேகத்தைக் குறைத்தான்.

அதற்குக் காரணம் இருந்தது.

அந்த வெளிர் நீலப் புடைவைக்காரியும் அவர்களில் ஒருத்தி. ஆனால் அன்று அவள் உடுத்தியிருந்தது ஆழமான நீல வண்ணம்.

அவனைக் கவனித்து விட்டு அவளே அவன் அருகில் வந்தாள். "கேம் சோ?" (நலமா?) என்றாள் குஜராத்தியில்.

இல்லை என்றால் இந்த கவாஸாகியிலேயே உங்களைக் கொண்டு போய் வீட்டில் சேர்த்துவிடுவேன்."

"நோ, தாங்க்ஸ். மறுபடி சந்திப்போம்."

"அதற்காக இன்னொரு முறை ஆட்டோ கவிழும் வரை காத்திருக்க வேண்டுமா நான்?"

அவள் சிரித்தபோது நாராயணனும் புன்னகைத்தான்.

"நாளை கன்காரியா லேக் பக்கம் மாலையில் வருவேன். ஞாயிற்றுக் கிழமைதானே,

வருகிறாயா?"

"நா பாபா!"

"அட, நான் என்ன நள் சரோவருக்கா கூப்பிட்டேன்? இதோ இருக்கிறது. கன் காரியா ஏரி..."

"டான்ஸ் கிளாஸ் முடிகிற போதே ஆறு மணி ஆகிவிடும். அப்புறம் அவ்வளவு தூரம் வந்துவிட்டு வீடு திரும்ப நேரம் ஆகிவிடும்."

'வீட்டில் உண்மையைச் சொல்லிவிட்டு வர வேண்டும். அதற்கு தைரியம் இல்லையா என்ன? குஜராத்திகளுக்கு இப்போதெல்லாம் தைரியம் என்ன, ஆவேசமே வந்துவிட்டதே!"

"தைரியத்தைச் சோதிக்கும்போது ஆவேசம் வராதா என்ன? ஓகே, ஓகே. நாளை மாலை இங்கேயே டான்ஸ் கிளாஸ் முடிந்து காத்திருக்கிறேன்."

"குட்!" என்றான் நாராயணன்.

தேர்தல் கோஷங்களும், ரத யாத்திரைகளும் உணர்ச்சிகளை உசுப்பிவிட்டு, ஆவேசத்தையும் புழுதி போலக் கிளப்பின. ஆளும் கட்சியின் அதிரடி பிரசாரம் ஒரு சாராரை உசுப்பியும், இன்னொரு சாராரை வாயடைத்துப் போகும் வகையிலும் சூட்டைக் கிளப்பிக் கொண்டிருந்தது.

நகரில் அங்கங்கே நடந்த கலவரமும் துப்பாக்கிச் சூடும் வேண்டிய அளவுக்கு அலுப்பையும் வெறுப்பையும் மூட்டியிருந்த நிலையில், தொடர்ந்து இரண்டு மாதங்கள் போல ஓர் உள் நாட்டுப் போரே இரண்டு சமூகங்களுக்கு இடையே நிகழ்ந்து ஓய்ந்திருந்தது.

'அவரவர் மதம் அவரவர் மனசோடு இருந்துவிட்டுப் போக வேண்டியதுதானே? எதற்கு இப்படி அரசியலோடு அதைப் பிணைத்து மாய்ந்து மாய்ந்து அடித்துக் குதறி, ஒருவர் மீது ஒருவர் தீப்பந்தம் வீசி அழிந்து

"தலைவருக்குத் தொலைநோக்குப் பார்வை அதிகம்னு சொல்றியே எப்படி?"

"ஏழெட்டு தலைமுறை கஷ்டப்படக் கூடாதுன்னு இப்பவே சொத்து சேர்த்துட்டாரே!"

- தஞ்சை தாமு



போக வேண்டும்?' என்று குமுறினான் நாராயணன். ஆளும் கட்சி, பகையை இத்தனை வளர்த்திருக்க வேண்டாம் என்று அவனுக்குத் தோன்றிற்று.

'தர்ப்பணா' வாசலில் அவள் நின்று கொண்டிருந்தாள்.

"பார்த்தாயா, இரண்டு முறை சந்தித்தாயிற்று. உன் பெயரைக் கேட்கவே இல்லையே?"

"பிரேர்ணா. பிரேர்ணா ஷா." அவள் பில்லியனில் அமர்ந்தாள்.

"நான் நாராயணன். நேற்றே சொல்லியிருக்க வேண்டும்."

"நேற்று சொல்லியிருந்தாலும் இன்று சொன்னாலும் ஒரே பெயர் தானே? இல்லை வேறு வேறா?" என்று சிரித்தாள் பிரேர்ணா.

கன்காரியா லேக் அருகே அமர்ந்து கொண்டு பேசியதில் நேரம் போனது தெரியவில்லை.

"எப்படி இருந்த குஜராத்தி சமூகம்! அமைதியாக, தான் உண்டு தன் பிஸினஸ் உண்டு என்று இருந்தவர்கள், எப்படி இப்படி மாறிப் போனார்கள்?" என்றான் நாராயணன்.

"ஓ, ஒரு காலத்தில் அமைதியாக இருந்தார்கள் என்பதற்காக வாழ்நாள் பூராவும் அப்படியே இருந்துவிட வேண்டுமா என்ன?" என்று பிரேர்ணா கேட்டபோது வியப்பாக இருந்தது. "சரி. நமக்கு எதற்கு அரசியல் எல்லாம்? வேறு ஏதாவது பேசுவோம்." என்றாள்.

புறப்படும்போது நன்றாக இருட்டியிருந்தது. ஆனால் விளக்கொளியில் பிரேர்ணாவின் முகத்திலிருந்து எதையும் ஊகிக்க முடியவில்லை.

நவ்ரங்புரா தபால் நிலையம் வந்தபோதே பிரேர்ணா இறங்கிக் கொண்டாள்.

"வீட்டிலேயே விட்டுவிடுகிறேனே?" என்றான் நாராயணன்.

"நோ, தாங்க்ஸ். இங்கே பக்கத்தில் ஒரு சிநேகிதியைப் பார்த்துவிட்டு, உடனே வீட்டுக்குப் போய் விடுவேன். ஸீயூ!"

"உன் தகப்பனார் பெயர் என்ன? என்ன செய்கிறார்?"

நாராயணனின் கேள்வி அவள் காதில் விழாதது போலத் தோன்றிற்று. அவள் ஒரு புன்னகையுடன் நகர்ந்தபோது, நாராயணன் பைக்கைக் கிளப்பினான்.

தேர்தல் முடிந்து முடிவுகள் வெளியாகி ஒரே பரபரப்பு. நகரின் மூலை முடுக்கெல்

லாம் அரசியல் சுவாசம்தான். செய்தித் தாள்கள் எல்லாம் வென்றவர்களின் பட்டியலைப் படங்களுடன் வெளியிட்டிருந்தன. யார் யார் எத்தனை வோட்டு வித்தியாசத்தில் வென்றார்கள் என்று பத்தி பத்தியாக விவரங்கள்.

'டைம்ஸ்' மூன்றாம் பக்கத்தில், யார் யார் அமைச்சர் ஆவார்கள் என்று ஒரு தனிக் கதை.

எங்கே போனாலும், யாரைப் பார்த்தாலும் அரசியல் பேசினார்கள். மார்பைத் தட்டிக் கொண்டார்கள்.

வெறுப்பாக வந்தது நாராயணனுக்கு. இரவு ரிலீஃப் ரோட்டில் டாக்டர்களைப் பார்க்க வேண்டிய 'கால்ஸ்' எல்லாம் மளமளவென்று முடிந்தன.

"லீவ் த சாம்பிள்ஸ் நாராயண். வில் டாக் டு யூ நெக்ஸ்ட் டைம்" என்றார்கள் டாக்டர்கள் கூட.

டீ.வி.யில் குஜராத்தி மொழியில் செய்திகள் சொல்லப்பட்டபோது, அசிரத்தையாக 'ரிமோட்'டை அழுத்தவிருந்த நாராயணனின் கண்களில், நவ்ரங்புராவில் திலீப் ஷா எம்.எல்.ஏ. நிச்சயம் அமைச்சர் ஆவார் என்று செய்தியை வாசிப்பவர் கூறிக் கொண்டிருக்கும்போதே, அவர் வீட்டு ஹால், வரவேற்பறை, அவர் மனைவி... அப்புறம்... அப்புறம்... மை காட், பிரேர்ணா ஷா!

கையில் ஒரு தட்டு. அதில் ஓர் அட்டைப் பெட்டி நிறைய லட்டு. அம்மாவின் வாயில் ஒன்றைத் திணிக்கிறாள். அமைச்சராகப் போகும் அப்பாவின் வாயில் ஒன்று...

பட்டென்று ரிமோட்டை அழுத்தி, டீ.வி.யை அணைத்தான்.

பிரேர்ணா, ஆளும்கட்சியில் அங்கம் வகிக்கிற ஒரு பெரிய புள்ளியின் பெண்! ஒரு வேளை படாடோபத்தை வெறுக்கும் பெண்ணாக இருக்கலாம். ஆனால் அப்பா பெயர் கேட்டபோது, காதில் விழாதது போல் நகர்ந்தாளே?

அவனுக்குக் கொஞ்ச நேரத்துக்கு ஒன்றும் புரியவில்லை. ஆனால் சிறிது நேரத்தில் அப்படியே உறங்கிப் போனான்.

**ம**று நாள் காலை, 'டைம்ஸி'ல் திலீப் ஷா பெயர் அமைச்சர் பட்டியலில் இருந்தது. அவர் படமும் இருந்தது. பக்கத்து ஃப்ளாட்டில் இருந்தவரிடமிருந்து 'குஜராத் சமாசார்' நாளிதழை வாங்கிப் பார்த்தான். முதல் நாள் டீ.வி.யில் கண்ட அதே காட்சி, படமாக வெளியாகி இருந்தது. அப்பாவுக்கு லட்டு வழங்கிக் கொண்டிருந்தாள் மகள் பிரேர்ணா ஷா.

முதல் சந்திப்பை ஒரு விபத்து உருவாக்கிக் கொடுத்திருந்தது. அந்தச் சந்திப்பே ஒரு விபத்துதானோ என்று இப்போது அவனுக்குத் தோன்றிற்று. அவனுடைய தினசரி வாழ்க்கையில் அரசியல் இம்மியளவும் புகுந்துவிடவில்லை. இனி எப்போதும் புகத் தேவையில்லை. அதிலும் வெறுப்பில் பிறந்த வெற்றி அவன் மனசை உறுத்திக் கொண்டே இருந்தது. அரசியல் என்றால் அப்படி எல்லாம்தான் இருக்கும் போல...

'எந்த மாநிலத்தில் சமூக வாழ்க்கை சாதாரணமாக இருக்கிறது? காஷ்மீரில், மணிப்பூரில், பஞ்சாபில், உத்தரப் பிரதேசத்தில், மத்தியப் பிரதேசத்தில்... எங்கேதான் தனி மனித வாழ்க்கை அரசியல் கலப்பு இன்றி இயல்பாக இருக்கிறது?' என்று அடுத்த முறை சந்தித்தால் ஒரு வேளை பிரேர்ணா வாதாடலாம். அவள் அன்று பேசியதே கூட அவனுக்கு ஒரு வகையில் உறுத்தலாக இருந்தது. முரணான போக்குகள் கொண்ட இருவர், தம்மிடையே எழும் நட்பையோ, காதலையோ கடைசி வரை போற்றிக் காப்பது நடைமுறை சாத்தியம் அல்ல என்ற உண்மை உறைத்தது.

பிரேர்ணாவின் நட்பு... அல்லது காதல் ஒரு சின்னப் பூங்காற்றுப் போல் இடையே வீசி விட்டு மறைந்து போனது மாதிரி தோன்றிற்று. அவன் பின்னணி என்ன என்று எதுவும் அறிந்து கொள்ளாமலே, பிரேர்ணாவிடம் தன் தொலைபேசி எண்ணைக் கொடுத்தது தவறோ என்று யோசிக்க வைத்தது.

**இ**னி பிரேர்ணாவைச் சந்திக்கப் போவதில்லை என்று நாராயணன் தீர்மானித்த போது, டெலிபோன் மணி அடித்தது. ●

"நடிகை நளினாஸ்ரீ ரொம்ப வித்தியாச மானவங்கதான்."

"எப்படி?"

"விவாகரத்து நல்லபடியா முடிய ம்னு திருப்பதி கோவில்ல போய் சாமி கும்பிட்டிருக் காங்களே!"

- சீர்காழி வி.ரேவதி





# ராமர் கட்டிய பாலமா?



• சோம. ராமசாமி

அமெரிக்க விண்வெளி ஆய்வு நிறுவனமான நாசா செயற்கைக் கோள் படம் மூலம், தனுஷ் கோடிக்கும், தலைமன்னாருக்கும் (இலங்கை) இடையே ஒரு பாலத்தை (Adam's bridge) கண்டுபிடித்துள்ளதாக சமீபத்தில் இந்திய நாளேடுகள் சிலவற்றில் செய்திகள் வெளியாகின. மேலும் இப்பூமிப் பாலத்தை பதினேழு லட்சம் ஆண்டுகளுக்கு முன்பாக ராமர் கட்டியதாகவும் அந்நாளேட்டுக் குறிப்புகள் கட்டிக் காட்டின. அது சம்பந்தமான படங்கள் தங்களது செயற்கைக் கோள்களில் ஒன்றின் மூலம் பிடிக்கப்பட்டவை தான் என்றும், ஆனால் இப்பூமிப் பாலத்தை கட்டியது ராமர்தானா, என்பது பற்றி தெரியாது என்றும் கூறியது நாசா.

இந்நிலையில், திருச்சி பாரதிதாசன் பல்கலைக் கழக தொலையுணர்வு மைய இயக்குனர் முனைவர் சோம. ராமசாமி மற்றும் அவரது ஆய்வுக் குழுவினர், இப் பாலம் குறித்து தீவிர ஆய்வு மேற்கொண்டனர். நாசாவிலிருந்து பெறப்பட்ட செயற்கைக் கோள் படம் மட்டுமல்லாது, இந்தியத் தொலையுணர்வு செயற்கைக் கோள்களில் இருந்து பெறப்பட்ட படங்களும் அவர்களது ஆராய்ச்சிக்குத் துணை நின்றன.

''ராமநாதபுரத்திற்கும் பாம்பனுக்கும் இடையில் காணப்படும் மூக்கு வடிவிலான நீண்ட மணல் மேடுகள், இதன் இருபுறமும் எதிரெதிர் திசையில் சுழன்ற வண்ணமிருக்கும் கடல் நீரோட்டத்தால் (coastal currents) உருவாக்கப்பட்டவை. இதற்கு வடக்கே இந்நீரோட்டம் கடிகாரச் சுற்றுக்கு எதிர் திசையிலும், தெற்கே கடிகாரச் சுற்றுத் திசையிலும் சுழல்வதால், இந்நீரோட்டங்களுக் கிடையே அமைந்துள்ள நீரோட்ட அழுத்தத் தாழ்வு மண்டலத்தில் இந் நீரோட்டத்தாலும் நதிகளாலும் கொண்டு வரப்பட்ட மணல்கள் இம்மூக்கு போன்ற நீண்ட மணல்மேடுகளை உருவாக்கின. இதே நீரோட்ட தாழ்வு நிலை ராமேஸ்வரம் மற்றும் தலைமன்னார் வரை நீடிப்பதால், நீளமான மணல்மேடுகள் மேற்கே தனுஷ்கோடியிலிருந்து கிழக்கே தலைமன்னார் வரையிலும் உருவாயின. இதுவே ஆதாம் பாலம் (Adam's bridge) எனக் குறிப்பிடப்படுகிறது.

மேலும் கடல் உச்சிப்புளிக்கு மேற்கே சுமார் நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு நிலை கொண்டிருந்ததால், இப் பாலத்தின் வயது பதினேழு லட்சம் ஆண்டுகள் என இருக்க முடியுமா என்பதில் சந்தேகம் எழுந்துள்ளது. ராமாயணம் நிகழ்ந்ததாகக் கருதப்படும் காலமும், அக் காவியத்தை இயற்றிய வால்மீகி வாழ்ந்த காலமும் இதுவரை சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. எனவே இந்த ஆதாம் பாலம் குறித்தான விபரங்களைக் கண்டறிய நிலவியல், வரலாறு மற்றும் தொல்லியல் வல்லுநர்கள் ஒரு கூட்டு முயற்சியாக ஆய்வு மேற்கொண்டால், ஆதாம் பாலம் பற்றிய உண்மைகள் தெளிவாகும்!'' எனக் கூறுகிறார் முனைவர் சோம. ராமசாமி.

— இருள்நீக்கியான்

# புக் பேங்க்













### மனசுக்குள் வரலாமா? - க. அபிராமி

நம்பிக்கை, முயற்சி, தெளிந்த அறிவு. இவை மட்டுமல்லாது பாரதி சொன்ன 'ரௌத்திரம் பழகு' என்பதும் தனி மனித வாழ்வின் முன்னேற்றத்திற்கு எப்படி உதவக்கூடும் என்பதைப் பல நடைமுறை உதாரணங்களோடு விளக்கும் நூல்.

**தமிழ்ப் புத்தகாலயம், ஜி3/8, மாசிலாமணி தெரு, தி.நகர், சென்னை - 17 விலை ரூ.35/-**

### பெண் படைப்பாளர்களின் புதினங்களில் பெண்ணியப் பார்வை - முனைவர் கோ. சரோஜா

நிர்வாகம், பத்திரிகையுலகம், இல்லறம் என மூன்று துறைகளிலிருக்கும் ஆறு பெண் எழுத்தாளர்களின், 31 புதினங்களில் உள்ள பெண்ணியச் சிந்தனைகளையும் பார்வைகளையும் ஆய்வு செய்யும் நூல். சங்க காலம் தொட்டு தற்கால இலக்கியம் வரை பெண்ணியம் என்பது எத்தனை மாற்றங்களுக்குள்ளாகி வந்துள்ளது என்பதைப் புரிய வைக்கிறது.

**ஸ்ரீசக்கரம் வெளியீடு, பிளாட் 5, 20, தனலட்சுமி அபார்ட்மெண்ட்ஸ், முதல் அவென்யு, அசோக் நகர், சென்னை - 600 083. விலை ரூ.55/-**

### வார்த்தைகள் கேட்ட வரம் - ஈரோடு தமிழன்பன்

கவியரங்க மேடைகளில் செவிகளுக்கு இனித்தவை. மீண்டும் சுவைக்கப் புத்தகமாய்ப் புறப்பட்டவை. சமுதாயப் பித்தருக்கும், அரசியல் எத்தருக்கும் அதிர்ச்சி தரக் கூடியவை, நலிந்தோர்க்கும் மெலிந்தோர்க்கும் நலம் விளையப்பாடியவை. கனலும் புனலும் ஒருங்கே வீசும் கவிதைகள்.

**விழிகள் பதிப்பகம், 8 (எம்.139), 7வது குறுக்குத் தெரு, திருவள்ளுவர் நகர், திருவான்மியூர் விரிவு, சென்னை - 600 041. விலை ரூ.115/-**

### ஐ.ஏ.எஸ். களஞ்சியம் - ஜ. சுசில்குமார்

இந்திய ஆட்சிப் பணித் தேர்வு எழுதுவதற்குரிய விதிமுறைகள், பாடத் திட்டங்கள் மற்றும் பல்வேறு வினாத்தாள்களின் விவரங்கள், என உயர்ந்த பட்சத் தேர்வுக்கான அனைத்து விவரங்களும் தமிழில் கூறப்பட்டுள்ளன.

**அனுராதா ஏஜென்ஸீஸ், விணயல் கருப்பூர், கும்பகோணம் ஆர்.எம்.எஸ் - 612 605. விலை ரூ.75/-**

### குழந்தைகள் ஊருக்குப் போய்விட்டன - மு. முருகேஷ்

இயல்பானதாகத் தெரிந்தாலும் இரண்டாம் முறை படிக்கும்போது இன்னுமொரு பொருள் புரியும் கவிதைகள்; 'வெயிலினும் மழையினிது' - போல. உள்ளேயிருக்கும் மனிதனை, ரசனையை அடையாளம் காட்டுகிற தொகுப்பு.

**மதி நிலையம், 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 600 017 விலை ரூ.25/-**

### பூமியைத் திறக்கும் பொன்சாவி - கவிஞாயிறு தாராபாரதி

பொருட்செறிவோடு வார்த்தைகளில் விளையாடும் கவியரங்கக் கவிதைகளின் தொகுப்பு. மரபையும், கொள்கையையும் மானுட நேயத்தில் ஒட்ட வைத்து அரங்குகளில் பொழிந்தவை. மறையாத மனித நேயத்தைப் பற்றி மறைந்த கவிஞர் வரைந்தவை. மண்ணையும் மனத்தையும் நிறைப்பவை.

**இலக்கிய வீதி, ஏ59/15, ஐந்தாம் தெரு, பெரியார் நகர், சென்னை - 600 082. விலை ரூ.40/-**

தனியாக உளற பிடிக்கும்
தமிழோடு திண்ற பிடிக்கும்
தூங்காமல் நீ ஏங்கிடும்
நேரங்களில் தேங்க பிடிக்கும்
மடியோடு சரிய பிடிக்கும்
மனதோடு விரிய பிடிக்கும்
நீங்காமல் தோள் சாய்ந்திடும்
போர்வைகளின் தீங்கு பிடிக்கும்

வாசனைகளால் நிறைந்து வழிகிறது பூமிக் கோப்பை. தண்ணீரைப் போல தாகத்தையும், மதுவைப் போல போதையையும், இந்த வாசனை கொண்டு வருகிறது.

மோனமாய் இருக்க ஒட்டா
மோனமன்று; ஆகவேதான்
தேன் என ருசிக்கும் அன்பால்
சிந்தை நைந்து உருகும் வண்ணம்
வான் என நிறைந்தான் அந்த
மாகடல் வளைவது இன்றே

தாயுமானவர், தேன் என ருசிக்கும் அன்பால் சிந்தை நைந்து உருகும் வாசனை ஆத்ம அறிவை கண்டடையும் வழி என்கிறார். மோகத்தளையை நீக்கியவனுக்கு பிறவி நோயான பிறத்தல் இறத்தல் இல்லாது போகும். ஆத்மாவும் ஜீவனும் ஒன்றே என

# காதல் பிசாசே! 21

மனிதனின் செயல்களை வாசனை என்கிறார் ஆதிசங்கரர். செயல்களின் வாசனைகளைக் காதலென்கிறது காலம்.

வாசனையற்று எதுவுமில்லை. உறவுகளின் வாசனை தாயின் புடைவையாகவும், பாசத்தின் வாசனை குழந்தையின் பால் வாசனையாகவும் அறிகிறோம்.

இரத்தத்தின் வாசனை வன்முறையாகவும், பூக்களின் வாசனை அமைதியாகவும், கருதுகிறோம். ஈச்சங்காட்டின் புளிப்பு வாசனையாலும் இஞ்சி மரப்பாக்கள் கார வாசனையாலும் உருவானவை.

குமரிப் பெண்ணின் உடம்பு வாசனையும் கொல்லையில் வைத்த துளசி வாசனையும் கிறங்கடிப்பவை. இரண்டு திசைகளில் வாசனை வீசும். ஒன்று இயற்கையானது. மற்றது செயற்கையானது.

இயற்கையென்பது தானாக உருவாவது. செயற்கையென்பது தயாரிக்கப்படுவது. இயற்கையான வாசனை அலங்காரமற்றது. செயற்கையான வாசனை அலங்காரத்துக்கானது.

நான் என நிற்கும் ஞானம்
ஞானமன்று, அந்த ஞானம்

**யுகபாரதி**

அறிந்தால் பிறவிச்சுழல் வராது. விவேகமாகிய பகுத்தறிவினால், பெறும் ஆத்ம தரிசனத்தால், மறைக்கும் சக்தி நீக்கப்பட்டு பொய் உணர்வு போய் விடும். துக்கத்தில் இருந்து விடுதலை கிடைக்கும் என்கிறது சங்கரரின் விவேக சூடாமணி.

வாசனை என்றதும் நம்மில் பலருக்குப் பூவே நினைவுக்கு வரும். சிலருக்கு ஊதுபத்தி. சிலருக்கு சாம்பிராணி. வேறு சிலருக்கு வேறு வேறு. ஒருவருக்கு வாசனையாகப்படுவது மற்றவருக்கு வாசனையற்றதாகப் போகலாம். பசிக்கும் வயிற்றுக்குத் தாளிக்கும் வாசனையும் பக்தியுள்ளவனுக்குத் திருநீறு வாசனையும் அமைதி தருபவை.

இயற்கையான வாசனை கூடல். செயற்கையான வாசனை ஊடல். இரண்டு வாசனையாலும் லாபமே எனினும், அதன் அளவும் தன்மையும் கவனிக்க வேண்டியது கட்டாயம். கூந்தல் வாசத்தை சோதிக்க விளைந்தது பெரிய புராணம். இதய வாசத்தை நேசிக்க அலைந்தது மனித வாகனம். கதிரடித்த நெல்லின் வாசனையும் கரிசக்காட்டு மண் வாசனையும் மனதைப் பிசைந்து பொம்மை செய்கிறது. அந்த பொம்மை ஆணாகவோ பெண்ணாகவோ உருவாக, அதில் காதல் சாயம் பூசப்படுகிறது.



சாயம் நிலையற்றதுதான், எனினும் பூசிவிட்ட சில நாள் களில் அல்லது சில மாதங்களில் அது அதன் சாரமாகி விடுகிறது. சாரமான பிறகு சாயம் கலைவதுமில்லை, கரைவதுமில்லை

*நீயும் நானும்*
*ஒன்றென்றால்*
*எனக்கு மட்டுமேன் வலி?*
*உனக்கும் உண்டு*

*வலியென்றால்*
*எதனால் வந்ததிந்த வலி?*
*நீயும் நானும்*
*வேறென்றால்*
*எனக்கெங்கிருக்கிறது*
*விழி?*

'ஒன்றுமில்லை என்று ஒனறுமில்லை' தொகுப்பில் இலக்குமிகுமாரன் ஞான திர வியம் எழுதிய கவிதையிது. நீயும் நானும் ஒன்றான பிறகு எனக்கு மட்டுமே வலிக் கிறதே, அந்த வலியை நீ உணர்வாயா? என் பதை விட, உனக்கான வலியும் எனக் கானதே என்று உச்சுக்கொட்டும் சுகத்தைத்

தேடுகிறது மனம். வழியற்றுப் போவேனடி நீ வாராத போதென்பான் பாரதி.

இந்த வலியும் வழியும் அன்பால் நிகழ்வது. அன்பு நிகழும்போது அமைதியும் கவிதையும் கலந்து மகிழும். அன்பு எப்படிப் பட்டதாக நிகழ வேண்டும் என்பதை அவ்வையை விட அழகாய்ச் சொன்னவர் யாருமில்லை எனக் கருதுகிறேன்.

அன்பில்லாள் இட்ட அமுது பசியைப் போக்காது. அன்போடு கொடுக்காத நீர் தாகத்தை நீக்காது. வாடி வதங்கி பசியோடு வந்த அவ்வையைப் பார்க்கிறான் அவன். ஏற்கெனவே பெருமாட்டியின் புலமையை ஓரளவு அறிந்தவனாகையில் அவளுக்கு உணவு படைக்க எண்ணுகிறான். எண்ணுகிற வனின் மனைவி அவனுக்கு மாறானவள். விருந்து உபசரிப்பை வெறுக்கிறாள். லாப மற்ற எதையும் செய்யத் துணியாதவள் கணவனைத் திட்டுகிறாள். மீறியும் நிகழ்ந்த விவாதம் முடிகிறது. சமைத்துத் தருகிறாள்.

உணவென்றால் கைப்பக்குவம் மட்டு மல்ல. காய்கள் பதமாகச் சமைக்கப்படுவதால் மட்டுமே ருசிப்பதில்லை. அதில் உப்பைப் போல் அன்பு கலந்திருக்க வேண்டும். உப் பில்லாப் பண்டம் குப்பையிலே என்பது போல, அன்பில்லாப் பண்டமும் குப்பை யைத்தான் சேரும். அவ்வையின் கண்களை அந்த உணவு கூசச் செய்கிறது. கையால் எடுத்துண்ண வெட்கமாயிருக்கிறது. பாடல் பாடி கௌரவம் பெற்ற இந்த வாயால், ஈனச் சோற்றை எப்படி உண்பது?

*காணக்கண் கூசுதே*
*கையெடுக்க நாணுதே*
*மாணொக்க வாய் திறக்க*
*மாட்டாதே - வீணுக்கென்*
*என்பெல்லாம் பற்றி*
*எரிகின்ற தையையோ*
*அன்பில்லாள் இட்ட*
*அமுது*

பெண்ணே பெண்ணை வசைபாடும் இச்செய்யுள் அன்பைச் சொல்கிறது. வழிய வழிய காதலிருந்தாலும் அதை எப்படி பகிர்வது என்பதே முக்கியம். மூர்க்கமாகவும் மூடத்தனமாகவும் கொள்ளுதல் காதலில்லை.

இயற்கையான விருப்பமும், உந்துதலுமே நமது எண்ணம், இச்சை, செயல் ஆகிய வற்றை உருவாக்கும் சக்தியுடையது. ஒவ் வொரு தனிமனிதனுக்கும் அவனுக்கே உரிய வாசனைகள் உண்டு. அவை அவனுடைய தனித்தன்மையை நிர்ணயிக்கிறது. விளங்கிக் கொள்வதெனில், தனி மனிதன் என்பது அவனுடைய வாசனைகளின் தோற்றமே தவிர வேறொன்றுமில்லை. வாசனைகளின் குணத்திலுள்ள வேறுபாடுகளும் பிரிவு களுமே, மனித இனத்தின் வேறுபாடுகளை, வகைவகையான அமைப்புகளை அறிய வைக்கிறது. நம்முடைய வாசனைகள் வழிய வழிய நம்முள் இருக்கும் இறைத் தன்மை விரிந்து புதிய சொரூபத்தைப் பெறுகிறோம். அந்த சொரூபம் காதலின் நெற்றியில் பொட்டாகவோ, காலில் மெட்டியாகவோ மாறிவிடுகிறது.

*பூக்களை நிரப்பிக் கொண்ட*
*கவிதைகள் மனசாட்சியற்றவை*
*எவரேனும் எழுதுங்களேன்*
*தலைகுப்புற வீழ்ந்து*
*மோதிச் சிதறும்*
*மரணத்தின் அழகினை*

பூக்களின் வாசனை நிரப்பிக் கொண்ட கவிதைகளை மனசாட்சியற்றவை என்கிற குரல், கவிஞர் சுகுணா திவாகருடையது. அதிர்ச்சியும் அழுகையும் நிறைந்த அந்த வரிகளை காதலின் கடைசி நேரக் குறிப்பு களாகப் பதிவு செய்து வைக்கலாம்.

கொழுந்து வெற்றிலையின் காம்பு வாசனை யும், கொதிக்கும்போது சோம்பு வாசனை யும் எதைத் தெரிவிக்கிறதோ, அதையே இவ் வரிகளும் தெரிவிக்கின்றன.

ஊதுவத்தி, சாம்பிராணி, மெழுகுத்திரி, கற்பூரம் - இதில் எதுவாக வேண்டுமானா லும் காதலிருக்கலாம். ஒன்றே ஒன்றுதான் தேவை - நிச்சயமாக, அவை வாசனை வீச வேண்டும். வாசனையற்று எதுவுமில்லை பூமி யில். காதலின் வாசனை காதலனுக்குப் புடைவையாகிறது. காதலிக்குப் போர்வை யாகிறது. காதல் நிலையானது. அது, கல் லறைப் பூவிலும் வாசனைதான் வீசுகிறது.

(தொடரும்)

---

''உங்க மாமியாருக்குப் பயப்படும்படி ஒண்ணுமில்லைம்மா...!''

''டாக்டர்... மாமனார்கிட்டே இதைச் சொல்லிடாதீங்க. அவரால அதிர்ச்சியைத் தாங்கிக்க முடியாது!''

- கே.ஜி.எஸ்.





# சிவகாமியின் சபதம்

### நாற்பத்து எட்டாம் அத்தியாயம்

## நாற்சந்தி நடனம்

கடவுள் ஒருவர் இருப்பது உண்மையானால், அவர் கருணாமூர்த்தி என்பதும் உண்மையானால், உலகத்தில் ஏன் இத்தனை துன்பங்களை வைத்திருக்கிறார்? மனித வர்க்கம் ஏன் இத்தனை கஷ்டங்களுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது? – இந்தக் கேள்விகள் ஆதி காலந் தொட்டு கேட்கப்பட்டு வருகின்றன.

உள்ளத்தில் உண்மை ஒளிகொண்ட மகான்கள் மேற்படி கேள்விகளுக்கு விடையும் சொல்லி வந்திருக்கிறார்கள்.

மனிதர்கள் துன்பம் என்று நினைப்பது உண்மையில் துன்பம் அல்ல. சூரியனை மேகம் மூடுவது போல் நமது அறிவை மூடியிருக்கும் மாயை காரணமாகச் சில விஷயங்களைத் துன்பம் என்று நாம் கருதுகிறோம். உண்மையில் துன்பமும் ஒருவித இன்பமேயாகும்.

"அன்பு வடிவாகி நிற்பள்
துன்பமெலாம் அவள்
இழைப்பள்
ஆக்கநீக்கம் யாவும் அவள்
செய்கை - அவள்
ஆனந்தத்தின் எல்லையற்ற
பொய்கை!"

என்று பராசக்தியைக் குறித்து இந்தக் காலத்து மகாகவியான ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடியிருக்கிறார்.

ஆனால், அன்பு வடிவான ஜகன் மாதா - ஆனந்தத்தின் எல்லையற்ற பொய்கையான அன்னை பராசக்தி - ஏன் தன் மக்களுக்குத் துன்பம் இழைக்கிறாள்; ஏன் கஷ்டங்களை அளிக்கிறாள்?

துன்பம் என்றும், கஷ்டம் என்றும் நாம் எண்ணிக் கொள்கிறோமே, தவிர, உண்மையில் அவை துன்பங்களுமல்ல;

**அமரர் கல்கி**

கஷ்டங்களுமல்ல. அறிவுத் தெளிவோடு பார்த்தால், நாம் துன்பம் என்று நினைத்ததும் இன்பந்தான்; கஷ்டம் என்று கருதியதும் சுகந்தான்.

இந்தத் தத்துவத்தை நம்புவது அவ்வளவு சுலபமான காரியமல்ல. "துன்பத்திலே இன்பமாவது, கஷ்டத்திலே சுகமாவது?" என்ற அவநம்பிக்கை உண்டாகத்தான் செய்யும்.

ஆயினும் நமது வாழ்க்கை அநுபவத்திலேயே சில விஷயங்களை ஆலோசித்துப் பார்த்தால் மேற்படி தத்துவத்தில் உண்மை உண்டு என்று அறியலாம்.

சோக ரஸமுள்ள கதைகள், காவியங்களைப் படிக்கிறோம். சோகமயமான நாடகங்களைப் பார்க்கிறோம்; சோகத்தை ஊட்டும் கீதங்களைப் பாடுகிறோம், கேட்கிறோம்.

இப்படியெல்லாம் துன்பத்தை நாமாகத் தானே தேடி அனுபவிக்கிறோம்? எதற்காக? அந்தத் துன்பங்களிலேயெல்லாம் உள்ளுக்குள்ளே இன்பம் பொதிந்திருப்பதனாலேதான்.

நமது வாழ்க்கையில் எத்தனையோ கஷ்டங்களை அனுபவிக்கிறோம். அனுபவிக்கும் போது கஷ்டமாக இருக்கிறது. 'இது சகிக்க முடியாத கஷ்டம்' என்று தோன்றுகிறது. 'இந்த வாழ்க்கையே வேண்டாம்' என்று தீர்மானிக்கிறோம்.

எல்லாக் கஷ்டங்களையும் எப்படியோ சகித்துக் கொள்கிறோம். அப்படி நாம் அனுபவித்த சகிக்க முடியாத கஷ்டங்களைச் சில வருஷ காலம் கழித்து நினைத்துப் பார்க்கும் போது, ஒருவகை அபூர்வ இன்பம் ஏற்படுகிறது. பழைய கஷ்டங்களை நினைத்துப் பார்ப்பதிலும் அவற்றைக் குறித்துப் பேசுவதிலும் சந்தோஷமே அடைகிறோம்.

சீதாதேவி வனவாசத்தின்போது அனுபவித்த துன்பங்களுக்கு எல்லையே யில்லை. அவ்வளவு துன்பங்களைப் பெண்ணாய்ப் பிறந்த யாரும் அனுபவித்திருக்க முடியாது. ஆயினும் அயோத்தி அரண்மனையில் ஸ்ரீ ராமபிரானுடைய பட்டமகிஷியாகச் சீதை வாழ்ந்த காலத்திலும் அதிலும் கர்ப்பம் தரித்திருந்த சமயத்தில், "உனக்கு எதிலாவது ஆசையுண்டா?" என்று ராமன் கேட்டபோது, சீதை என்ன சொன்னாள்? "மறுபடியும் காட்டுக்குப் போய் அங்கே நான் கஷ்டப்பட்ட இடங்களையெல்லாம் பார்க்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது!" என்றாள்.

"துன்பம் என்பது உண்மையில் துன்பம் அல்ல. அவ்விதம் நினைக்கச் செய்வது மாயையின் காரியம். துன்பத்திற்குள்ளேயும் இன்பந்தான் இருக்கிறது!" என்று சொல்லும் வேதாந்த உண்மையை மேற்படி சீதையின் கோரிக்கை நன்கு நிரூபித்திருக்கிறதல்லவா?

சிவகாமியை நாற்சந்தியில் நெருக்கடியான தருணத்தில் நிறுத்திவிட்டு மேற்கண்டவாறு நாம் வேதாந்தம் பேசிக்கொண்டிருப்பது பற்றி வாசகர்களின் மன்னிப்பைக் கோருகிறோம். மேலே சிவகாமியின் காரியத்தை நாம் அறிந்து கொள்வதற்கு மேற்கண்ட பூர்வ பீடிகை அவசியமாயிருக்கிறது.

தமிழகத்து ஸ்திரீ புருஷர்களை சாட்டையடித் துன்பத்திலிருந்து பாதுகாப்பதற்காகத் தளபதி விரூபாக்ஷன் அவளை நாற்சந்தியில் நடனமாடச் சொன்னான். அவ்விதம் செய்வது தெய்வீகமான, பரத நாட்டியக் கலையையே அவமதிப்பதாகும் என்று எண்ணி முதலில் சிவகாமி, "முடியாது!" என்றாள்.

ஆனால், விரூபாக்ஷனின் கட்டளையின் பேரில், 'சுளீர்' என்ற சாட்டையடிச் சப்தம் கேட்டதும் சிவகாமியின் மன உறுதி பறந்து போய்விட்டது.

மறுகணம் வாதாபி நகரின் நாற்சந்தியில் சிவகாமி தேவி நடனம் ஆடத் தொடங்கினாள். அற்புதமாக ஆடினாள்.

துன்பத்திலே இன்பம் உண்டு என்னும் வாழ்க்கைத் தத்துவம் நன்கு விளங்கும்படி ஆனந்தமயமாக ஆடினாள்.

சகிக்க முடியாத கஷ்டத்திலிருந்து எல்லையற்ற ஆனந்தம் பிறக்கும் என்னும்

உண்மை நிதரிசனம் ஆகும்படி ஆடினாள்.

தன்னை மறந்து, வெளி உலகத்தை மறந்து, காலதேச வர்த்தமானங்களை மறந்து ஆடினாள். அந்தக் காட்சி யானது அழகுத் தெய்வம் ஆனந்த வெறிகொண்டு ஆடுவது போலிருந்தது.

வாதாபியின் வீதியில் சிவகாமி நடனம் ஆடிய போது வானமும் பூமியும் அசைவற்று நிற்பது போல் தோன்றியது. வீதியிலே போய்க் கொண்டிருந்த வாதாபி நகர மாந்தர்கள் அப்படி அப்படியே நின்று அந்த விந்தையைப் பார்த்தார்கள்.

பந்தமுற்ற தமிழகத்து ஸ்திரீ புருஷர்கள் அசைவற்று நின்றார்கள்; கையில் சாட்டை பிடித்த கிங்கரர்களும் சும்மா நின்றார்கள். அவர்களுடைய தலைவன் விரூபாக்ஷனும் அசையாமல் நின்றான்.

அனைவரும் பார்த்த கண்கள் பார்த்த வண்ணம், சிற்ப வடிவங்களைப் போல் நின்றார்கள். காலம் போவதே தெரியாமல் மெய்மறந்து உலகத்தை மறந்து நின்றார்கள்.

சூரியன் மலைவாயிலில் விழுந்தது. கோட்டைக் கதவுகள் சாத்துவதற்குரிய அஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது.

சிவகாமியின் நடன பரவசத்துக்கு அதனால் பங்கம் ஏற்பட்டது. ஆட்டம் ஆடுவதை நிறுத்திச் சிவகாமி நின்றாள். அத்தனை நேரமும் ஏதோ ஓர் அதிசய ஆனந்த உலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவள் திடீரென்று பூவுலகத்துக்கு வந்தவளாய்ச் சுற்று முற்றும் பார்த்தாள்.

தான் நின்றிருந்த இடத்தையும் இத்தனை நேரம் செய்த காரியத்தையும் நினைவுக்குக் கொண்டு வந்தாள்.

அவள் உள்ளத்தில் சகிக்க முடியாத வெட்கத்துக்கும் துன்பத்துக்கும் மத்தியில் இன்பமும் பெருமையும் உதித்தன.

கட்டுப்பட்டு நின்ற பல்லவ நாட்டு ஸ்திரீ புருஷர்களைச் சிவகாமி நோக்கினாள். அவர்களுடைய கண்களிலே ததும்பிய நன்றியறிதலைக் கவனித்தாள்.

யாருடனும் ஒரு வார்த்தையும் பேசாமல் பல்லக்கில் போய் ஏறிக் கொண்டாள். பல்லக்கு மாளிகையை அடைந்தது.



கலை உண்டா?" என்று வியந்தார்கள்.

ஊரை விட்டு, உற்றாரை விட்டு, சொந்த நாடு, நகரத்தை விட்டுத் தூர தேசம் வந்திருக்கும் அந்தக் கலைச் செல்வியிடம் அவர்களுக்கு அன்பும் ஆதரவும் பச்சாத்தாபமும் ஏற்பட்டன.

அவர்களில் பலர் சிவகாமியுடன் வார்த்தையாட விரும்பினார்கள். தங்கள் வியப்பையும் மதிப்பையும் அன்பையும் அபிமானத்தையும் வெளியிட விரும்பினார்கள். அவள் வசித்த மாளிகைக்குப் போய் அவளுடன் சிநேகம் செய்து கொள்ள விரும்பினார்கள். தத்தம் வீட்டுக்கு அவளை அழைத்து உபசரிக்கவும் ஆசைப்பட்டார்கள்.

ஆனால், வாதாபி ஜனங்களின் சிநேக மனப்பான்மை சிவகாமியின் உள்ளத்தில் எவ்வித எதிரொலியையும் உண்டாக்கவில்லை.

நடனம் ஆடும்போது ஏற்பட்ட கிளர்ச்சிக்குப் பின்னர் இயற்கையாகத் தோன்றும் சோர்வும் ஏற்கெனவே குடி கொண்டிருந்த மனக்கசப்பும் சேர்ந்து சிவகாமியை அவர்களுடன் முகங் கொடுத்துப் பேச முடியாமற் செய்து வந்தன.

நாளாக ஆக, "அந்தத் தமிழகத்து நடனப் பெண் ரொம்ப கர்வக்காரி!" என்ற செய்தி நகரமெங்கும் பரவிற்று.

ஆரம்பத்தில் ஏற்பட்டிருந்த அபிமானம், அனுதாபம் எல்லாம் வெறுப்பும் பரிகாசமுமாக மாறலாயின. சிவகாமி வரும்போதும் போகும்போதும், ஜனங்கள் அவளைப் பற்றிப் பரிகாசமாகப் பேசுவதும் கேலி செய்து சிரிப்பதும் அதிகமாகி வந்தன.

ஆரம்பத்தில் சிவகாமியின் நடனத்தை "அற்புதம்" என்றும் "தெய்வீகக் கலை" என்றும் சொல்லி வந்த அதே ஜனங்கள் கொஞ்ச நாளைக்கெல்லாம் அதைப் "பைத்தியக்காரியின் கூத்து" என்று சொல்லத் தொடங்கினார்கள்!

சிவகாமி சிவிகையில் போகும்போது சிறுவரும் சிறுமிகளும் ஊளையிட்டுக் கொண்டு பின்னால் ஓடினார்கள். சில சமயம் மண்ணையும் அவள் மீது வீசி எறிந்தார்கள்.

இதையெல்லாம் சிவகாமி சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவளுடைய நெஞ்சில் வைரம் பாயந்திருந்தது. அசைக்க முடியாத ஓர் உறுதி அவள் மனத்தில் ஏற்பட்டிருந்தது.

புகழையும் இகழையும் பாராட்டையும் நிந்தனையையும் ஒன்றாகக் கருதும் மனோ நிலையைச் சிவகாமி அடைந்திருந்தாள்.

கடவுளின் அழைப்பை எதிர்பார்த்துக் கொண்டு இந்தப் பூவுலகத்தில் தாமரை இலைத் தண்ணீர் போல் வாழும் முற்றும் உணர்ந்த ஞானியை அவள் ஒத்திருந்தாள்.

சிவகாமி வாதாபி வீதிகளில் நடனம் ஆட ஆரம்பித்து ஏறக் குறைய ஒன்றரை மாத காலம் ஆயிற்று.

ஒருநாள் வழக்கம் போல் சிவகாமி நடனம் ஆடிக் கொண்டிருந்தாள். சூர்யாஸ்தமன பேரிகை முழக்கம் கேட்டது.

சிவகாமி ஆட்டத்தை நிறுத்தினாள். சற்று மூச்சு வாங்குவதற்காக நின்றுவிட்டுப் பல்லக்கை நோக்கிச் செல்லத் திரும்பினாள்.

அவள் திரும்பிய திக்கில் தோன்றிய ஒரு தோற்றம் அவளைச் சிறிது நேரம் மனம் குழம்பித் திகைத்து நிற்கும்படி செய்துவிட்டது. அந்தத் தோற்றம் நாகநந்தியடிகளின் உருவந்தான்.

வியப்பினால் விரிந்த கண்களில் கோபாக்னியின் பொறி பறக்க, இமையா நாட்டத்துடன் நாகநந்தி தன்னை வெறித்துப் பார்த்துக் கொண்டிருப்பதைச் சிவகாமி பார்த்தாள்.

நாகநந்தியின் முகபாவம் கணநேரத்தில் மாறியது. கண்களில் கோபாக்னி மறைந்து பரிதாபம் தோன்றியது. அவருடைய கண்களின் பார்வையும் முகத்தின் பாவமும், "மன்னித்து விடு" என்று கெஞ்சுவது போன்ற உணர்ச்சியை ஊட்டின.

இதனால் மேலும் திகைப்படைந்த சிவகாமி, மெதுவாகச் சுயப்பிரக்ஞை அடைந்து, குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு தலைகுனிந்த வண்ணம் நடந்து சென்று பல்லக்கில் ஏறிக் கொண்டாள்.

பல்லக்கு வழக்கம் போல் மாளிகையை நோக்கிச் சென்றது.

ஆனால், சிவகாமியின் உள்ளம்,

யிருந்தது.

சிவகாமியின் விஷயத்தில் வாதாபி ஜனங்களின் மனோபாவம் முதலில் ஒருவிதமாயிருந்தது. போகப் போக அவர்களுடைய மனோபாவம் வேறு விதமாக மாறிக் கொண்டிருந்தது.

முதலில் அந்த அற்புத நடனத்தைப் பார்த்துவிட்டு வாதாபி மக்கள் பிரமித்துப் போனார்கள். "இப்படியும் ஒரு அற்புதக்



நாற்பத்து ஒன்பதாம் அத்தியாயம்

# பிக்ஷுவின் வருகை

சுக்கில பட்சத்துப் பிரதமையில் சிவகாமி வாதாபி நகரின் நாற்சந்தியில் நடனம் ஆட ஆரம்பித்தாள்.

சுக்கில பட்சம் முடிந்து கிருஷ்ண பட்சம் முடிவடைந்து மீண்டும் சுக்கில பட்சம் வந்தது.

சிவகாமியின் வீதி நடனம் இன்னும் நடந்து கொண்டே இருந்தது.

தளபதி விருபாக்ஷன் நடன அரங்கத்தை அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தான். வாதாபி நகரின் முக்கிய நாற்சந்திகளை ஒவ்வொன்றாக அவன் தேர்ந்தெடுத்து அங்கங்கே கொண்டு போய்த் தமிழகத்து ஸ்திரீ புருஷர்களை நிறுத்தினான்.

சிவகாமியும் அங்கங்கே போய் நடனமாடினாள்.

அந்தக் காட்சியைப் பார்ப்பதற்குத் தினந்தோறும் மக்கள் பெருந்திரளாகக் கூடினார்கள். ஸ்திரீகளும் புருஷர்களும் சிறுவர் சிறுமியர்களும் திரண்டு வந்தார்கள்.

அரசாங்க அதிகாரிகள் ரதம் ஏறி வந்தார்கள். அந்தப்புரத்து ராணிகளும் சேடிகளும் பல்லக்கில் ஏறி வந்தார்கள்.

புலிகேசிச் சக்கரவர்த்தி காஞ்சியிலிருந்து சிறைப் பிடித்துக் கொண்டு வந்த நாட்டியப் பெண், வாதாபி நகரின் வீதிகளில் நடனமாடுகிறாள் என்னும் செய்தி எங்கெங்கோ பரவலாயிற்று.

அதன் பயனாக அக்கம் பக்கத்து ஊர்களிலேயிருந்தும் ஜனங்கள் மேற்படி காட்சியைப் பார்க்க வந்தார்கள். தூர தூரங்களிலிருந்தெல்லாம் ஜனங்கள் வர ஆரம்பித்தார்கள். தேசமெங்கும் நானா திசைகளிலும் இதைப் பற்றியே பேச்சா



## அருள்வாக்கு!

பலர் சேர்ந்து பண்ணுகிற பஜனை ஒருபுறம் இருக்கட்டும். ஒவ்வொரு குடும்பத்திலும் உள்ள அனைவரும் மாலை வேளைகளில் வீட்டிலேயே ஒரு பத்து நிமிஷமாவது பகவந் நாமங்களைப்பாடி பஜனை செய்ய வேண்டும். இதில் காரிய சாத்தியமில்லாத சிரமம் எதுவும் இல்லை. குடும்பத்தினர் எல்லோரும் பூஜை அறையில் அல்லது பூஜைக்கென்று அறை இல்லாவிட்டால், ஒரு குத்து விளக்கை ஏற்றி வைத்து, அதன் முன் உட்கார்ந்து, கீர்த்தனங்களைப் பாட வேண்டும். நாமாவளிகளை கானம் செய்ய வேண்டும். அவரவரும் தங்களுக்குரிய நித்யகர்மாநுஷ்டானங்களை விடாமல் செய்துவிட்டு, அதோடு பஜனையும் செய்ய வேண்டும். பகவானைப் பாடுவதற்கு வெட்கமே வேண்டாம். கருணையே உருவான கடவுளின் நாமத்தைச் சொல்வதில் வெட்கத்துக்கு இடம் ஏது? பெரிய சங்கீத ஞானம், ராக பாவம், சாரீர வசதி இல்லாவிட்டாலும் பரவாயில்லை. பக்திபாவனைதான் முக்கியம். ஏதேதோ விளையாட்டுக்களில் திரிந்து கொண்டிருக்கிற குழந்தை, அம்மாவின் நினைப்பு வந்ததும் அவளிடம் வந்து, 'அம்மா, அம்மா' என்று கத்துகிறதல்லவா? அதில் வெட்கமோ. சங்கீத அழகோ இல்லை. லோக மாதாவான பரமாத்மாவை லௌகிக வியாபாரங்களிடையே சிறிது நேரமாவது நினைத்து, இப்படியே ராமா, கிருஷ்ணா, சிவா, அம்பா என்று கத்த வேண்டும். இந்தப் பழக்கம் ரொம்பவும் நல்லது. நம் நித்திய க்ஷேமத்தையும், ஆனந்தத்தையும் பெருக்கவல்ல பெரிய நிதி இது.



**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

ஜனக்கூட்டத்தின் நடுவே நின்ற நாகநந்தியடிகளிடம் இருந்தது.

"இந்தப் புத்த பிக்ஷு யார்? வேடம் பூண்ட வாதாபிச் சக்கரவர்த்திதானா? உருவம் அப்படியே இருக்கிறது. ஆனால் கண்களின் தோற்றத்திலும் முகபாவத்திலும் எவ்வளவு வித்தியாசம்? உணர்ச்சி என்பதே இல்லாத கல்நெஞ்சைப் பிரதிபலிக்கும் புலிகேசியின் முகத்துக்கும் கனிவும் இரக்கமும் கலைப் பரவசமும் ததும்பிய பிக்ஷுவின் முகத்துக்கும், எவ்வளவு வித்தியாசம்...?"

பிக்ஷுவின் தோற்றம் சிவகாமிக்குப் பல்லவ நாட்டையும் அரண்ய வீட்டையும் நினைவூட்டியது. அந்தக் காலத்து வாழ்வெல்லாம் ஞாபகம் வந்தது. உண்மையில் ஒரு வருஷத்துக்கு மேல் ஆகவில்லை. ஆனால், எத்தனை யுகம் ஆகிவிட்ட மாதிரி தோன்றுகிறது!

மாளிகையை அடைந்த பிறகும் சிவகாமியின் உள்ளம் வழக்கமான அமைதியை அடையவில்லை. ஏதோ ஓர் ஆவல், அர்த்தமில்லாத பரபரப்பு, அவள் மனத்தில் குடிகொண்டிருந்தது.

அவளுடைய உள்ளம் அப்படி யாரை எதிர்பார்த்தது? அவளுடைய கண்கள் யாரை எதிர்பார்த்து அவ்விதம் அடிக்கடி வாசற்பக்கம் நோக்கின? நாகநந்தி பிக்ஷுவையா?

இரவு ஒரு ஜாமம் முடியும் தறுவாயில் நாகநந்தி அந்த மாளிகைக்குள் நுழைந்த போது, சிவகாமியின் கண்களில் தோன்றிய ஒளியும், அவளுடைய முகபாவமும் அவள் புத்த பிக்ஷுவைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள் என்பதை உணர்த்தின.

நாகநந்தியும் சிவகாமியும் ஒருவர் முகத்தை ஒருவர் ஏறிட்டுப் பார்த்தார்கள். அவர்களுடைய கண்களின் தீக்ஷண்யம், ஒருவருடைய இருதய அந்தரங்கத்தை இன்னொருவர் ஊடுருவிப் பார்க்க முயன்றதாகத் தெரியப்படுத்தியது.

சற்று நேரம் அந்த மாளிகையில் மௌனம் குடி கொண்டிருந்தது. மௌனத்தைக் கலைத்துக் கொண்டு, பிக்ஷுவின் தழுதழுத்த குரல், "சிவகாமி! என்னை மன்னித்துவிடு!" என்று கூறியது.

(தொடரும்)

# பெண் விடுதலையும் ஃபில்டர் காஃபியும்!



• பத்மப்ரியா

ஒருபுறம் சர்வதேச மகளிர் தினம். மறுபுறம் மகளிர் இட ஒதுக்கீடு மசோதாவுக்கு மறுபடியும் தினறல். இப்படியொரு சூழ்நிலையில், இந்தியப் பெண்களின் இன்றையத் தேவை, சமூக விடுதலையா, பொருளாதார விடுதலையா என்ற பொருத்தமான தலைப்பில் புயல் மையம் கொண்டது மூன்றாவது கல்லூரிப் பட்டிமன்றத்தில்.

சென்னை எம்.ஓ.பி வைணவ மகளிர் கல்லூரியில், கல்லூரியின் முதல்வர் டாக்டர் நிர்மலா பிரசாத், கல்கி ஆசிரியர் சீதா ரவி முன்னிலையில் டாக்டர் சுதா சேஷைய்யன் நடுவர் பொறுப்பை வகிக்க, பத்மப்ரியா, ஜனனி சம்பத், ஷாலினி, ஸ்வர்ணரம்யா, சௌம்யா, கிருத்திகா ஆகிய ஆறு மாணவிகளின் அசர வைத்த அதிரடி வாதங்கள் இதோ:

**பத்மப்ரியா: சமூக விடுதலையே!**

அன்று சம்பிரதாயத்திற்குப் பயந்து பெண்களைப் பூட்டி வைத்தார்கள். இன்று சமூகத்திற்குப் பயந்து பூட்டி வைக்கிறார்கள். ஊர் என்ன சொல்லுமோ என்று பெண்மையின் சிறகுகளை வெட்டியே வைக்கிறார்கள். கணவனை இழந்த கைம்பெண் பூவும் பொட்டும் வைக்கக் கூடாது, என்பதிங்கே இயற்றப் படாத சட்டம். மீறும் பெண்களைச் சுற்றி போடப்படும் ஒரு தவறான வட்டம்.

திருமணத்திற்குப் பிறகா, பெண்ணுக்குப் பூவும் பொட்டும் வந்தது? நிச்சயமாக இல்லை. சிறு வயது முதல் பின்பற்றி வந்த பழக்கத்தை, திருமணத்திற்குப் பிறகு பறிக்கப்படும் சமூகத்தில், பெண்ணுக்கு எங்கே இருக்கிறது விடுதலை?

அவ்வளவு ஏன்? மனைவி இறந்த பிறகு மறுமணம் செய்து கொள்கிற ஆண் மகனை ஆராதிக்கிறது சமூகம். அதுவே கணவனை இழந்த கைம்பெண்ணோ, மணவிலக்கான பெண்மணியோ மறுமணம் செய்துகொண்டால், சல்லிக்காக பெறாத விஷயங்களுக்கெல்லாம் சந்தேகம், சித்திரவதை. இதுதான் சமூக விடுதலையா?




• நிர்மலா பிரசாத், சுதா சேஷைய்யன், சீதா ரவி



• ஜனனி சம்பத்



• டாக்டர் சுதா சேஷைய்யன்

**ஜனனி சம்பத்: பொருளாதார விடுதலையே!**

பெண் விடுதலை என்றால் என்ன? ஒரு பெண் தன் மனதுக்குச் சரியென்று தோன்றுவதை, மற்றவர்களைப் புண்படுத்தாமல் செய்வதும், முடிவெடுப்பதும்தானே? இந்தச் சுதந்திரம் பிறப்பிலேயே ஆணுக்கு இருக்கிறபோது, பெண்ணுக்குத் தருவதில் ஏன் பாரபட்சம்? ஏனென்றால் பெண்ணுக்குச் சம்பாத்தியம் இல்லை! சொத்துரிமை இல்லை. சம்பாத்தியமும், செல்வமும் இருந்தால்கூட, பொருளாதார சுதந்திரத்தோடு அவற்றைக் கையாள முடியாது. இதுதான் இன்றைய நிலை. நாமக்கல் கவிஞர் சொன்னது போல என் பெட்டி, என் பணம், என்றால் சாவியும் என்னிடம் தானே இருக்க வேண்டும். ஆனால் இல்லையே!

பெண்ணுக்குச் சமூக விடுதலை கிடைத்து விடாமலா, ஐஸ்வர்யாராய், சுஷ்மிதா சென், கிரண்பேடி, கல்பனா சாவ்லா என்று எல்லாத் துறையிலும் பெண்கள் சாதித்திருக்கிறார்கள்? இப்படிச் சாதித்து விட்டு நிற்கிறவர்கள்கூட, தங்கள் சம்பாதித்தப் பணத்தை வீட்டில் கேட்காமல் செலவு செய்ய முடிந்ததா, என்பதுதான் இப்போதைய கேள்வி.

**கே. ஷாலினி: சமூக விடுதலையே!**

பிறப்பிலேயே பெண்ணை இந்தச் சமூகம் எப்படிப் பார்க்கிறது? ஆண் பிள்ளை என்றால், அவன்தான் கடைசிக் காலத்தில் கஞ்சி ஊற்றுவான் என்கிறது. இறந்து போனால் கொள்ளி வைப்பான் என்கிறது. பெண் என்றால் அவள் வேறு வீட்டுக்குப் போய் விடுவாள். அவளால் பயன் இல்லை! சுமைதான் என்று பார்க்கிறது. கிராமத்தில் கள்ளிப்பால் என்றால் நகரத்தில் அபார்ஷன். ஒரு பெண், சிசு தனது தாயின் கருவிலிருந்தே சுதந்திரமாக வெளியே வர முடியவில்லை என்றால்? எங்கே இருக்கிறது சமூக விடுதலை?

மணமகனை விட மணமகள் அதிகம் படித்திருந்தால் அதைத் திருமண அழைப்பிதழில்

அச்சிடக் கூட அனுமதி மறுக்கிறது இந்தச் சமுதாயம். சரி, அதுதான் போகட்டும். தனக்குப் பிடித்தவனை தேர்ந்தெடுக்கவேனும் அனுமதி தருகிறதோ என்றால் அதுவுமில்லை. பையனைப் பெற்றோருக்குப் பிடித்திருக்கிறதா, அவன் சமூகத்தில் அந்தஸ்தோடு இருக்கிறானா என்று பார்க்கிறார்களே தவிர, பெண்ணிடம் சம்பிரதாயத்திற்கு ஒரே ஒரு வார்த்தை கேட்டால் போதுமா? மனப் பொருத்தம் இல்லாத இது போன்ற திருமணங்களால்தானே இன்று மணவிலக்குகள் பெருகிவிட்டன?

**பி. ஸ்வர்ண ரம்யா : பொருளாதார விடுதலையே!**

பெண் சிசுக் கொலை பற்றி எதிரணியினர் பேசுகிறார்கள். ஆனால் பெண் சிசுக் கொலைக்குக் காரணம் பொருளாதாரப் பிரச்னைதானே? வரதட்சணை பயம்தானே! அது கிராமமே என்றாலும் பொருளாதார பலம் இருக்கிற வீட்டில் பெண் சிசுக் கொலை ஒருபோதும் நடக்காது. வயிற்றுப்பாட்டிற்கே அல்லல் படுகிற வறிய குடும்பங்களிலேதான் பெண் சிசுக் கொலை நடக்கிறது.

பெண்கள் சிரித்தால்கூட குற்றவாளியாகப் பார்த்த காலம் இப்போது இல்லை. அரசியல் தொடங்கி ஆன்மிகம் வரை எந்தத் துறையில் இன்று பெண்கள் சாதிக்கவில்லை? ஒரு பெண் ஆசிரியராக இருக்கிற பத்திரிகையின் சார்பில், ஒரு பெண்கள் கல்லூரியில் இந்தப் பட்டிமன்றம் நடக்கிறது. இதற்கு ஒரு பெண் நடுவராக பதவி வகிக்கிறார். பெண்கள் வாதிடுகிறார்கள். பெண்களுக்குச் சமூக விடுதலை நிறையக் கிடைத்திருக்கிறது என்பதைத்தானே இந்த நிகழ்ச்சி காட்டுகிறது?

பெண் சம்பாதித்தால் அதைத் தனக்காக செலவழிக்க மாட்டாள். முதலில் குடும்பத்தின் தேவை அறிந்து, குடும்பத்திற்குச் செலவழித்த பிறகுதான் தன்னைப் பற்றி யோசிப்பாள். இதன் மூலம் தெரிய வருவது என்ன? ஒரு பெண்ணிற்குக் கிடைக்கிற பொருளாதார விடுதலை என்பது அந்தக் குடும்பத்திற்கே கிடைத்த பொருளாதார விடுதலை!

**சௌம்யா - சமூக விடுதலையே!**

ஐஸ்வர்யா ராய்களும், கிரண்பேடிகளும், கல்பனா சாவ்லாக்களும் நகர வாழ்க்கையிலே உதாரணங்களாக இருப்பவர்கள். இவர்களைப் போல் நீங்கள் கிராமங்களில் தேடினால் ஏமாந்து போவீர்கள். பொருளாதார விடுதலை இன்ஸ்டண்ட் காஃபி என்றால், சமூக விடுதலை ஃபில்டர் காஃபி போல ஆகிவிட்டது.

வாழ்க்கை விபத்தில் தோல்விகளைக் கூட வெற்றிகளாக மாற்றிவிடத் துடிக்கிற பெண்களின் தன்னம்பிக்கையைக் கிள்ளிப் போட்டுவிட்டு, அவர்களை விதவை என்றும், மலடி என்றும், வாழா வெட்டி என்றும் பெயர் சூட்டி அழைக்கிறது. ஆண்களுக்கு இந்தப் பெயர்கள் ஏன் இல்லை என்று நான் கேட்கவில்லை. ஆனால் பெண்களை மட்டும் ஏன் இப்படி இழிவு படுத்துகிறீர்கள் என்று கேட்கிறேன்.

**எஸ். கிருத்திகா : பொருளாதார விடுதலையே!**

'கடவுள் உனக்கான பழத்தை மரத்தில் வைத்திருக்கிறார். அதை அவரே பறித்துப் போடுவார் என்று எண்ணிக் கொண்டிருக்காதே!' - இது ஒரு ஜென் பழமொழி. சமூக விடுதலையும் இப்படித்தான் இருந்தது. பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு கிடைக்காதென்று தெரிந்ததும், சமூக விடுதலையைப் பெண்களே பறித்துக் கொள்கிறார்கள்! பறித்துக் கொண்டவர்கள் தன்னம்பிக்கையோடு சாதிக்கிறார்கள், சந்தோஷமாக வாழ்கிறார்கள். இப்படி



• கிருத்திகா



• ஸ்வர்ண ரம்யா

யொரு சூழ்நிலையில் பொருளாதார விடுதலை வந்துவிட்டால், முழுமையான சமூக விடுதலை சாத்தியமாகி விடும்.

**டாக்டர் சுதா சேஷய்யன் தீர்ப்பு:**

கடந்த ஐந்து ஆண்டுகளாக, எந்த பட்டிமன்றத்திலும் கலந்து கொள்வது இல்லை என்ற சபதத்தோடு இருந்தேன். காரணம், இன்று பட்டிமன்றங்களில் விவாதிக்கப்படும் அபத்தமான, பொருத்தமில்லாத தலைப்புகள். இந்தச் சூழ்நிலையில் எனது சபதத்தை மாற்றி என்னை இங்கே வரவழைத்தது இந்தத் தலைப்பு.



• சௌம்யா

சுதந்திரம் கிடைத்து இத்தனை ஆண்டுகளுக்குப் பின்னால், பெண்களுக்கு விடுதலை இருக்கிறதா என்று கேள்வி கேட்க வேண்டிய அவசரத்தில் நாம் இருக்கிறோம். காரணம், சுதந்திரம் கிடைத்து மக்களாட்சி நடக்கிறது என்று நம்புகிற பாராளுமன்றத்தில்தான், பெண்களுக்கான முப்பத்து மூன்று சதவிகித இட ஒதுக்கீட்டு மசோதாவைத் தாக்கல் செய்யும் முன்னரே, சுக்கல் நூறாகக் கிழித்துப் போட்டார்கள். இன்னொரு பக்கம் அழகான ஆடைகளிலும், அழகான பாவனைகளிலும் பெண்கள் நடமாடிக் கொண்டிருக்கும் இந்தச் சமூகத்தில், இன்னும் பெண் குழந்தைகள் கொல்லப்படுகின்றன. இப்படியொரு சூழ்நிலையில் பெண்களுக்குச் சமூக விடுதலையும் இல்லை, பொருளாதார விடுதலையும் இல்லை என்ற எதிர்மறையான தொனியோடு இந்தப் பட்டி மன்றத்தை நிறைவு செய்யக் கூடாது. அப்படியானால் என்னதான் தீர்ப்பு?

பெண் திருமணத்திற்காக மட்டும் படைக்கப்படுகிறாள் என்ற எண்ணம் சமூகத்திலிருந்து விலக வேண்டும். அப்போதுதான் பொருளாதார ரீதியாகவும் சமூகரீதியாகவும் பெண் சுமையாகப் பார்க்கப்படுவதிலிருந்து தப்ப முடியும்.

முப்பது வயது வரை ஓர் ஆண் திருமணம் ஆகாமல் இருந்தால், அவன் குடும்பத்திற்காக உழைத்த தியாகி. அதுவே பெண் என்றால், என்னவோ விஷயம் இருக்கிறது என்று களங்கம் கற்பிக்க நினைக்கிற சமூகம். ஆண் கண்டிப்பானவன் என்றால் அவன் நெருப்பு என்கிற சமூகம், கண்டிப்பான பெண்ணை முகடு என்கிறது. ஆண் செய்தால் சரி! அதையே பெண் செய்தால் தப்பு!



• ஷாலினி

குழந்தைப் பருவம் தொடங்கி கிழவிப் பருவம் வரைக்கும், சமூகத்தில் இருக்கும் இந்த இரட்டை அளவுகோல்கள்தான் பெண்களைச் சீர்குலைக்கின்றன.

பெண்கள் இன்று வேலைக்குப் போகிறார்கள். வருமானம் ஈட்டுகிறார்கள். ஆனால் இது மட்டுமே பொருளாதார சுதந்திரம் அல்ல. பெண் வேலைக்குப் போகாவிட்டாலும் பொருளாதார சுதந்திரத்தை அவள் அனுபவிக்க வேண்டும். அதுதான் உண்மையான பொருளாதார சுதந்திரம்! பெண்கள் இரண்டாந்தரப் பிரஜைகள் என்ற இரட்டை அளவுகோலை மாற்றிக் கொண்டு, பெண்ணுக்கும் மனம் உண்டு. சிந்தனைகள் உண்டு, யோசனைகள் உண்டு என்பதை உணர்ந்து கொண்டு, அவள் விருப்பத்தையும் கேட்டு நடப்போம், அவள் உணர்வையும் மதிப்போம் என்கிற உரிமையைப் பெண்ணுக்குக் கொடுத்தால், சமூக விடுதலை அவளுக்குக் கிடைத்துவிடும். சமூக விடுதலை வந்தால் அதனோடு சேர்ந்து பொருளாதார விடுதலையும் வந்து விடும்.

தொகுப்பு: ஆர்.சி. ஜெயந்தன்
படங்கள்: ஸ்ரீஹரி

# நீச்சல் சாம்பியன் சார்மி!

**‘காதல் அழிவதில்லை’ படக் கதாநாயகி சார்மியை ‘ஆஹா எத்தனை அழகு’ படப்பிடிப்பில் சந்தித்து, சாதனை ஏதாவது செய்திருக்கிறீர்களா, என்று தவறுதலாகக் கேட்டதன் விளைவு - இதோ!**

“அப்பா பிப்சிங் ஒரு வாஸ்து நிபுணர். அம்மா கர்ஜித்கவுர் ஸ்கூல் டீச்சர். இரண்டு பேருக்கும் பஞ்சாப் லூதியானாதான் சொந்த ஊர். நான் பிறந்தது வளர்ந்ததெல்லாம் மும்பை. மெட்ரிக் படிக்கும்போது ஜூனியர் பிரிவில் நான் மஹாராஷ்டிரா மாநில அளவில் நீச்சல் போட்டியில் முதல் பரிசு வாங்கியிருக்கேன். தவளை நீச்சல், தண்ணிக்கு அடியில் நீச்சல்ன்னு விதவிதமா நீச்சல் அடிப்பேன்.

ஐஸ்வர்யா ராயுடைய குரு லதா மேடம் கிட்டேதான் பரதமும், வெஸ்டர்னும் கத்துக்கிட்டேன். ஆனால் நான் பரதம் ஆடினா, பூமி அதிருதுன்னு பல பேர் சொன்னாங்க. அதனாலே விட்டுட்டேன். பாலே டான்ஸ் மேலே காதல் வந்துச்சு... அய்யய்யோ! அத்தனை பெரிய ரிஸ்கெல்லாம் எடுக்காதேன்னு அட்வைஸ் பண்ணி அனுப்பிட்டாங்க... நான் விடலே. சந்தீப்ங்கிற வேறொரு பாலே மாஸ்டர் கிட்டே என் ஆசையைச் சொன்னேன்... பதினைஞ்சு நாள்ளே கத்துத் தரேன்னார். ஆனால் முதல் நாள் வந்து கத்துக் கொடுத்ததோடு சரி... அதுக்கப்புறம் வீட்டுக்கு வரலே.

எனக்கு கார் ஓட்டத் தெரியும். குதிரையேற்றம் தெரியும். யானை ஏற்றம் கூடத் தெரியும். எப்படின்னு கேட்குறீங்களா? வினயன் டைரக்ஷன்லே, ஜெயசூர்யாவுக்கு ஜோடியா காட்டுச் சம்பகம்கிற (காட்டுச் சம்பவம்) மலையாளப் படத்துலே காட்டு வாசிப் பெண்ணா நடிச்சேன். அதுலே யானைதான் எனக்கு பெட். படப்பிடிப்புக்கு முன்னாலே ஒரு மாசம் எனக்கு யானை ஏற்றம் கற்றுக் கொடுத்தாங்க. ஆனால் பலமுறை யானை என்னைக் கிழே தள்ளிடுச்சி. ஏன்னு தெரியாமல் எல்லோரும் தலையைப் பிச்சுக்கிட்டாங்க. கடைசியிலே யானைப் பாகன்தான் காரணத்தைக் கண்டுபிடிச்சார். குறைந்தது பத்து கிலோ எடையைக் குறைச்சாத்தான் இந்தக் குட்டி யானை தாங்கும்ன்னார்... சரின்னு எடையைக் குறைச்சு நடிச்சேன். அப்புறம்தான் யானை ஒத்துழைப்பு கொடுத்தது.

எனக்கு ஒட்டக ஏற்றம் கூடத் தெரியும். என்ன நம்ப முடியலியா? ‘நீதோடு கவாளி’ன்னு, தீபக் ஜோடியா ஒரு தெலுங்குப் படத்துலே நடிச்சேன். அதுலே மும்தாஜ் செட்-அப்லே ஒட்டகத்துலே ஏறி பாலைவனத்துலே வர்ற மாதிரி ஒரு பாட்டு சீன்... யார் உதவியும் இல்லாமல் நானே ஒட்டகத்து மேலே தாவி ஏறினேன்.



ஆனால் அந்தப் பாட்டைப் படத்துலே இருந்து தூக்கிட்டாங்க. போனால் போகட்டும்... இப்போ ‘காதல் கிசுகிசு’ங்கிற படத்துலேயும் பாலாங்கிற புதுமுக ஹீரோவோட நடிக்கிறேன். எங்களுக்குள்ளே இல்லாத காதலை, இருக்கிற மாதிரி கிசுகிசு கிளப்பி விட்டுடறாங்க. ரொம்ப நைஸ் ஸ்கிரிப்ட். இந்தப் படமெல்லாம் வரட்டும். அப்புறம் பாருங்க... தமிழ் சினிமாலே என்னை யாரும் அசைச்சுக்க முடியாது!”

- ஸ்ரீ

அட்டை, படங்கள் : சங்கர் சத்யமூர்த்தி

# பின்னணிக் கிண்டல்!

**சி**ல சமயம் எதற்காக இப்படி ஆங்கிலத்தில் அலட்டிக் கொள்ள வேண்டும் என்ற கோபம் வரும். அப்படி ஒரு எரிச்சல் ஸ்டார் விஜய்யில் ஒரு அழகு நிலையப் பெண்மணி கூறியதைக் கேட்டபோது தடையில்லாமல் வந்தது. "ஸொபிஸ்டிகேட்டடா, சிம்பிளா, கிராண்டா, எலிகண்டா ஒரு ஹேர்ஸ்டைல் வேணும்னா, நீங்க இதைச் சூஸ் பண்ணலாம்" என்றார்! "மரத்தை மறைத்தது மாமதயானை, மரத்தில் மறைந்தது மாமதயானை" என்பதுபோல் எந்தக் கோணத்தில் நாம் பார்க்கிறோமோ அந்த விதத்தில் அந்த சிகையலங்காரம் அமையுமோ என்னவோ!

**கு**டைவிடை என்றால் என்ன? யாரும் கேள்வி கேட்காத போது தானாகவே கேள்வியை எழுப்பிக் கொண்டு அதற்கான பதிலைக் கூறுவதாம். ஜெயா டீவியில் கற்றதும் கேட்டதும் நிகழ்ச்சியில் கு.ஞானசம்பந்தன் இந்த உத்தியை வகுப்பறையில் சில ஆசிரியர்கள் அழகாகப் பயன்படுத்துவதைக் குறிப்பிட்டார். பிறகு "வகுப்பறையிலே அப்பப்போ சினிமாப் பாட்டைப் பாடி வகுப்பெடுக்கும் சில கோஷ்டி உண்டு. அதெல்லாம் வெத்துவேலை" என்றார். யாரைத் தாக்குகிறார்?

**க**லாக்ஷேத்ரா மாணவி என்பதால் "தகதிமிதா" பகுதியை நடிகை சுகன்யாவால் சிக்கலின்றி நடத்த முடிகிறது. மாணவிகள் நடனமாடும்போது பொருத்தமான முகபாவங்களைப் பார்வையாளராகவும் வெளிப்படுத்துகிறார். ஆனால் மேற்கத்திய இசைக்கு பரதம் ஆடுவது போன்ற ஒரு பகுதிதான் ஒட்டவில்லை. இரு இசைக்கும் பாலம் என்று எண்ணினார்களோ என்னவோ, ஆனால் பார்க்கும்போது கண்காட்சியில் இரண்டு தலை மனிதனைப் பார்ப்பது போன்ற உணர்வுதான் ஏற்படுகிறது.

**சி**ரிப்பு என்பது மகிழ்ச்சியைக் குறிப்பது. ஆனால் அதையும் இடம், பொருள், ஏவல் அறிந்துதான் பயன்படுத்த வேண்டும். இல்லாவிட்டால் நேரெதிரான பலனைத் தந்துவிடும். "புரட்சிக்கலைஞர் as சொக்கத்தங்கம்" என்று விளம்பரம் செய்கிறார்கள். அப்போது கிளுகிளுத்துக் கிண்டலான ஒரு சிரிப்பொலி பின்னணியில் கேட்கிறது.

**ந**ல்ல நாளிலேயே தியேட்டர் பக்கம் பலரும் ஒதுங்குவதில்லை. போதாக் குறைக்கு இப்போது உலகக் கோப்பைப் பந்தயம் வேறு. பார்த்தார் நடிகை தேவயானி. காதல் கணவன் இயக்க, தாம் தயாரித்த 'காதலுடன்' படத்தை நம்மைப் பார்க்க வைக்க இப்படி ஒரு வேண்டுகோளை சானல் விளம்பரத்தில் முன் வைத்தார். "கிரிக்கெட் மேட்சைப் பார்த்து டென்ஷனாய் இருப்பீங்க. அதைப் போக்கிக் கொள்ள காதலுடன் படத்தைப் பாருங்க" என்றார். படம் பார்த்து மேலும் டென்ஷனாக மாட்டோம் என்பதற்கு உத்தரவாதம் உண்டா?

- ஆதர்ஷ்



# சரபேஸ்வர மகிமை!



• ஸ்ரீ சரபேஸ்வரர்

ஹிரண்ய கசிபுவின் அட்டகாசம் தாங்க முடியவில்லை. 'விஷ்ணு' என்ற பெயரைக் கேட்டாலே கொதித்து எழுந்தான். திருமால் பக்தர்களை, தேடித் தேடி வெட்டிச் சாய்த்தான். சின்னக் குழந்தை பிரகலாதனின் நாராயண பிரேமையை மட்டும் கண்டு கொள்ளாமல் விட்டு விடுவானா என்ன? தன் குலக் கொழுந்தையே கொன்று விடப் பிரயத்தனப்பட்டான். ஆனால் பலிக்குமா அதெல்லாம்! வென்றது பாலகனின் பக்திப் பிரவாகம்.

அரக்கனின் அகந்தை அழியும் கட்டமும் வந்தது. தூணைப் பிளந்து கொண்டு வெளியே வந்து கர்ஜித்து நின்றது நரசிம்மம்!

பகலும் இரவுமற்ற மாலை நேரத்தில், உள்ளும் வெளியுமற்ற நிலைப்படியில் அமர்ந்து, ஆயுதம் தவிர்த்து நகங்களாலேயே, ஹிரண்ய கசிபுவின் நெஞ்சைப் பிளந்து, குடலை உருவி, உதிரம் குடித்து... அரங்கேறியது உக்கிரமான நரசிம்ம திருவிளையாடல்!

துளிக்கூட சிந்தாமல், அசுர உதிரம் குடித்ததும், அத்தனையும் தலைக்கேறி, அழிவு சக்தியாக ஆர்ப்பரித்து எழுந்தது நரசிம்ம மணி... யாரால் தாங்க முடியும்? மூவுலகமும் புரண்டு தவித்தது.

"அம்மையே... அப்பனே... சரணம்" என்று உயிரினங்கள் கதறிக் கொண்டே சிவசக்தியிடம் அடைக்கலம் புகுந்தன. சர்வலோக ரக்ஷகனான ஈஸ்வரன், சிறிதும் தாமதிக்காமல் பூதகணங்களின் தலைவனான தன் வடிவேயான அகோர மூர்த்தியை அனுப்பி வைத்தார்.

சாதாரண வேஷமா அது...? நரசிம்ம ஆவேசமல்லவா? அகோரமூர்த்தியால் அணுகக் கூட முடியவில்லை.

"அப்பா ஈஸ்வரா... இது என்னால் நடவாத காரியம். நீங்களே போய்ப் பாருங்கள்... அந்தக் கூத்தை' என்று திரும்பி வந்துவிட்டார். அவ்வளவு நடுக்கம்.

'சரி, இனி நாமே வடிவெடுக்க வேண்டியதுதான்' என்று முடிவெடுக்கிறார் ஈசன். வீரபத்திர வடிவிலிருந்து ருத்ர மூர்த்தியாய் சிவபெருமான், பறவையும், மனித உடலும் மிருகமும் கூடிய மகா பயங்கரத் தோற்றத்தில் சிறகு விரிக்கிறார்... அவரே ஸ்ரீ சரபேஸ்வரர்.

### ஸ்ரீ சரபேஸ்வரர் தோற்றம்

யாளி என்ற கோர மிருகத்தின் எட்டுக் கால்கள், சரபப்பக்ஷியின் இரண்டு முகங்கள், வலுவான நான்கு கைகள், கூர்மையான நகங்கள் என்று அச்சம் தந்தது அந்த வடிவம். இரு புறத்திலும் படபடவென அடித்துக் கொண்ட இறக்கைகளும், சிம்மத்தின் வாலும், கருடன் போன்ற மூக்கும்... பார்ப்பவரை நடுங்கச் செய்ய இது போதாது என்று

காளியைப் போன்ற நீட்டிக் கொண்ட கோரப் பற்கள் வேறு...

பறக்க ஆரம்பித்தார் சரபேஸ்வரர். இரு இறக்கைகளிலும் ப்ரத்தியங்கரா, சூலினி துர்கா என இரண்டு சக்திகள் வந்தமைய, மேலும் வீறு கொண்டு எழுந்தது சரபேஸ்வரம். ஆகாயத்தில் பெரும் கர்ஜனையோடு, பயங்கரமாகப் பறந்து வந்த சரபத் திருவுருவின் நிழல் நரசிம்மத்தின் மீது பட்டது... அதுவும் மிக இலேசாகத்தான் தொட்டது. நரசிம்மத்தின் உக்கிரம் தணிந்து, ரஜோ குணம் மேவிட, மெள்ள நடுங்கியது.

ஒரு நாளா... இரண்டு நாளா...? கிட்டத் தட்ட பதினெட்டு நாட்கள் என்னென்ன வழிகளிலோ நரசிம்மரின் சினத்தைத் தணிக்க முயற்சி செய்கிறார் சரபர். அடங்குவது போல பாவ்லா காட்டும் நரசிம்மம், மறுபடி பிடரி சிலுப்பிக் கொண்டு, ஆக்ரோஷம் காட்டுகிறதே...! சரபர் பார்த்தார்.

முடிவில் நரசிம்மத்தின் பாதங்களை இருபுறமும் தம்முடைய எட்டுக் கால்






களால் பிடித்துக் கொண்டு மார்போடு தழுவி, இறக்கைகளால் அணைத்து சாந்தப் படுத்த... கொதித்துக் கிளம்பிய எரிமலைக் குழம்பின் மீது பன்னீர்க் கடல் நுரைத்துக் கரைத்தது போல... நரசிம்மம் 'தண்' என்று குளிர்கிறார். தம் உணர்வு கொண்டு சாந்த மடையும் அருள்மிகு நரசிம்மர் பதினெட்டு திவ்ய ஸ்லோகங்களால், ஸ்ரீசரபரைத் துதித்து வணங்குகிறார். அதுவே சரப அஷ்டோத் திரம்.

### மயிலாப்பூரில் சரபேஸ்வரர்

சர்வ சக்தி வாய்ந்த சரபேஸ்வரருக்கு, தமிழ்நாட்டில் திருபுவனத்தில் மட்டும்தான் தனிக் கோயில் உண்டு... அது தவிர மயிலை, தெற்கு மாட வீதியில் உள்ள வெள்ளீஸ்வரர் ஆலயத்திலும், சரபேஸ்வரர் தனி சந்நிதியில் அருள்பாலிக்கிறார். "என்னது... மயிலாப்பூரில் வெள்ளீஸ்வரரா? கபாலீஸ்வரர்தானே பிரபலம்?" என்று நீங்கள் கேட்கலாம். திரு மயிலையில் மொத்தம் ஏழு சிவாலயங்கள் உள்ளன. கபாலீஸ்வரத்துக்கு அடுத்து

முக்கியத்துவம் வாய்ந்தது செங்குந்த மரபில் வந்த அருள்மிகு வெள்ளீஸ்வரர் திருக் கோயில்.

### வெள்ளீஸ்வரர் கதை

வாமன அவதாரக் காலம். மூன்றடி மண் கேட்டு நிற்கிறார் திருமால். மாவலி மன்னனும் ஒப்புக் கொண்டு தானம் தர முன்வரும் போது, அசுர குல குரு சுக்கிராச்சாரியார் வண்டு போல உருவெடுத்து கமண்டலத்தின் மூக்கை அடைத்துக் கொள்கிறார். இந்தத் தந்திரமெல்லாம் திருமாலிடம் பலிக்குமா...? உடனே தர்ப்பைப் புல் ஒன்றை எடுத்து, நீர்த் தாரையைக் குத்திவிட, அது சுக்கிராச்சாரியாரின் கண்ணில் பட்டு பார்வை போய் விடுகிறது. "சுக்ராச்சாரியாரே... கவலைப்பட வேண்டாம். திருமயிலையில் உள்ள வெள்ளீஸ்வரரை வழிபட்டு, கண் பார்வை பெறுங்கள் என்று அசரீரி கேட்கவே, சுக்ராச்சாரியார், வெள்ளீஸ்வரரை வணங்கி, பார்வையை மீண்டும் பெற்றார் என்கிறது கோயிலின் தலபுராணம்.



* ஸ்ரீ காமாக்ஷி உடனுறை வெள்ளீஸ்வரர்

"**சு**க்ரன் என்றால் வெள்ளி. சுக்ராச்சாரியார் வந்து முங்கி எழுந்ததால் பெயர் பெற்ற 'சுக்கிரக் குளம்'தான் இன்று மருவி 'சித்திரக் குளம்' என்றாகிவிட்டது. சுக்கரனுக்கு ஆசி தந்த ஈஸ்வரரும் வெள்ளீஸ்வரர் ஆகிவிட்டார்" என்றார் கோயிலின் அறங்காவல் குழுத் தலைவர் ஆர். சண்முகம்

### சரபேஸ்வரரை வழிபடும் முறை

ஞாயிற்றுக் கிழமை தோறும் ஸ்ரீசரபர் ஹோமம் நடைபெறுகிறது. அதைத் தொடர்ந்து மாலை நாலரை முதல் ஆறு மணி வரை நடைபெறும் ராகு கால பூஜையில் தொடர்ந்து ஆறு வாரங்கள் கலந்து கொண்டு வேண்டிக் கொண்டால், பக்தர்களின் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறுகின்றன என்பதால், எள்ளு போட்டால் எண்ணெயாகி விடும் போல அப்படியொரு கூட்டம்.

பிரச்னைகள் தீர்ந்த அற்புதக் கதைகளுடன் சாட்சி சொல்ல நிறையப் பேர் முன் வருகிறார்கள், கண்களில் நீர் மல்க!

அரளிப்பூ, தாமரைப் பூ மாலை, எலுமிச்சை மாலை, என பக்தர்களின் காணிக்கை வந்து குவிந்து கொண்டேயிருக்க, அபிஷேகமும், மகா தீபாராதனையும் மெய் சிலிர்க்க நடக்கிறது. ஐதிகப்படி பானகமும், பொங்கலும் பிரசாதமாக வழங்கப்பட, 'ஜம்' என்று வீற்றிருந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார் ஸ்ரீ சரபர்.

### சரபேஸ்வர தியானம்

'சரபாஷ்டோத்திரம்' என்ற நாமாவளியை ஜபித்துக் கொண்டே, ஸ்ரீசரபரை வழிபடுபவர்களுக்கு, கிடைக்கும் பேறுகள் எத்தனை எத்தனையோ! எதிரிகள் அடங்கி விடுவார்கள். பில்லி, சூனியம், ஏவல் ஒழியும். திருமணம் கை கூடும். மகப்பேறு கிடைக்கும். செல்வச் செழிப்பு உண்டாகும். மனக்கவலை தீரும். யம பயம் இருக்காது.

ஸ்ரீ காமாக்ஷி உடனுறை வெள்ளீஸ்வரரைத் தரிசித்து சரபேஸ்வரரின் அருள்பிடியில் அழகாய் சிக்கிக் கொள்ள நீங்கள் எப்போது வரப் போகிறீர்கள் மயிலைக்கு?

**- அனுராதா சேகர்**

படங்கள்: **டிஜிட்டல் சண்முகம்**

மாநகரப் பேருந்தில் பயணிப்பது மழையில் நனைவது போல சிலருக்குச் சந்தோஷம். வேறு சிலருக்கு வியர்வை மழையில் நனைந்து தொலைக்க வேண்டுமே, என்கிற சங்கடம். பல்லவன் படம் பார்க்கிறவர்களுக்கோ, டிக்கெட் எடுத்து விட்டோம், பல்லைக் கடித்துக் கொண்டு பார்த்துத் தொலைப் போம் என்கிற இரண்டாம் ரக அவஸ்தை.

கல் தோன்றி மண் தோன்றாக் காலத்துக்கு முன்தோன்றிய முக்கோணக் காதல் கதை. தம்பியின் காதலியை, யாரென்று அறியாமலேயே அண்ணனும் காதலிக்கிற அக்கப்போர் ஃபார்முலா. சரி போகட்டும்! திரைக்கதையிலாவது ஜமாய்த்திருக்கிறார்களா என்று காத்திருந்தால், ஏமாற்றவில்லை அறிமுக இயக்குனர் பத்மாமகன். ஆனால் திரைக்கதை பயணிக்கும் பிரதான களமான மாநகரப் பேருந்து, வழக்கமான முறையிலேயே வீணடிக்கப்பட்டிருப்பதில், டிக்கெட் பரிசோதகரிடம் மாட்டிக் கொண்டு விழிக்கும் வித்-அவுட் பயணி மாதிரி, படம் பல இடங்களில் பரிதவிக்கிறது.




தம்பியின் காதலியை ரூட் விடும் ஜாலி அண்ணனாக மனோஜ் கே. பாரதி. தோற்றம் வேணுமானால் ஜோர்; கதை ரொம்ப புவர்! தம்பியாக வரும் புதுமுகம் சங்கரின் முகத்தில் உணர்ச்சிகளைத் தேட வேண்டியிருக்கிறது. சொல்ல மறந்த கதையில் ஹோம்லி ரதி என்றால், இதில் பேருந்து தேவதையாக மாடர்ன் ரதி.

வித்யாசாகரின் இசையில் பாடல்கள் சுமார்; பாடல் வரிகள் படுத்தல்! நகைச்சுவை இல்லாத குறையைத் தீர்த்து வைத்து விடுகிறது கிளைமாக்ஸ். உழைப்பென்னும் டீசல் அடிக்காமல் வண்டியை எடுத்தால் உருப்படுமா?

— விஷுவல்தாசன்

● ஜஸ்ட் பாஸ்

# பலே சோமலெ!

அமெரிக்காவில் டெட்ராய்ட் நகரில் வசிக்கும் இளைஞர் சோமலெ சோமசுந்தரம், சமீபத்தில் சென்னை வந்திருந்தார்.

அமெரிக்க வேளாண் துறையும், உலகின் மிகப் பெரிய அறிவியல் அமைப்பான அமெரிக்கன் கெமிகல் சொசைடியும் இவருடைய 'பூமியும், பூச்சிகொல்லி மருந்துகளும்' என்ற பிஎச்.டி ஆய்வுரையைத் தலைசிறந்ததென்று கருதி, 'இளம் விஞ்ஞானி' விருதை 1988ல் இவருக்கு வழங்கிப் பாராட்டியிருக்கின்றன. அயோவா மாநிலப் பல்கலைக் கழகப் பேராசிரியராக மூன்று வருடங்கள் வேலை பார்த்த பிறகு, ட்யூ பாண்ட் நிறுவனத்தில் ஆராய்ச்சியாளராகச் சேர்ந்தவர். பிறகு வேறு எந்த அமெரிக்கருமே செய்யாத வகையில், முற்றிலும் மாறுபட்ட விற்பனை -மார்க்கெட்டிங் பிரிவில் சிறந்து விளங்கி, பல மில்லியன் டாலர்களுக்கு விற்பனைச் சாதனை படைத்த இளைஞர். இரண்டு நூல்களையும், அறுபது கட்டுரைகளையும் எழுதிய வேளாண் விஞ்ஞானி. அவரைச் சந்தித்தோம் :



• குடும்பத்துடன் சோமலெ சோமசுந்தரம்

***அமெரிக்காவில் விவசாயிகளுக்குச் சலுகைகள் உண்டா?***

உண்டு. இந்தியாவில் மானியம் என்கிறோம். அங்கே விலைப் பாதுகாப்பு- அதாவது 'பிரைஸ் ப்ரொட்டெக்ஷன்' என்கிறார்கள். அங்கே மக்காச்சோளம்தான் முக்கியப் பயிர். கோதுமையும் உற்பத்தி அதிகம் என்பதால், வெளிநாடுகளுக்கு நிறைய ஏற்றுமதி செய்கிறார்கள். சோயா பீன்ஸும் நிறைய உற்பத்தி ஆகிறது. தென்-கிழக்குப் பகுதியில்தான் நெல் சாகுபடி. 2000 - 3000 ஏக்கர் பண்ணை வைத்திருக்கும் விவசாயி கூட அங்கே சிறு விவசாயிதான். எல்லாமே இயந்திரமயமாக்கப்பட்ட வேளாண்மை. அதனால் விவசாயத்துக்கு அங்கே தொழில்துறை அந்தஸ்து உண்டு. ஆனால் அங்கேயும் கூட, பண்ணைகள் பல மறைந்து போய், வீடுகள் வந்து கொண்



''ஏம்பா! உன்னை போலீஸ் அடித்தார்களா?''

''நல்லா கேட்டீங்க சார்!'' நாங்கெல்லாம் தாய் புள்ளை மாதிரி! கேஸ் இல்லேன்னாங்க சரின்னு நானே வந்தேன்!''

- என்.சி. தர்மலிங்கம்



''இடைத் தேர்தல்ல கட்சி வேட்பாளர் ஜெயிக்க பம்பரமா சுழன்று, பணத்தைத் தண்ணியா செலவு பண்ணி, தொகுதி மக்களுக்கு நல்லது செய்த அமைச்சரை தலைவி ஏன் கழட்டி விட்டுட்டாங்க?''

''தேர்தல்முடிவு தெரிந்த பிறகும் அந்தத் தொகுதி மக்களோட குறைகளை நிவர்த்தி செய்ய முயற்சி எடுக்கிறாராம்!''

- சீர்காழி வி. ரேவதி

டிருக்கின்றன.

***பூச்சிகொல்லி மருந்துகள் அபாயமானவை என்ற பிரசாரம் வலுத்து வரும் இன்றைய சூழ்நிலையில், அங்கே அதற்கு எப்படி ஆதரவு தருகிறார்கள்?***

அங்கேயும் வாஷிங்டன் ஆரேகன் நகரில் பூச்சிகொல்லி மருந்துகளுக்கு எதிரான இயக்கம் நடந்துதான் வருகிறது. அமெரிக்காவில் அரசாங்க விதி முறைகளும் மிகக் கடுமையானவை. அதனால் இந்தத் துறையில் ஈடுபட்டிருப்பவர்கள், தமது ஆராய்ச்சிகளை பயோ டெக்னாலஜி துறையில் செலுத்தி வருகிறார்கள். அதில் முன்னேற்றமும் கண்டு வருகிறார்கள்.

***இன்னும் 10 வருடங்களில் பூச்சிகொல்லி மருந்துகளே இல்லாத நிலை உருவாகுமா?***

அப்படிச் சொல்ல முடியாது. ஆனால் ஒரு மாதம், இரண்டு மாதம் மட்டுமே நிலத்தில் இருக்கக்கூடிய பூச்சிகொல்லி மருந்துகள் இப்போது உபயோகத்துக்கு வந்து விட்டன. இப்போது தயாராகும் பூச்சி கொல்லி மருந்துகளுக்கு, மிகக் குறைந்தபட்ச பக்கவிளைவுகளே இருக்கின்றன.

தமிழகத்தின் பல தமிழ் எழுத்தாளர்களையும், அறிஞர்களையும் அமெரிக்க தமிழ்ச் சங்கங்களில் சொற்பொழிவாற்ற வழி செய்தவர் சோமசுந்தரம். டக்கோட்டா மாநிலத்தில் இந்திய அமைப்பின் தலைவராகப் பணியாற்றியபோது, மகாத்மா காந்தி நினைவாக, அமெரிக்கப் பள்ளி மாணவர்களுக்கு ஸ்காலர்ஷிப் வழங்க அறக்கட்டளையை நிறுவியிருக்கிறார்.

இவருடைய தமிழ்ப் பணியைப் பாராட்டி அமெரிக்க மற்றும் தமிழ் அமைப்புகள் தமிழ்ச்சுடர், தமிழ் ஒலி விருதுகளை வழங்கியுள்ளன. டெட்ராய்ட் நகரில் உருவாகி வரும் பராசக்தி ஆலயத்தின் வளர்ச்சிக்கு உறுதுணையாக இருந்து வருகிறார்.

சென்னை வந்திருந்தபோது இலக்கிய வீதி விழாவில் கலந்து கொண்டு, தந்தையார் சோமலெ பெயரில் சிறந்த தமிழ்ப் பத்திரிகையாளர் ஒருவருக்கு ரூ. 10,000 பரிசளிப்பேன் என்றவர், அமெரிக்கா புறப்படு முன், மதுரையில் முன்னாள் 'தமிழ்நாடு' நாளிதழில் பணிபுரிந்த திரு. எல். சுந்தரம் அவர்களுக்கு அதை வழங்கவும் செய்தார். இனி வருடந்தோறும் இந்தப் பரிசு வழங்கப்படும் என அறிவித்திருக்கிறார்.

இப்போது இவரது பேச்சு மூச்சு எல்லாம் அமெரிக்காவிலேயே பிறந்து வளரும் தமிழ்ச் சிறுவர் சிறுமியரிடையே தமிழை வளர்ப்பது தான்.

30 வருடங்களுக்கு முன், கலாக்ஷேத்ரா தலைவி ருக்மிணி அருண்டேல் இந்த இளைஞரைப் பற்றிச் சொன்னார் :

"பத்து வயதில் மிக அருமையாகத் தமிழில் பேசும் சோமசுந்தரம், வருங்காலத்தில் அமைச்சராக வருவார்."

தாம் பணியாற்றும் மிகப் பெரிய நிறுவனத்திலும், அமெரிக்க சமுதாயத்திலும் இவருக்கு இருக்கும் புகழையும், செல்வாக்கையும் பார்த்தால், ஒருவேளை அமெரிக்காவில் அமைச்சர் ஆனாலும் ஆகலாம். தமிழகத்துக்கு எங்கே அந்தக் கொடுப்பினை?

சந்திப்பு : **சாருகேசி**

# அடையாளங்கள் 4

சுப்ர.பாலன்

நினைவுகளின் அழுத்தத்திலிருந்து விடுபட மனம் வராமல் கண்களை மூடி சுகமாக அனுபவித்துக் கொண்டிருந்தான். செந்தமிழின் சின்னக் குழந்தை மெல்லத் தத்தி நடந்து வந்து, தாத்தாவின் கை விரலைப் பற்றியிழுத்தது. அவன் நினைவு மீண்டான்.

பேத்தியைக் கண்டதும் அவனுடைய முகம் மலர்ந்தது. கை விரல்களால் அவளுடைய சுருட்டையான கேசங்களை வருடி விட்டான். தூக்கி வைத்துக் கொள்ள முயன்றபோது அது நழுவி ஓடியது.

"இவ யாரு மாதிரி இருக்கிறா? சொல்லுங்களேன் பாப்பம்...'' என்று கோதை கேட்டாள். இவள் பிறந்து ஒரு மாதம் கூட ஆகவில்லை. தினம் ஓர் அழகாய் அந்தச் சூரியன் பூத்துச் சிரித்துக் கொண்டிருந்தது. "ஏன்? உன்னைய மாதிரி இருக்கான்னு சொல்லட்டுமா?'' என்று சீண்டினான். அதுபதை நெருங்குகிற போதிலும் அவளுடைய முகத்தில் குங்குமம் பரவுவதைக் கண்டு ரசிப்பதில் ஒரு தனியான சுகம் கிடைக்குமே!

"இல்லீங்க. எனக்கென்னமோ, தாத்தா மாதிரியேதானுங்க தெரியுது. யாரு கண்டா? பாப்பாவுக்குப் பத்து அழகுன்னு சொல்லுவாக. பெரிசாப் போனாத் தன்னாலெ தெரியுது..'' என்று சமாளித்தாள்.

இப்போது - ஒன்றரை வயதில் பார்க்கிற போது, அதுவும் கோதை இல்லாத போது பார்க்கிற சமயத்தில் அச்சாக அவளேதான் என்று தெரிகிறது. சுருட்டை மயிர், திராட்சைக் கறுப்பு விழிகள், சற்றே மேடிட்ட நெற்றி, கொஞ்சமாக வளைந்த மூக்கு - எல்லாம் இருபதில் பார்த்த கோதையையே நினைவூட்டுகின்றன. நீண்ட பெருமூச்சு எழுந்து அடங்கியது.

செந்தமிழின் குரல் சற்று உரத்துக் கேட்டது. "என்னத்தையோ கொட்டி வாரிக்கிட்டு நிக்குதுப்பா..'' என்று சொல்லிக் கொண்டே குழந்தையை இலேசாக ஒரு தட்டுத் தட்டி இழுத்து வந்தாள். முகம், உடம்பு, சட்டையெல்லாம் ஒரே சிவப்புச் சிவப்பாய்க் கறைகள்.

கோதையின் பூஜை மாடம் இவளுக்கு எட்டுகிற உயரத்தில் இருக்கிறதா? அதற்குள் அவ்வளவு உயரம் வளர்ந்து விட்டதா? குங்குமச் சிமிழை எடுத்துக் கொட்டி மேலெல்லாம் அப்பிக் கொண்டு வந்து நிற்கிறது. கோதையிருந்தால் இதை அவள் மிகவும் ரசிப்பாள். குங்குமம் கொட்டிச் சிதறினால், அது நல்லது என்று கூடச் சொல்லுவாள்.

மறுபடியும் மறுபடியும் அவளே வந்து நினைவுகளை ஆக்கிரமித்துக் கொள்கிறாள். அதைத் தவிர்க்கவும் முடியவில்லை. அப்படித் தவிர்ப்பதில் அவனுக்கு விருப்பமும் இல்லை. சில நேரங்களில், நல்ல கனவு வந்தால் அதை மறுபடியும் முழுமையாக நினைத்துப் பார்க்க முயல்கிற ஆர்வம் போல் - கனவாகி விட்ட இனிமைகளைக் கண்ணுக்குள் கொண்டு வருவதில் ஓர் ஆனந்தம் இருக்கத்தானே செய்கிறது?

"நான் ஒண்ணு சொல்லுவேன். கேட்பீங்களா?'' அவனுடைய காதுகளில், கோதையின் குரல் மீண்டும் மீண்டும் எதிரொலித்தது. பலமுறை அவள் கேட்டும், வெளியிடாத அந்த 'ஒன்று' எதுவாய்த்தானிருக்கும்?

குழந்தை மெல்ல நடந்து அவன் அருகே வந்தது. ஒவ்வோர் அடியிலும் அது வளர்ந்து பெரியவளாகிச் சில நிமிடங்களில் கோதையாகவே அவன் முன்னால் வந்து நிற்கிற மாதிரி, அவளே தொட்டு வருடுகிற மாதிரி அவன் உணர்ந்தான். அவனுடைய கண்களில் நீர் திரையிட்டது.

குழந்தையைத் தொடர்ந்து வந்து அதைத் தூக்கிக் கொண்ட செந்தமிழ் அப்பாவின் கண்ணீரைக் கண்டு அதிசயித்தாள். காரணம், கோதை இறந்த போதும் சரி, அதன் பின்னரும் கூடச் சரி, அவன் மௌனம் காத்தானே தவிர, வேறு எந்தவிதமான உணர்வுகளையும் வெளிப்படுத்தாதிருந்ததே.

"கஷ்டம் வந்தா அழுது கொட்டித் தீர்த்



துப்பிடணுமுங்க. இல்லேன்னா யாருகிட்ட யாச்சும் சொல்லிச் சொமையை எறக்கி வச் சுப்பிடணும். இல்லியானா, அப்படியே நெஞ்சு வெடிச்சுப் போயிரும்..." எப்போதோ ஒரு முறை கோதை, வேறு யாரையோ பற்றிப் பேச்சு வந்தபோது சொன்னது நினைவுக்கு வந்தது.

இப்போது நேர்ந்துள்ளது அந்த மாதிரி யான துயரம்தான். அழுது புலம்புவதால் என்ன பயன் விளைந்து விடப் போகிறது? அதுவும் ஓர் ஆண் பிள்ளை அப்படியெல் லாம் அழலாமா? அவனுடைய மனசுக்குள் ஆயிரம் கேள்விகள்.

"அழுவரீங்களாப்பா?" என்று பரிவோடு கேட்டுக் கொண்டே அருகில் வந்தாள் செந்தமிழ்.

"இல்லியே" என்று சொல்லி விட்டுக் கண் களைத் துடைத்துக் கொண்ட போது அவள் சற்றே அதிர்ந்தாள். இருபது நாட்களுக்குப் பின் முதன் முறையாக அவன் பேசி விட் டான். ஒற்றைச் சொல்.

"சொல்லுங்கப்பா. எதையாச்சும் பேசுங் கப்பா..." என்று கொஞ்சம் மகிழ்ச்சியோடும்,

கொஞ்சம் அச்சத்தோடும் அவனுடைய கரங்களைப் பற்றிக் கொண்டாள் செந்தமிழ்.

சீக்கிரமே செய்தி வெளியே பரவியது. அவன் மௌனம் கலைந்து பேசத் தொடங்கி விட்டான். முதலில் மகிழ்ந்து உணர்ச்சி வசப் பட்டவன் மாணிக்கம்தான். அண்ணன் பேசி விட்டார் என்பது அவனைப் பொறுத்த வரை, தெய்வமே பேசிவிட்ட மாதிரி.

பக்கத்து அறைக்குப் போய், தொலைபேசி யில் யார் யாரிடமெல்லாம் தன்னுடைய மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொண்டிருப்பானோ; மாலை நேரத்தில் அவன் எதிரே இருந்த தொலைபேசி ஒலித்தது. அவனே அதை எடுத்தான்.

"தலைவா!" என்று அழைத்துப் பேசி னான்; ஒன்றிரண்டு வார்த்தைகள் மட்டும். தலைவர் என்ன பேசியிருப்பார் என்பது சரிவரத் தெரியாவிட்டாலும் அவர் அங்கே வரப் போகிறார் என்பது மட்டும் செந் தமிழுக்கும் புரிந்தது.

வந்தார். செங்கமலமும் உடன் வந்தாள். தலைவர் அவன் அருகே சென்று அமர்ந்து கொண்டார். எழுந்திருக்க முயன்றவனை அவர் அனுமதிக்கவில்லை.

"இப்படியே எத்தினி நாளைக்கி நீ இருக் கப் போறே. வெளியே வரணும்ப்பா. வந்து நாலு பேரோட பேசிப் பழகினா எல்லாஞ் சரியாயிரும். சின்னப் புள்ளையா நீ.." அவர் பேசிக் கொண்டே போனார்.

"இல்லீங்க தலைவரே. என்னை மன்னிச் சுடுங்க. இனிமே நான் எங்கேயும் வர்ற மாதிரி இல்லே. அந்த வாழ்க்கை முடிஞ்சு போச்சு. நான் இனிமே ஒதுங்கியே இருந் துடறேனுங்க.."

" நிறையப் படிச்சவங்க. இப்படியெல் லாம் மனசைக் கெடுத்துக்கக் கூடாது தம்பி.

யோசனை பண்ணு."

அவன் யோசனை பண்ணுவதற்கே அவ சியமில்லாமல் போனது. மறுநாள் காலையில் சூரிய வெளிச்சம் பரவுவதற்கு முன்பே அவன் அமைதியாகியிருந்தான்.

இரவில் என்ன நிகழ்ந்திருக்கக்கூடும் என்பது தெரியாமல் செந்தமிழ் கலங்கினாள். மாணிக்கம் குமுறிக் குமுறி அழுதான். அண்ணியின் மறைவில் தாயை இழந்தது போல் உணர்ந்தவன், இப்போது தந்தையை யும் இழந்த நிலைக்கு ஆதரவற்றுப் போனான்.

இரவு ஒன்பது மணி வரை அந்தக் குழந்தை அம்பிகாதான் தாத்தாவுடன் விளையாடிக் கொண்டிருந்தாள். மறுபடியும் மறுபடியும் பூஜை மடத்துக்குப் போய்க் குங்குமம் கொட்டு வதே வேலையாய்ப் போயிற்று அதற்கு.

காலையில், அவன் வழக்கமாகப் பருகும் ராகிக் கஞ்சியோடு போன மாணிக்கம், அண்ணன் கிடந்த கோலம் கண்டு அலறி னான். எங்கோ நடந்து போய் விட்டு வந்து, நிதானமில்லாமல் படுக்கையில் சாய்ந்த மாதிரி, ஒரு கால் தரையிலும், ஒரு கால் படுக்கையிலுமாய்க் கிடந்தான்.

அவனுடைய நெற்றியில், ஒழுங்கில்லா மல் கொஞ்சம் குங்குமம் தீற்றியிருந்தது. குழந்தை அம்பிகாதான் விளையாட்டாய்த் தாத்தாவின் நெற்றியில் இட்டு விட்டிருப் பாளா? அல்லது...?

கோதையின் பூஜையறைப் புத்தகம் படுக்கையில் கிடந்தது. முந்தின நாள் அதைத் தானே எடுத்துப் போய் அந்த மாடத்தில் வைத்து, ஒழுங்காக மலர் சார்த்தி வைத்தது, செந்தமிழுக்கு நன்றாய் நினைவிருக்கிறது. அப்படியானால்...? அவனே அந்த மாடத் துக்குப் போய் எடுத்து வந்திருக்கிறானா?

"நான் ஒண்ணு சொல்லுவேன். கேட் பீங்களா?"

"இதைத்தானே சொல்ல நினைத்தாய். சரி கேட்கிறேன்" என்று சொல்லிக் கொண்டே அவனே குங்குமத்தை நெற்றியில் இட்டுக் கொண்டிருந்தால், அதற்குச், சாட்சிகள் இல்லை. அந்த மானசிகமான உரையாடல் மற்றவர்களுக்கு அவசியமும் இல்லை.

சந்தேகத்தோடு அண்ணனின் வலது கைச் சுட்டு விரலைப் பார்த்தான் மாணிக்கம்.

அதில் குங்குமக் கறை இருந்தது! தலைவ ரும் மற்றவர்களும் அவனைக் கடைசியாகக் கண்டு மரியாதை செலுத்த வருகிறபோது, அந்த அடையாளங்கள் அவன் முகத்தில் இருக் கலாமா என்று யோசித்தாள் செந்தமிழ். படத் தில் கோதை சிரித்துக் கொண்டிருந்தாள். ●

---

" 'தனியார் மயமாக்குதல்' பற்றி பேசி, பேசி நம்ம தலைவர் ஒரு வழியாகிவிட்டார்..."

"எப்படி...?"

"பொறியியல் கல்லூரியில் மகனைச் சேர்ப் பதற்கு, அரசாங்க கரன்ஸி நோட்டு வேணுமா... தனியார் துறை நோட்டு வேணுமான்னு கேட்டாராம்..."

- நாமக்கல் பாலு





# ஜுப்பர் சிக்ஸ் போட்டி!







உலகக் கோப்பை ஸ்பெஷல் போட்டுட்டு போட்டி வைக்காம இருந்தா எப்படி? இந்தக் கேள்விகளுக்குச் சரியான விடையை எழுதுங்கள். எழுதியாச்சா? கேள்விகளுக்குப் பிறகு, கிரிக்கெட் பற்றி ஐந்து வரி (ஆறு வரிகூட வச்சுக்கலாம்) கவிதை அல்லது 'நச்' வாசகம் ஒன்றை எழுதி அனுப்புங்கள். கிண்டல், தத்துவம் என்று எப்படியாகவும் இருக்கலாம். கீழேயுள்ள கூப்பனில் உங்கள் முகவரியை எழுதி இந்தப் பக்கத்தை வெட்டி, மார்ச் இருபத்து நான்காம் தேதிக்குள் எங்களுக்கு அனுப்புங்கள். உறையின் மேல் 'கிரிக்கெட் போட்டி' என்று குறிப்பிட மறவாதீர்கள். ஐந்து விடைகளும் சரியாக எழுதிய நபர்கள் சூப்பர் சிக்ஸுக்குச் செல்வார்கள்! அவர்களுள் மிகச் சிறந்த கிரிக்கெட் கவிதை அல்லது வாசகம் எழுதும் மூவருக்குப் பரிசுகள். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

### கேள்விகள்

1) டான் பிராட்மன்.................................. விளையாட்டிலும் சிறந்து விளங்கியவர்

2) முதன்முதலில் .............................. நகரத்தில்தான் செயற்கை ஒளி வெள்ளத்தில் ஒருநாள் கிரிக்கெட் போட்டி நடந்தது.

3) சர்வதேச கிரிக்கெட் போட்டிகளில் செஞ்சுரி அடித்த முதல் இந்திய வீரர் ..............................

4) ஒரு டெஸ்ட் தொடரின் ஐந்து மேட்ச்களிலும் டாஸ் வென்ற இந்திய அணி கேப்டன் ..............................

5) கால்பந்து உலகக் கோப்பை, கிரிக்கெட் உலகக் கோப்பை, இரண்டிலும் இது வரை இடம் பெற்ற ஒரே வீரர் ..............................

6) கவிதை / வாசகம் :

## பரிசுகள்!




வழங்கும்

**முதல் பரிசு 21 inch. கலர் டி.வி.**

மற்றும்

இரண்டாம் பரிசு ரூ.3,000/-

மூன்றாம் பரிசு ரூ.2,000/-

பெயர் : ..............................

முகவரி : ..............................

..............................

..............................

..............................





# சியர்ஸ்!

"படிச்சுக்கிட்டே சாப்பிடலாம்...சாப்பிட்டுக்கிட்டே படிச்சுக்கலாம்... காத்தடிக்குது... காத்தடிக்குது" என்று பிரபுதேவா ஸ்டைலில் பாட வைத்திருக்கிறது பெங்களூரின் நவீன நூலகம் 'சியர்ஸ்.'

பெங்களூரில் ரெஸிடென்ஸி சாலையில் புதிதாக ஆரம்பித்திருக்கும் 'லைப்ரரி - கேஃபேடிரியா' தான் 'சியர்ஸ்!' இந்தியாவிலேயே இங்குதான் முதன்முறையாக நூதன நூலகத்தைத் தொடங்கியிருக்கிறார்கள்.

"பெங்களூரில் பப் நிறைய இருக்கிறது. ஆனால் குடிப் பழக்கம் இல்லாதவர், வெறும் டீ காபி அருந்துபவர் எங்கு போவார்? 'சியர்ஸி'ல் இஷ்டமான புத்தகம் படித்துக் கொண்டே, ரிலாக்ஸ்டாக தேநீர் அருந்தலாம். மொத்தம் பதினாறு வகைகளில் சுத்த சைவ சாப்பாடு கிடைக்கும். ஆல்கஹால் அற்ற வொய்ன், ஷாம்பெய்ன், பியர் வழங்குகிறோம். போதையுடன் இருந்தால் புத்தகத்தை அனுபவிப்பது எப்படி?" என்கிறார் நிர்வாகி குல்லூ அஸோமல்.

வெளிநாட்டிலேயே பிறந்து வளர்ந்த குல்லூ சில வருடங்களுக்கு முன்தான் பெங்களூர் வந்திருக்கிறார். புது மாதிரியாக ஏதேனும் செய்ய வேண்டும் என, தீவிரமாக யோசித்ததன் பலன்தான் 'சியர்ஸ்!'

நூலகத்தின் பெயர் அமெரிக்காவில் மிகப் பாப்புலரான டீ.வி சீரியலின் பெயராம்! இங்கு ஐயாயிரத்துக்கும் மேற்பட்ட புத்தகங்கள், பத்திரிகைகள், ஸீடிக்கள் உள்ளன. ஆடியோ புக் க்ளப் இதன் சிறப்பு! படிக்கப் பிடிக்கவில்லையா, ஹெட்ஃபோனை மாட்டிக் கொண்டு கேட்கலாம். ஜம்போ ஸ்க்ரீன் இங்கு உண்டு. உங்களுக்குப் பிடித்த க்ளாஸிக் மூவியைத் திரையில் பார்க்கலாம்.

அபூர்வமான ஹாலிவுட் திரைப்படங்கள், சீரியல்கள் பார்க்க ஏங்குபவர்கள் கூட்டமும், அதிகமாம்!

உள் அலங்காரமும் வெகு பளிச்! குளிர்சாதன வசதியுடன் கூடிய, ரம்மியமான, கண்ணை உறுத்தாத சூழலில் அலங்கரித்திருக்கிறார்கள். நல்ல மெத்தென்ற சோபாசெட்டுகள், தூசியற்ற புத்தகங்கள், கண்ணைக் கவரும் வகையில் அடுக்கப்பட்டிருக்கின்றன.

ஆயுள் உறுப்பினர் கட்டணம் ஆயிரம் ரூபாய். மாதாந்திரக் கட்டணம் நூறு ரூபாய். புத்தகங்களை வீட்டிற்கு எடுத்துப் போகலாம்.

எங்குமேயில்லாத மினரல் வாட்டர். ஃப்ளேவர்டு (எஸென்ஸ் கலந்த!) குடிநீர். பலவகை சூப்கள், சாலட்கள்... சாப்பாடும் இந்தியன், இத்தாலியன், முட்டையில்லாத கேக், இயற்கை பானங்கள் என்று சுத்த சைவ பிராண்ட்! அப்படியானால் புத்தகங்கள்...? அதிலே அசைவ வகையும் இருக்குமாம்!

— லதா சேகர்

தரையில் அப்படியே உட்கார்ந்து விட்டான் சுந்தர்.

பற்களால் உதடுகளைக் கடித்தான்.

கண்களை இறுக மூடிக் கொண்டான். தளும்பிய நீர் வழிந்தது. மறுபடியும் அந்தத் தாளை வாசித்தான்.

'சட்டை உரித்துக் கொள்ளும்
பாம்பின் வசதியாவது
வசப்பட்டிருக்க வேண்டும்.
வெம்மை கொப்பளித்தெழும்
மனதின் உணர்வுகளை
வலி தெரியாமல்
பிய்த்தெறிய...
துயரங்களையெல்லாம்
அழித்தொழிக்கும்
தீத்துளியாய்
ஒரு சொட்டுக் கண்ணீர் விழுந்து
எரித்து விட்டுப் போகட்டும்
என்னை...!'

நெருப்புக்குள் விழுந்து கிடப்பது போலிருந்தது. கையில் வைத்திருந்த கவிதைத்தாள் மலையென கனத்தது.

அஞ்சலியின் மன உணர்வுகள் அப்படியே இந்தக் கவிதைக்குள் உட்கார்ந்திருப்பதை சுந்தர் உணர்ந்தான்.

பட்டாம் பூச்சியின் துள்ளலோடும், பனித்துளியின் ஈரத்தோடும் பற்றியெரிய



# யாரிடம் சொல்வேனடி தோழி!

வேண்டும்?

கவிதையின் ஒவ்வொரு வார்த்தைகளிலும் அஞ்சலி இருந்தாள். அஞ்சலியின் மனத்தகிப்பு இருந்தது - அஞ்சலியே கவிதையாகியிருந்தாள்.

'ஒரு சொட்டுக் கண்ணீர் விழுந்து எரித்துவிட்டுப் போகட்டும்... என்னை' என்று அஞ்சலி எழுதியிருப்பதன் அர்த்தம் சுந்தருக்குப் புரிந்தது போலவும், புரியாதது போலவும் கண்ணாமூச்சி காட்டியது.

கவிதைத் தாளை முகத்தோடு சேர்த்தணைத்தான். வார்த்தை நெருப்பில் கண்ணீர்த் துளிகள் பட்டதும் சாம்பல் நெடி. மல்லாந்து படுத்தான்.

சுந்தரை மையமாக்கி வீடே சுற்றியது. இட வலமாக, வல இடமாக மாறி மாறிச் சுற்றின.

கண்கள் இருட்டிக் கொண்டு வந்தன.

'இரவு சாப்பிட்டு விட்டுப் படுத்த எனக்கே இப்படி என்றால், நேற்றிலிருந்து சாப்பிடாமலேயே இருந்த அஞ்சலிக்கு எப்படியிருக்குமோ? காலையிலிருந்து இவ்வளவு வேலைகளையும் தனியாளாய் அரக்கப் பரக்கச் செய்துவிட்டு பள்ளிக்குக் கிளம்பியிருக்கிறாள்...!'

எண்ணங்கள் மனசுக்குள் அலை பாய்ந்ததில், கரையொதுங்கிக் கிடந்தான் சுந்தர்.

பேருந்தை விட்டு இறங்கினாள் அஞ்சலி. பேருந்து கடக்கும் வரை இறங்கிய இடத்திலேயே நின்றிருந்தாள். பெருஞ் சத்தம் குறைந்து, ஒலி அடங்கும்வரை கூர்ந்து கவனித்தாள். சட்டென்று அந்த இடமே அரவமற்றுப் போய், தனிமை அவளைக் கவ்வியது.

நடக்க அடி எடுத்து வைத்தாள். கால்கள் வெறும் பைகளைப் போல் துவண்டு விழுந்திருந்தன. தொட்டுப் பார்த்தாள். சில்லிட்ட உலோகத்தைப் போல் குளிர்ந்து கிடந்தன. சிரமத்துடன் மீண்டும் எடுத்து வைக்க நினைக்கையில், கல்தூண் ஒன்றை அசைத்தெழுப்புவது போல் வலியாய் இருந்தது.

புளிய மரத்தடியில் உட்கார்ந்து கொண்டாள். அம்மாவின் மடியில் உட்கார்ந்து கொண்டதைப் போல் மனம் இலேசாய் அமைதியானது.

அஞ்சலி, எழுந்து விறுவிறுவென்று நடக்கத் துவங்கினாள். 'மனசு தனி, உடம்பு தனி, இரண்டையும் ஒன்றாக்கிக் கொள்வதில்தான் நான் சோர்ந்து போகிறேன். விடக் கூடாது.... ''முடிவுடன் விரைந்து நடந்தாள்.

மூச்சிரைத்தது. தவிர்த்தாள். கால்கள் தடுமாறின. சமாளித்தாள். வழக்கமாய் பதினைந்து நிமிடங்களில் கடக்கும் தூரத்தை, பத்து நிமிடத்தில் கடந்திருந்தாள். பள்ளிக் கட்டடம் கண்ணில் பட்டவுடன் சந்தோஷமானது மனசு.

பையை மேசையில் வைத்துவிட்டு, அப்பாடா என்று உட்கார்ந்தாள். தண்ணீர் குடித்தாள். அப்படியும் பசித்தது. ஆசுவாசப்படுத்திக் கொண்டாள். வெற்றிக் களிப்பு அவளை இலேசாக்கியிருந்தது. முடியாது, உன்னால் முடியாது என்று சவால் விட்ட உடலை, வெற்றி கொண்ட பெருமிதம் மனசெங்கும் நிறைந்தது. முடியாததை முடித்துக் காட்டுவதில் உருவாகும் சந்தோஷமே அலாதியானதுதானே...!

நாற்காலியை விட்டு எழுந்து... ''எல்லாரும் பிரேயருக்குப் போங்க...ங்க!'' என்று சொல்லும்போதே, தலை 'விண்'ணென்று தெறித்தது. கண்களில் மின்மினிப் பூச்சி வெட்டியது.

கைகளால் நெற்றியைப் பிடித்துக் கொண்டு நடக்க எத்தனித்தாள்.

'பேசாம லீவு எடுத்துட்டு வீட்டுக்குப் போய் விடலாமே...!' யோசிப்புச் சங்கிலி மெல்ல அறுபட, அப்படியே தளர்ந்து போய், தரையில் சாய்ந்தாள்.

அ. வெண்ணிலா

"ஏய்... டீச்சரு விழுந்துட்டாங்கடோய்...'' குழந்தைகள் கூச்சலிட்டபடியே ஓடிவர, தலைமை ஆசிரியரும் பதற்றத்தோடு ஓடி வந்தார்.

இரு கைகளாலும் துணியைப் பிடித்துக்கொண்டு, கையை ஆட்டுவதைப் போலவே, காலையும் ஆட்டிக் கொண்டே பாத்திரத்தைச் சுழற்றி சுழற்றி, பொங்கி விடாமல் அடுப்பின் மேல் வைத்தான் சுந்தர்.

நிறைய கவனம் வேண்டியிருக்கிறது, பால் காய்ச்சுவதற்குக் கூட. ஏமாறுகிற ஒரு கணத்தில் பொங்கி வழியக் காத்திருந்தது பால்.

திரும்பி கூடத்தைப் பார்த்தான்.

பாரதி வாயில் நாய் பொம்மையை வைத்து எச்சில் செய்து கொண்டிருந்தான்.

"டேய்... பாரதி, அப்பா சொல்றேன்ல. பொம்மைய வாயில வைக்காத!''

ஒருகணம் திரும்பி இவனைப் பார்த்தான் பாரதி. பிறகு, வழக்கமாய் அவனது விளையாட்டைத் தொடர்ந்தான்.

கையெல்லாம் உமிழ்நீர், மோவாயில், கன்னத்தில், சட்டையிலென எங்கும் ஈரம்.

'இத்துனூண்டு வாண்டுப் பையன், நம்மக்கிட்ட என்ன வேலை காட்டுறான்? இதுவே இந்நேரம் அஞ்சலியா இருந்தா ஒரு குரல் கொடுத்தாப் போதும். அவ சொல்றபடி எல்லாம் கேட்பான். குழந்தைங்க நாம சொல்றதைக் கேக்கிறதுக்குக்கூட, அவங்களோட நெருக்கமாப் பழகணும் போலிருக்கு...!'

இரண்டு நாட்களின் இறுக்கமும், அஞ்சலியின் கவிதை தந்த மனச் சோர்வும் சுந்தருக்கு என்னவோ போலிருந்தது.

சிறிது நேரம் கட்டிலில் புரண்டு கொண்டிருந்தவனுக்கு வீட்டின் அமைதி இம்சித்தது. சட்டென நினைவுக்கு வந்தது.

'பாரதி பக்கத்து வீட்லதானே இருப்பான்?'

தலையில் லேசாய் தட்டிக் கொண்டே, சட்டையை மாட்டிக் கொண்டு ஓடினான்.

பக்கத்து வீட்டில் பாரதியைத் தூங்க வைக்க தொட்டிலில் போட்டு ஆட்டிக் கொண்டிருந்தார்கள்.

ஒடுங்கிய குரலில் அந்த வீட்டுப் பெண் பாடிக் கொண்டிருந்தாள். இவனது காலடி ஓசையைக் கேட்டதும், 'டக்'கென பாடலை நிறுத்தினாள்.



"இன்னிக்கு லீவு போட்டிருக்கேன். கொடுங்க, பாரதியைப் பாத்துக்கிறேன்...!'' என்றான் சுந்தர்.

"இருக்கட்டுமே... தூங்கப் போறான். முழிச்சப்புறம் எடுத்துட்டுப் போங்களேன்...!''

"பரவாயில்ல, கொடுங்க. நா தூங்க வச்சிக்கிறேன்...!''

தொட்டில் துணியை விலக்கி, பாரதியை தூக்கித் தந்தாள் அந்தப் பெண்.

வாய் நிறைய சிரிப்போடு தாவிக் கொண்டு வந்தான் பாரதி.

"திருட்டுப் பையா, இவ்வளவு நேரமும் தூங்குகிற மாதிரி கண்ணை மூடிட்டுக் கிடந்த, இப்ப அப்பாவைப் பாத்ததும் சிரிப்பு பொங்கி வழியுதா...?'' என்றபடியே செல்லமாய் கன்னத்தில் குத்த, அதற்கும் பாரதி சிரித்தான்.

ஏதோவொரு உந்துதலில் சுந்தர், பாரதியைத் தூக்கிக் கொண்டு வந்து விட்டானே தவிர, அவனை சமாளிக்க முடியாமல் பெரும் சிரமப்பட்டான்.

வாசலுக்குத் தூக்கிப் போனான்; தோட்டத்திற்கு கூட்டிப் போய் அணில், பூக்கள் காட்டினான்.

விடாமல் அழுதான்.

"ஏன் அழறான்...? ஒருவேளை பசியாயிருக்குமோ, ச்சே... இது தோணாமப் போச்சே...!'

குழந்தையை விட்டுவிட்டு, பால் காய்ச்ச வந்தால், அதுவும் அமர்க்களம் செய்தது... இன்னொரு குழந்தையாய்.

ஒருவழியாய், கொதிக்க வைத்து இறக்கி, ஆற்றி, சூடு பார்த்து, பாரதியை மடியில் உட்கார வைத்து, குடிக்க வைத்தான்.

'இன்னிக்கு ரொம்ப அதிர்ஷ்டம்தான்.

பாரதி பாஸ்கர்
எழுதும்
# பூப்போல... பூப்போல...
மினிதொடர் அடுத்த இதழில் ஆரம்பம்!

ஒழுங்கா குடிச்சிட்டானே...!'

வாயைத் துடைத்து, வேறு சட்டை மாற்றி, குழந்தையுடன் தெருவுக்கு வந்து தோளில் போட்டுக் கொண்டு, நடந்த படியே தட்டிக் கொடுத்தாள்.

தெருக்கோடியை வெறித்தாள்.

'இப்ப அஞ்சலியும் வந்தா எவ்வளவு நல்லா இருக்கும்!' நினைக்க நினைக்க மனம் ததும்பியது.

பாரதி தூங்கி விட்டிருந்தாள்.

முகத்தைத் துடைத்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தாள் அஞ்சலி.

"என்னாச்சம்மா...?" என்று பதற்றம் தணியாமல் கேட்டார் தலைமை ஆசிரியர்.

"ஒண்ணுமில்லைங்க... சார் லேசான தலைசுத்தல். அவ்வளவுதான்..." சொல்லிக் கொண்டே கைகளை ஊன்றிக் கொண்டு எழுந்தாள்.

குழந்தைகள் மலங்க மலங்க விழித்தபடி சுற்றி நின்றிருந்தனர்.

"ஒண்ணுமில்லே... போங்க... போங்க..." என்றாள் அஞ்சலி.

"இதைக் கொஞ்சம் குடிம்மா...!"

சமையல்கார ஆயா ஒரு சொம்பில் சாதம் கரைத்த நீரைக் கொண்டு வந்து நீட்டினார்.

வாங்கி அப்படியே குடித்தாள்.

பசி, வயிற்றினுள் உழன்று கொண்டிருந்த நெருப்புப் பந்து அணைந்தது.

"சார்... உடம்புக்கு என்னவோ போலி ருக்கு. இன்னிக்கு நான் லீவு எடுத்துக் கிறேன்..." தலைமையாசிரியரிடம் சொல்லி விட்டு, பையை எடுத்துக் கொண்டு பள்ளி வளாகத்தை விட்டு வெளியே வந்தாள்.

மனசெங்கும் எண்ணங்கள் அலை மோதின.

சுந்தர், குழந்தை, வாழ்க்கை, கவிதை, கோபம், நியாயம், துக்கம், வருத்தம்... என் னென்னவோ மாறி மாறி, மனக் கண்ணில் தோன்றின.

இந்த, இந்த நிமிடமே, சுந்தரைப் பார்க்க வேண்டும் போலிருந்தது அஞ்சலிக்கு.

பேருந்தை விட்டு இறங்கி, வீட்டை நோக்கி நடந்தாள்.

'சுந்தருக்கு போன் செய்து, மதியம் விடுப்பு எடுத்துக்கொண்டு வரச் சொல் வோமா?' யோசித்தாள்.

பசி, வயிறு பிசைந்தது. முதலில் வீட் டுக்குப் போய் சாப்பிடுவோம், பிறகு பேசிக் கொள்ளலாம் என்று சமாதானப் படுத்திக் கொண்டு நடந்தாள்.

வீட்டை நெருங்கும்போதே, வாசலில் பூட்டு தொங்காதது தெரிந்தது.

'அய்யோ... சுந்தரும் நமக்கு முன்னே வந்து விட்டானோ...!' நினைப்பிலேயே மனம் சிறு குழந்தையாகிக் குதியாட்டம் போட்டது.

கதவு உள்பக்கம் தாழிடப்பட்டிருந்தது. உள்ளுக்குள் நடமாட்டம் ஏதுமில்லை. அழைப்பு மணியை அழுத்தினாள். யாரோ வருகிற சத்தம். சுவற்றுப் பக்கம் தள்ளி நின்று கொண்டாள்.

கதவு திறந்தது.

ஒருவரையும் காணாமல் திகைத்து, தலையை வெளியே நீட்டி எட்டிப் பார்த் தான் சுந்தர்.

சுவரோரமாய் சாய்ந்து நின்ற அஞ்சலி யைப் பார்த்ததும் இலேசாய் சிரித்துவிட்டு, எதுவும் பேசாமல்... உள்ளே திரும்பி நடந் தான்.

அவளும் பின்னால் வரும் ஓசையில் லாது போகவே, நின்று திரும்பிப் பார்த் தான்.

அங்கேயே நின்றிருந்தாள் அஞ் சலி.

சுந்தர் உள் இறுக்கத்தை உடைத்தெறிந்து விட்டு....

"என்னப்பா... அங்கே நின்னுட்டே?" என்றான்.

இந்த வார்த்தைகளுக்காகவே காத்திருந்த வளாய், வேகமாய் ஓடி வந்து அவன் கழுத்தைக் கட்டிக் கொண்டாள் அஞ் சலி.

(தொடரும்)



''சட்டசபையில் பட்ஜெட் தாக்கல் செய்யப்பட்டது' - இது என்ன காலம்?''
''கஷ்ட காலம்' சார்....!''

- நாமக்கல் பாலு



எனக்கு அவமானமாகவும் வெட்கமாகவும் இருந்தது...
என் மகன் கேட்டான்...
என் மனைவியும் கேட்டாள்...
"பேசாம இருங்க..." என்றேன் பதிலுக்கு...
"முதல்ல எவ்வளவுன்னு சொல்லுங்க..." மீண்டும் நச்சரித்தனர்.
"ஏன்... சொன்னா மட்டும் திரும்பக் கிடைச்சுடுமா...?"
"அதெப்படி கிடைக்கும்...?"
"அப்புறம் ஏன் கேட்கறீங்க?"
"சும்மா தெரிஞ்சுக்கலாம்னுதான்...?"
"என்ன நீங்க... திரும்பத் திரும்ப அதையே கேட்டுக்கிட்டு..." கோபத்துடன் எழுந்து சென்றேன்...
"ஆனாலும் இவருக்கு இவ்வளவு அஜாக்கிரதை கூடாது...?"
"எங்கேயாவது பராக்குப் பார்த்திண்டு இருந்திருப்பார்..."
ஹாலுக்குள் மீண்டும் வந்தவுடன், என்னைப் பற்றிய விமர்சனங்கள் தொடர்ந்தன...!
அலுவலகம்... ... ...
முடிந்து வீட்டிற்குத் திரும்ப பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருந்தேன்... கால் மணி நேரம் கழித்து தான் பஸ் வந்தது.... கூட்டமாக வந்த பஸ்ஸில் முண்டியடித்துக் கொண்டு ஏற எனக்குப் பிடிக்கவில்லை... அடுத்த பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன்... பத்து நிமிடங்களுக்குப் பிறகு மற்றொரு பஸ் வந்தது... நல்ல காலம், பஸ்ஸில் கூட்டமேயில்லை... காலியாக இருந்த அந்த பஸ்ஸில் அவசரமாக நான் ஏற முற்பட்ட சமயம், எனக்கு முன்னால் சென்றவன், சட்டென்று புட்போர்டில் ஏறி நின்று எதையோ எடுக்கக் கீழே குனிந்தான்... இதை எதிர்பார்க்காத நான் அவன் மீது மோத, எனக்குப் பின்னால் வந்தவன், என் மீது மோத... ஒரு சில வினாடிகள்... ஒரு வழியாக பஸ்ஸில் ஏறி சீட்டில் அமர்ந்து கொண்டேன்... பஸ் புறப்பட்டது... கண்டக்டர் வந்து 'டிக்கெட்' என்றதும், நான் பாண்ட் பாக்கெட்டிற்குள் கையை விட்டேன்... எனக்கு பகீரென்றது... என் பர்ஸ் அபேஸ் செய்யப்பட்டு விட்டது.

# சும்மாயிரு...

க. ஒப்பிலியப்பன்

எனக்கு இப்பொழுது எல்லாமே புரிந்து விட்டது... நான் யார் மீது மோதினேனோ... தப்பு...தப்பு... என்னை மோத விட்டு, என் பின்னால் வந்து என்னை மோதியவன், தன் கை வரிசையைக் காட்டி விட்டான்!

போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றேன். எனக்குத் தெரியும், போன பணம் கிடைக்காதென்று... இருந்தாலும் புகார் ஒன்றைக் கொடுத்து வைப்போமே, என்றுதான் சென்றேன்...



"என்ன சார் நீங்க? பஸ்ஸுல கூட்டமே இல்லைன்னு சொல்றீங்க..? பர்ஸில் எழுநூறு ரூபாய் வச்சிருந்ததாச் சொல்றீங்க..? எப்படி இவ்வளவு அஜாக்கிரதையா..? நீங்க சொல்றதைப் பார்த்தா, நீங்களே பர்ஸை எடுத்துக் கோன்னு சொல்லி நடந்துகிட்டது மாதிரி தான் இருக்கு...."

பர்ஸைப் பறிகொடுத்ததைவிட, போலீஸ்காரரின் இந்தப் பேச்சு - அது கேலியா - புத்திமதியா- எக்காளமா தெரியலை - வேதனையைக் கொடுத்தது. இதைச் சத்தம் போட்டு வேறு சொல்ல, மற்றவர்கள் சிரிக்க, அவமானத்தில் தலை குனிந்து கொண்டேன்!

**வீ**ட்டிற்குள் நுழைந்தவுடன், என் ஆதங்கத்தைக் கொட்டித் தீர்க்க, மகளிடமும் மனைவியிடமும் சொன்னேன்...

வீட்டிலும், காலியான பஸ்ஸில் பர்ஸைக் கோட்டை விட்ட என் கையாலாகாத் தனம்தான் அதிகமாக விமர்சிக்கப்பட்டது!

எனக்கென்னவோ அந்த பிக்பாக்கெட்காரன், கெட்டிக்காரனாக, புத்திசாலியாக, மற்றவர்கள் பார்வையில் படுவதாகத் தெரிந்தது! அடக் கடவுளே... கேவலமான தொழிலைச் செய்தவனை விட, அதனால் பாதிக்கப்பட்டவன் கேலிக்குரியவன் ஆகிறானே..? கற்பழிப்பு, பண மோசடி என்று இன்று நாட்டில் பல விஷயங்கள் இப்படித் தானே இருக்கு? நான் தீவிரமாக யோசித்து ஒரு முடிவுக்கு வந்தேன்...

நெரிசலான பஸ்ஸில், எதையாவது தொலைத்தால் மட்டுமே, அதை வெளியே சொல்வது. சுலபமாக ஏமாந்து விடும் சமயங்களில்..? 'சொல்லாதே... சும்மாயிரு" என்ற தத்துவத்தைக் கடைபிடிப்பது! ○

# அக்னிசர்மா பக்கம்

**மேஷம் :** குடும்பத்துல சுபகாரிய முயற்சிகள் நடக்கப் போகுது. வீடு, மனை வாங்க வாய்ப்பிருக்கு. தெய்வ பலம், தெளிவான மனநிலை, உங்களுக்குப் பக்க பலமா இருக்கும். எதிர்ப்புகள் காணாமப் போயிடும். வெளிநாடு போக முயற்சி பண்றவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு இருக்கு. சிலருக்குப் புதிய பொறுப்பு, பதவி வந்து சேரும். சுயமா தொழில் பண்றவங்களுக்கு ஆதாயம் உண்டு. கடன் தொல்லை மறையும். எதிர்பாராத பணம் வந்து மனசுல மகிழ்ச்சி நிறைக்கும். முன்னபின்ன தெரியாதவங்ககிட்ட அனாவசியமா வாயைக் கொடுக்க வேண்டாம்.

**ரிஷபம் :** குடும்பத்துல ஒற்றுமை நிலவும். சொத்து விவகாரத்தில் உங்களுக்குப் புதிய பொருள் சேர்க்கை உண்டு. மக்கள் நலம் சீரா இருக்கும். எடுத்த காரியத்தில் வெற்றி உண்டு. பயணத்தால் நன்மை விளையும். அலுவலகத்தில் எல்லா வகையிலும் அனுகூலம் உண்டு. சிலருக்கு இடமாற்றம், பதவி உயர்வு கிடைக்கும். இதுவரை வராமல் இழுத்தடித்துக் கொண்டிருந்த பணம் இப்ப வந்து சேரும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்குப் பெயர், புகழ் கூடப் போகுது.

**மிதுனம் :** இந்த வாரம் உங்களுக்கு கொண்டாட்ட வாரம். எதிர்பாராத பணம் வந்து சேரும். பெரிய மனுஷங்க திடீர்னு வந்து ஆதரவு தருவாங்க. எதிரிகள் விலகிப் போவாங்க. எதிர்ப்புகள் மறைந்து போகும். அலுவலகத்தில் எல்லோரும் பாராட்டும்படி நடந்துக்குவீங்க. மேலதிகாரிங்க பாராட்டு கிடைக்கும். புதிய முயற்சி கைகூடும். பணம் பலவழிகள்ல வந்து சேரும். கடன் தொல்லை நீங்கும். சினிமா, நாடகம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்துல கணவன் மனைவி உறவு இனிமையா இருக்கும். சொத்து விவகாரங்கள்ல அனுகூலமான போக்கு தென்படும்.

**கடகம் :** இந்த வாரம் எதிர்பாராத வெற்றி கிடைக்கப் போகுது. தெய்வ பலம், பக்க பலமா இருக்கிறதால நன்மைகள் குவியும். எதிர்ப்புகள் மறையும். எதிரிகள் மறைந்து போவாங்க. உற்சாகமான மனநிலை ஏற்படும். புதிய வேலை முயற்சிகள் கைகூடும். சிலருக்குப் புதிய பொறுப்புகள் வந்து சேரும். வெளிநாடு போற முயற்சி கைகூடும். சிலருக்குத் தொழில் சம்பந்தமா வெளியூர், வெளிநாடு போகும் வாய்ப்பிருக்கு. குடும்பத்துல நல்ல காரியங்கள் நடக்க வாய்ப்பிருக்கு. கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான சூழ்நிலை வரும். பெண்களுக்கு இது மகிழ்ச்சியான வாரம்.

**சிம்மம் :** குரு எட்டாம் இடத்தைப் பார்க்கறதால குடும்பத்திலே சுப காரிய முயற்சிகள் நடக்கும். வழக்கு விவகாரங்கள்ல உங்களுக்குச் சாதகமான தீர்ப்பை எதிர்பார்க்கலாம். பெண்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவாங்க. சினிமா, சங்கீதம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பணவசதி தேவைக்கேற்ப கிடைக்கும். அலுவலகத்தில் உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். அதிர்ஷ்டம் நிறைந்த திருப்பம் வரும். இதனால மனசுல மகிழ்ச்சி துள்ளும். புதிய முயற்சிகள் கைகூடும்.

**கன்னி :** இதுவரை இருந்துவந்த குழப்பங்கள், தடைகள் இந்த வாரம் நீங்கும். பிரச்னைகள் விலகும். மறைமுக, நேர்முக எதிர்ப்புகள் காணாமப் போகும். புதிய வேலை விஷயமாக வெளியூர் மற்றும் வெளிநாடு போகும் வாய்ப்பு உண்டு. மனசுல திடீர் உற்சாகம் பிறக்கும். சினிமா, நாடகம் போன்ற கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. பொன், வெள்ளி, பத்திரிகை, ஜவுளி, எலக்ட்ரிக்கல்ஸ் ஆகிய துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயம் உண்டு. குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும்.

**துலாம் :** இந்த வாரம் மனசுல துணிவு, தன்னம்பிக்கை பிறக்கும். எதிர்ப்புகள் மறையும். பண வசதி தேவைக்கேற்ப வந்து சேரும். அலுவலகத்திலிருந்த எல்லாவிதமான தடைகளும், குறுக்கீடுகளும் விலகும்.



பெயர் : சுதா நாராயணமூர்த்தி

ராசி : துலாம்

பலன் : குடும்பத்தில் மகிழ்ச்சி

# நடக்குமென்பார் நடக்கும்!

மேலதிகாரிகள் பாராட்டு கிடைக்கும். புதிய முயற்சிகள் கூடி வரும். சிலருக்குப் பதவி உயர்வு, இடமாற்றம் கிடைக்கலாம். சுயமாத் தொழில் பண்றவங்களுக்கு முன்னேற்றம் உண்டு. குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். மக்கள் நலம் சீரா இருக்கும். கலைத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு எதிர்பாராத வளர்ச்சி உண்டு. எதிர்பார்த்திருந்த நல்ல தகவல் வந்து சேரும்.

**விருச்சிகம் :** எல்லாவிதமான எதிர்ப்புகளும் இந்த வாரம் சட்டுனு காணாமப் போயிடும். பழைய கடன் தொல்லைகள் நீங்கும். இதுவரை இருந்து வந்த டென்ஷன், பகையுணர்வு மறையும். வேலை இல்லாதவங்களுக்கு, அதுக்கான வாய்ப்பு தேடி வரும். வியாபாரிகளுக்கு நல்ல முன்னேற்றம் உண்டு. வர வேண்டிய பணம் வந்து சேரும். தொழிலில் இருந்து வந்த குறுக்கீடுகள், தடைகள் விலகும். சிலர் புது வீடு, வாகனம் வாங்க வாய்ப்பிருக்கு, பெண்களுக்கு விருந்து உபசாரம், ஜாலி டூர்னு சந்தோஷமான வாரம் இது.

**தனுசு :** பண வசதி தாராளமா இருக்கும். எடுத்த காரியத்தில் வெற்றி உண்டு. அலுவலகத்தில் எல்லோருடைய ஒத்துழைப்பும், ஆதரவும் கிடைக்கும். சிலருக்குப் புதிய பொறுப்புகள், வந்து சேரும். வேலை விஷயமா வெளிநாடு போக சிலருக்கு வாய்ப்பிருக்கு. மனை, நிலம், வீடு, ரியல் எஸ்டேட் துறைகளில் ஈடுபட்டிருப்பவங்களுக்கு ஆதாயம் உண்டு. வழக்கு விவகாரங்கள்ல வெற்றி உண்டு. குடும்பத்தில் ஒற்றுமை நிலவும். மக்கள் நலம் சீரா இருக்கும். கொடுக்கல் வாங்கல் தக்க சமயத்தில் கை கொடுக்கும்.

**மகரம் :** குடும்பத்துல எல்லா வகையிலும் அனுகூலம் உண்டு. குருபலம் நிறைந்து இருப்பதால் பொன், பொருள் ஆபரணம் ஆகியவற்றின் சேர்க்கை உண்டு. சுபமங்கள காரியங்கள் நிறைவேற வாய்ப்பிருக்கு. வீடு, மனை, சொத்துக்கள்ல அனுகூலம் உண்டு. நல்லவங்க தொடர்பு கிடைக்கும். அதன் மூலம் ஆதாயம் உண்டு. புதிய வேலை முயற்சிகள் வெற்றி தரும். புது பொறுப்பு, அதிகாரம், சுதந்திரமாகச் செயல்படும் சூழ்நிலை ஏற்படும். இயந்திரம், இன்டஸ்ட்ரீஸ், கமிஷன் ஏஜெண்ட், மருத்துவம் ஆகிய துறைகளில் ஆதாயம் கொட்டும்.

**கும்பம் :** இதுவரை தாமதமடைந்து வந்த காரியங்கள் வெற்றியடையும். இதனால மனசுல மகிழ்ச்சி நிலவும். எடுத்த காரியங்களில் அனுகூலமான போக்குத் தென்படும். அலுவலகத்தில் எல்லோருடைய ஒத்துழைப்பும் கிடைக்கும். தாமதமான பதவி உயர்வு, இடமாற்றம் இப்ப கிடைக்க வாய்ப்பிருக்கு. இரும்பு, இயந்திரவகை, உலோகம், டிராவல்ஸ் போன்ற துறைகளைச் சேர்ந்தவங்களுக்கு ஆதாயம் உண்டு. குடும்பத்தில் கணவன் மனைவி உறவு நிலை இனிமையா இருக்கும். நண்பர்கள், உறவினர்களால் நன்மை உண்டு.

**மீனம் :** குரு பலம் நிறைந்து இருக்கறதால குடும்பத்துல பொன், பொருள், ஆடை, ஆபரணச் சேர்க்கை ஏற்படும். கல்யாணம் ஆகாதவங்களுக்கு அதுக்கான வாய்ப்பு வந்து சேரும். வேலை விஷயத்தில் உற்சாகமான சூழ்நிலை ஏற்படும். சிலருக்கு அதிர்ஷ்டகரமான திருப்பம் வந்து சேரும், பண நடமாட்டம் தாராளமா இருக்கும். புதிய தொழில் முயற்சிகள்ல வெற்றி உண்டு. எலக்ட்ரானிக்ஸ், கெமிக்கல்ஸ், தோல் பொருட்கள் ஆகியவை லாபம் தரும். பெண்களுக்கு இது ஜாலியான வாரம்.

**மார்ச் 19 முதல் 25 வரை**

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சாரியார்

# குறையொன்றுமில்லை

"ஏன் அழுகிறாய்?" என்று பூமாதேவியிடம் கேட்ட வராஹமூர்த்தியை நோக்கி அவள் பதில் சொல்கிறாள்:

"அடியாள் தங்களுக்கு தாஸி, பார்யை, தர்மபத்னி; தங்களுக்கு விதேயாத்மா. அடியாள் ஓலமிட்டபோது ஓடோடி வந்து காப்பாற்றினீர்கள். என் மீது இவ்வளவு சராசரங்கள் இருக்கின்றனவே... இவையெல்லாம் என்ன பண்ணினால் நீங்கள் வந்து காப்பாற்றுவீர்கள்? என்னைக் காப்பாற்றிய மாதிரி இவர்களைக் காப்பாற்ற என்ன பண்ண வேண்டும்? பெரிதாகச் சொன்னால் ஒருவரும் பண்ண மாட்டார்கள். 48 நாள் மட்டபல்லியிலே போய்ப் பிரதக்ஷிணம் பண்ணு என்று சொன்னால், யார் பண்ணுவார்கள்? எப்படிப் பண்ணுவார்கள்? 'இரண்டு வேளையும் ஸ்நானம் பண்ணுமா?' என்று ஆரம்பித்து விடுவார்கள். ஏகப்பட்ட கேள்விகள். 'யாகம் பண்ணு' என்றால் எவ்வாறு முடியும்? ஆகையினால் சுலபமாக இருக்க வேண்டும் - பெரிய பலன் வர வேண்டும்."

- இப்படி ஒரு விண்ணப்பம் வைத்தாள் பூமாதேவி.

ஆதியிலே இந்த வராஹம் தோன்றிய காலம் தொட்டு ஒரு கல்பம் (கால கட்டம்) ஆரம்பமாயிற்று. அந்த கல்பத்துக்கே வராஹ கல்பம் என்றுதான் பெயர். நம்முடைய நிலைமையெல்லாம் அம்மாவுக்கு - அந்த பூதேவி தாயாருக்குத் தெரியாதா? நன்றாகத் தெரியும். அதனால்தான் பகவானிடத்திலே, சர்வலோகபிதாவான அவனிடத்திலே, அப்போதே அவள் கேட்டு விட்டாள் : "சுவாமி! நீங்கள் பெரிதாகச் சொன்னால், பண்ணுதற்கு சக்தி கிடையாது. இலகு உபாயமாகச் சொல்லுங்கள். 'ஏ சூகர மூர்த்தியே! சுகர உபாயம் சொல்லுங்கள்' என்று கேட்கிறாள்.

அப்போது பாருங்கள், பகவான் உலகத்தார் அத்தனை பேருக்கும் ஹிதமான ஒரு வார்த்தையைச் சொன்னான். எல்லோருக்கும் பொருந்தும் படியான வார்த்தை அது. தன்னை அடையும் வழியைத் தானே எடுத்துக் காட்டினான். ஒருவராலும் அழிக்க முடியாத பேச்சாக அது நிலைத்தது. பிரும்மாண்டமான அந்த வராஹமூர்த்தி என்ன வார்த்தை சொன்னான் கேளுங்கள் :

அஹம் ஸ்மராமி மத்பக்தம்
நயாமி பரமாங்கதிம்

நயாமி - ஆத்மநேபதம் என்று பெயர் இதற்கு. 'நானே வந்து அழைத்துக் கொண்டு போகிறேன்' என்கிறான் பகவான்.

மார்கோ நேயோ அனயோ நய :

- நம்மை அழைத்துச் செல்லக் கூடியவன், கைப்பிடித்து நம்மை அழைத்துச் செல்லும் மார்கபந்து அவன்.

'நான் வந்து அழைத்துப் போகிறேன்...' என்றால், எப்போது?...

நமக்கு நன்றாகப் புஷ்டி இருக்கிற காலத்தில் அவனை ஸ்மரித்தோமானால், கடைசிக் காலத்தில் அவனே வந்து அழைத்துப் போகிறான்.

வயது ஆக ஆக, அனாவசிய விஷயத்துக்கெல்லாம் வியாகூலம், கவலை, சிந்தை வருகிறது. சிந்தை இருக்கிறதே, அது சிதையை விடக் கொடியது. ஒரு பிராணனற்ற சரீரத்தைத்தான் எரிக்கிறது சிதை. ஆனால் சிந்தையோ, பிராணனுள்ள சரீரத்தையே எரிக்கிறது. அப்படியானால் மனிதனையே உருக்கும் சிந்தைக்கு நாம் இடம் கொடுக்கலாமா? எதைப் பார்த்தாலும் கவலை அல்லவா வந்துவிடும்!

மனம் நன்றாக, காமம் புகாமல் இருக்கும் போதே உபநயனம் பண்ணிவிட வேண்டும் என்று சொன்னது இதனால்தான். வாமன அவதாரத்திலே பகவானுக்கு ஐந்து வயதிலேயே உபநயனம்!

ஏழு - அல்லது ஒன்பது வயதைத் தாண்டி விட்டால், உபநயனம் எப்போது பண்ண வேண்டும் என்று

33

கேட்கவே வேண்டாம். சாஸ்திரமே சொல்கிறது - காலம் அதீதமானால் சாஸ்திரமே கிடையாது என்கிறது.

ஒரு தந்தையினுடைய கடமை இப்படி விதித்திருக்கிறது.

அதே போல் - இளமையில் கள்ளம் புகுவது போல் - வயதாக ஆக வியாகூலங்கள் வந்து விடுகிறது. சரீரத்திலே நாடிகள் எல்லாம் நன்றாக இருக்க வேண்டும். நரம்புகள் முறுக்கேறி மிடுக்குடன் இருக்கிற போது, நல்ல முறையிலே வாக் படுத்துவம், சரீர புஷ்டி எல்லாம் இருக்கிறபோதே பகவான் நாமாவைச் சொல்ல வேண்டும் - அவனை ஸ்மரிக்க வேண்டும்.

ஏன் அவசரம்...? ஒரு எழுபது வயதுக்கப்புறம் இதையெல்லாம் வைத்துக் கொள்ளலாமே என்றார் ஒருத்தர். என்ன, எழுதிக் கொடுத்து விட்டா வந்திருக்கிறோம். எழுபது வயது என்ன நிர்ணயமா?

இன்றைக்கில்லையென்றாலும் ஒருநாள் ம்ருத்யு வருவானே. என்றைக்கு வருவான் என்று சொல்லவா முடியும்? அடுத்த க்ஷணமே கூட வரலாம். அப்படி அவர்கள் வந்தால், யமனே வந்து அவர்களுடைய சிரஸைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகிற மாதிரி நாம் முன்கூட்டியே தர்மத்தைப் பண்ணிவிட வேண்டும். ஐயோ, நமக்கு இத்தனைதானே வாழ்நாள் இருக்கிறது, என்று விரைந்து விரைந்து தர்மத்தைப் பண்ண வேண்டும்.

பொருள் ஆர்ஜனம் பண்ணுகிறபோது, நாம் பூரணமாக 120 வயது இருப்போம் என்று நினைத்துக் கொண்டு பண்ண வேண்டும். தர்மத்தைப் பண்ணுகிறபோது மட்டும் யமன் வந்து விட்டான் என்கிற நினைப்பில் அவசரமாகப் பண்ண வேண்டும்.

இவ்வாறு சின்ன வயதிலிருந்தே அப்யாஸம் இருந்தால்தானே, கடைசிக் காலத்தில் அது தானாகவே வரும். இல்லாவிட்டால், கடைசிக் காலத்தில் மட்டும் பகவன் நாமா எப்படி நம் வாயில் வரும்?

ஆழ்வார் சொல்கிறார் - வாயொரு பக்கம் இழுக்கும்; கண்ணொரு பக்கம் குத்திட்டு நிற்கும். ஒரேயடியாக மூச்சு வாங்கும். எல்லோரும் அழ ஆரம்பிக்கிற அந்தச் சமயத்திலேயா பகவான் நாமாவைச் சொல்வது?

ரொம்ப அழகாய்ச் சொல்கிறார் பெரியாழ்வார் :

'சோர்வினால் பொருள் வைத்துண்டாகில்
சொல்லு சொல்லு என்று சுற்றமிருந்து' வற்புறுத்துமாம்!

பெரியாழ்வார் விஷ்ணு சித்தர். வேத வித்து அவர். அதனால் தமிழ்ப் பாசுரத்திலேயும் அவர் வேத விழுப்பொருளை எடுத்தாள்கிறார்.

'சோர்வினால் பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லு' என்று கடைசிக் காலத்தில் ஒருத்தனைக் கேட்பார்களாம். என்ன சித்திரவதை பாருங்கள்! 'பொருள் எங்கே வைத்திருக்கிறாய்?' என்று சுற்றத்தார் பிராணன் போகிற காலத்திலே கேட்கிறார்களே... அப்போதும் கூட குத்திக் காட்டிப் பேசுகிறார்களாம்.

'உன்னைப் பற்றி எங்களுக்கு நன்றாகத் தெரியும்! நீ இருக்கிறபோதே எல்லாப் பொருளையும் ஒழித்திருப்பாய். என்ன வைத்திருக்கப் போகிறாய்? அப்படி ஒருகால் எங்களுக்குத் தெரியாமல் ஏதாவது வைத்திருந்தால் சொல்லு...' என்பார்களாம்!

அவர் பாவம், என்ன பண்ணுவார்? ஸ்ம்ருதி பலம் இல்லையே! இத்தனை நாளாக உண்டி, உடை என்று அதற்கே ஓடி ஓடி உழைத்தாயிற்று. வேறு சிந்தனையே கிடையாது. இது எங்கே கிடைக்கும்? அது எங்கே கிடைக்கும் என்று ஓடிய வண்ணம் இருந்தார்! இப்போது, 'எல்லாம் வைத்தி

## ஆரோக்கிய விருந்து!

❖ டாக்டர் எல். மகாதேவன் ஊட்டிய 'தேவ மருந்து' பயன்தரும் ஆரோக்கிய விருந்து! கன்சல்டிங் ஃபீஸ் இன்றி வாரா வாரம் மருத்துவ ஆலோசனை தந்தமைக்கு நன்றி... பாராட்டு!

அயன்புரம், த. சத்தியநாராயணன்

❖ ஸ்ரீரங்கம் கோவிலில் தன்வந்திரியை ஸேவிப்பது வழக்கம்தான். ஆனால் டாக்டர் எல். மகாதேவன் எழுதியதைப் படித்தபின், இன்னும் பரவசத்தோடு ஸேவிக்க முடிகிறது. விவரங்களைத் தெளிவாக, கோவையாகத்

தெரிவித்தார். குட்டிக் கதைகள் விறு விறுப்பும், சுவையும் கூட்டின. 'தேவமருந்து' ஈஸ்வர லீலையே!

திருச்சி - 21, இந்திரா பத்மநாபன்.

❖ பல்வேறு மருத்துவக் கட்டுரைகள் வந்தாலும் ஆயுர்வேத மருத்துவம் பற்றி அதிகம் அறியப்படாத நிலையில் பற்பல அரிய தகவல்களுடன் ஆரோக்கிய வழிகாட்டியாக வந்து கொண்டிருந்த தொடர் சடன் பிரேக் போட்டு நின்று விட்டது ஏனோ?

மயிலாடுதுறை - 1, கார்த்திக் அமர்த்யா

❖ எல்லோர் வீட்டிலும் முதலுதவிப் பெட்டி இல்லாவிட்டாலும் 'தேவ மருந்து' தொடர் இருக்க வேண்டியது அவசியம்.

சென்னை - 61, ஆர். நாகராஜன்



❖ கசப்பான மருந்தைத் தேனில் குழைத்துக் கொடுப்பது போல நகைச்சுவை நடையால் நெஞ்சில் ஆழப் பதிந்து விட்டது 'தேவ மருந்து'.

சென்னை - 61, எம். சுஜாதா.

ருக்கும் இடத்தைச் சொல்லு' என்றால், அவருக்கு ஞாபகம் வந்தால்தானே! அப்படி ஒரு நிலை! இதைப் பார்த்தாவது நமக்கு விவேகம் வரவேண்டாமா?

***மார்பகமென்பதோர் கோயிலமைத்து***
***மாதவனென்னும் தெய்வத்தை நாட்டி***
***ஆர்வமென்னும் பூவிட வல்லார்க்கு***
***அரவதண்டத்தில் உய்யலுமாமே.***

பகவானை ஸ்மரிப்பவர்களுக்கு நரக லோகத்திலே சித்ரவதை ஏது? அந்த எம்பெருமானை, நாம் உயிரோடு இருக்கிறபோதே இந்த மார்பகத்திலே பிரதிஷ்டை பண்ணி, அவன் திருவடியிலே உயர்ந்த பக்தியாகிற புஷ்பத்தை இட்டு வணங்கினால், அந்திமக் காலத்திலே அரவணை துயில்கிற அவன் திருவடிக்குப் போய்ச் சேருவோமே.

இதைத்தான் ஆழ்வாரும் சொன்னார் :

'அப்போதைக்கிப்போதே சொல்லி வைத்தேன் அரங்கத்தரவணை பள்ளியானே' என்றார்.

'அந்திமக் காலத்துக்காக இப்போதே சொல்லி வைக்கிறேன். நீ ஞாபகம் வைத்துக் கொண்டு எனக்கு அனுக்கிரஹம் பண்ண வேண்டும்' என்கிறார்.

சுவாமி தேசிகன் அழகாகக் காட்டுகிறார்: 'இந்த யாக்கையின் வழி உழல்வேன். இந்த சரீரத்தை நீ கொடுத்து விட்டாயே - இது எப்போது கீழே விழும் என்று தெரியாது.

'கூவிக் கொள்ளும் காலம் குறுகாதோ? கூவிக்கொள்ளாய் கருமாணிக்கமே' என்று பகவானை அழைத்தால், தடால் என்று வந்து விடுவான்.

கருடாருடனாக இறங்கி வந்து, 'உபன்யாஸத்தை நிறுத்திக் கொள். நாளையிலேயிருந்து வேறு யாராவது பண்ணுவார்கள். நீ வா, நாம் போகலாம்' என்று இப்போது கூப்பிட்டால், அடியேன் போயாக வேண்டும்.

ஆனால் நமக்கோ, 'இப்படி மாம்பலம் போவோமா?' என்று தோன்றுமேயொழிய பகவானே வந்து கூப்பிட்டாலும் போவதற்கு யார் சித்தம்? உபன்யாஸத்திலே சொல்வதற்கு நன்றாக இருக்கிறது; கேட்பதற்கும் நன்றாகவே இருக்கிறது. ஆனால் கூப்பிட்டால் உடனே போவதற்கு யார் சித்தமாயிருப்பார்கள்! 'இப்போது வா என்னோடு' என்றால் அவனோடு போக யார் சித்தம்?

நாம் கூப்பிட்டால் உடனே வந்து விடுவான் அவன். அவன் பேரில் தோஷமில்லை. ஆனால் நாம்தான் அவன் வர வேண்டுமா, என்பதை நிச்சயம் பண்ணிக் கொள்ள வேண்டும்.

பகவானைப் பார்த்து, 'அப்பனே! நீ வந்து விடுவாய்! நான் உன்னோடு கூட வருவேனா தெரியாது. அதனால் ஒன்று பண்ணு... நீ இந்த சரீரத்தைக் கொடுத்து விட்டாய், இது என்றைக்குக் கீழே விழுமோ தெரியாது. இது கீழே விழும் நாள் உனக்குத் தெரியுமல்லவா. மறுபடியும் இன்னொரு சரீரத்தைக் கொடுக்காமல் உன் திருவடியிலே சேர்த்துக் கொள்' என்று நாம் கேட்டு விட்டோமானால், போதும்.

பகவான் எவ்வளவு நம் வாக்குக்குக் கட்டுப்படுகிறான் பாருங்கள்!

(வளரும்)



# குல்லு மல்லு

—கதிர்


என்னடா லல்லு, இன்னும் குல்லுவ காணோம்?
மியாவ்... மியாவ்


ஹாய், மல்லு...
ஹ! உனக்கு நூறு ஆயுசு


ஒரு நல்ல மியூசிக் கம்போஸ் பண்ண விட மாட்டாங்கப்பா...
நல்ல மியூசிக் கம்போஸ் பண்றேன்னு மக்கள கன்ஃபியூஸ் பண்ணாதடா


கன்னா பின்னான்னு பேசாம கண்ண ஒரு நிமிஷம் மூடித் திற.






எது செஞ்சாலும் சொல்லிட்டு செய்யு!

கல்கி

KALKI 23.3.2003 இதழுடன் இலவச இணைப்பு



# அத்தை : ஓர் அழகிய சகாப்தம்

ருக்மிணி தேவி நூற்றாண்டு

# சரித்திரம் படைத்தவர்

இன்று, உலகில் கலையும் கல்வியும் தழைக்கும் தலங்களெங்கும் அறியப்படுபவர்; மதிக்கப்படுபவர்...

– ஒரு நபரின் நூற்றாண்டைக் கொண்டாட இந்தக் காரணம் போதாதா?



ஆனால், கல்கி வார இதழும் கல்கி சதாசிவம் அறக்கட்டளையும் ருக்மிணி தேவி நூற்றாண்டைக் கொண்டாடுவதற்கு மேலும் ஒரு தனிப்பட்ட காரணம் இருக்கிறது.

கல்கி இதழ் ஸ்தாபகர்களான கல்கி கிருஷ்ணமூர்த்தி, சதாசிவம் - எம்.எஸ். சுப்புலக்ஷ்மி தம்பதி ஆகியோர் ருக்மிணி தேவியிடம் அளவற்ற மதிப்பும் அன்பும் கொண்டவர்கள். அவருடைய கலைக்கோட்பாடையும் வாழ்க்கை நெறிகளையும் முழுமனத்தோடு பகிர்ந்து கொண்டவர்கள்.

தேசநலன் என்பது தனிமனித மனவளத்தைப் புறக்கணிக்கவே முடியாது என்பதைத் தீவிரமாக உணர்ந்த கல்கி இதழ், அத்தகைய மனவளத்தை வழங்கும் கலைகளையும் உயர் ரசனையையும் என்றுமே போற்றி மகிழ்ந்திருக்கிறது. வாசகர்களோடு அவற்றைப் பகிர்ந்து மனங்களை நிறைக்கவும் உயர்த்தவும் முயன்று வருகிறது. அந்த முயற்சியின் தொடர்ச்சியே ருக்மிணி தேவி நூற்றாண்டு விழாக் கொண்டாட்டங்கள். இந்த இதழில் ருக்மிணி தேவியின் நினைவைப் போற்றியிருக்கிறோம்....

– ஆசிரியர்

# கல்கி சதாசிவம் நினைவு அறக்கட்டளை இனிதே வரவேற்கிறது!

## கல்கி சதாசிவம் நினைவு விருதும், மாணவர்களுக்கு உதவித் தொகையும் வழங்கும் விழா மற்றும் ருக்மிணி தேவி அருண்டேல் நூற்றாண்டு அஞ்சலி

நாள் : **22, மார்ச் 2003, சனிக்கிழமை**
நேரம் : **மாலை 5.30 மணி**
இடம் : **கலாக்ஷேத்ரா ஆடிட்டோரியம், திருவான்மியூர், சென்னை - 41**

### நிகழ்ச்சி நிரல்

5:45: தலைமை உரை:
**எஸ்.ஆர். அய்யர்** *(முன்னாள் தலைவர், ஓ அண்ட் எம்)*

6:00 : **விருது, உதவித் தொகை வழங்குதல்**

6:20 : ருக்மிணி தேவி பற்றிய சிறப்புரை – **சி.வி. சந்திரசேகர்**

6:35 : ருக்மிணி தேவியுடன் பணியாற்றியவர்களுக்கு நினைவுப் பரிசு வழங்குதல்

6:45 : **லீலா சாம்ஸன்** பரத நாட்டியம்

*நிகழ்ச்சியின் முடிவில், மாநகரப் பேருந்து ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.*

## *அனைவரும் வருக!*

## அத்தை:
## அழகிய சகாப்தம்

முப்பது வயதுக்கு மேற்பட்ட பின்னரே நாட்டியம் கற்க ஆரம்பித்தார் ருக்மிணி தேவி. தேவதாசிப் பெண்கள் மட்டுமே ஆடிவந்த சதிர் என்கிற நடனத்தை ஒரு பிராமணப் பெண் கற்றுக் கொண்டதும் (அதுவும் அத்தனை வயதுக்கு மேல்) அரங்கேற்றியதும் பெரும் புரட்சிதான். ஆனால் அது ருக்மிணி தேவி நிகழ்த்திய முதல் புரட்சி அல்ல! தமது பதினாறாவது வயதில் தம்மினும் இருபத்து நான்கு வயது மூத்தவரான டாக்டர் அருண்டேலை அவர் மணந்ததுதான் முதல் புரட்சி.

ருக்மிணியின் தந்தை நீலகண்ட சாஸ்திரி. அவருக்குப் பூர்விகம் தஞ்சை மாவட்ட திருவிசைநல்லூர். அம்மா சேஷம்மாவுக்கோ திருவையாறு. ருக்மிணி எட்டு குழந்தைகளுள் ஒருவர். மதுரையில், பிப்ரவரி 29, 1904ம் ஆண்டு பிறந்தார்.

ஆசாரமான பிராமண குடும்பத்துப் பெண்தான். எவ்வாறு ஊர் பேசும் அளவுக்கு ஒரு புரட்சித் திருமணம் நடந்தது? நீலகண்ட சாஸ்திரி தியாஸாஃபிகல் சொஸைட்டி எனப்படும் பிரும்ம ஞான சபையின் பணிகளில் ஈடுபாடு கொண்டிருந்தவர். அதே அமைப்பில் நெருங்கிய தொடர்பு கொண்டு பணியாற்றிய அன்னி பெஸன்ட் அம்மையார், டாக்டர் அருண்டேல் போன்றோருடன் அவர் குடும்பத்தினருக்கும் பழக்கம் ஏற்பட்டது. இயல்பிலேயே அறிவும், அழகும், சூட்சுமமும் பொருந்திய ருக்மிணியை விரும்பிய டாக்டர் அருண்டேல், நீலகண்ட சாஸ்திரி காலமான பிறகு அவரைத் திருமணம் செய்து கொள்ள முன்வர, சென்னையில் ஒரு பூகம்பமே வெடித்தது. அந்த இள வயதிலும் தன்னையுணர்ந்து, டாக்டர் அருண்டேலின் அன்பை ஏற்றார் ருக்மிணி தேவி.

திருமணத்துக்குப் பின் உலக நாடுகளை (பிரும்ம ஞான சபை பணிகளுக்காக) வலம் வந்தனர் இந்த அபூர்வத் தம்பதி. ஒரு பயணத்தினிடையே ரஷ்ய பாலே நடனக் கலைஞர் ஆனா பாவ்லோவாவைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்பட்டது ருக்மிணிக்கு. அந்த நடனத்தின் உயர்வும் உன்னதமும் மிகவும் பிடித்துப் போயின. தாமும் பாலே கற்க ஆரம்பித்தார். அக் கட்டத்தில், 'உனது சொந்த நாட்டின் நடன வகையைக் கற்றுக் கொண்டு ஆட முயற்சி செய்' என்று ருக்மிணிக்குள் ஒரு தூண்டுதலை ஏற்படுத்தி வைத்தார் ஆனா பாவ்லோவா.

சென்னை திரும்பிய பிறகு ஒரு முறை மீனாக்ஷி சுந்தரம் பிள்ளையின் மாணவிகள் ஜீவரத்தினம், ராஜலக்ஷ்மியின் நடன நிகழ்ச்சியைப் பார்க்க நேர்ந்தது. தாமும் நடனம் கற்க வேண்டும் என்று உடனே முடிவு செய்தார். ஒரு நல்ல குருவைத் தேடி அலைந்து மயிலாப்பூர் கௌரி அம்மாளின் சிஷ்யையானார். கௌரி அம்மாள், சென்னை கபாலீஸ்வரர் ஆலய நர்த்தகியாக இருந்தவர். கௌரி அம்மாளிடம் பயின்றதில்



திருப்தி அடைந்து விடாமல் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடமும் கற்றார். இந்த இரு நாட்டியாச்சார்யர்களும் பின்னர் ருக்மிணி தொடங்கிய கலாக்ஷேத்ரா கலைக் கல்லூரியிலும் வகுப்புகள் நடத்தினார்கள்.

சென்னை அடையாறில், 1935ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் நடந்த பிரும்ம ஞான சபைக் கூட்டத்தில் ருக்மிணி தேவி வழங்கிய நடன அரங்கேற்றம் ஒரு வரலாற்றுப் பதிவு. தேவதாசி பிரிவைச் சாராத, ஒரு பெண் நாட்டிய நிகழ்ச்சி நடத்தியது அதுவே முதல் தடவை. திறந்த வெளியில், மரங்கள் சூழ, நட்சத்திரங்கள் பதித்த கருநீலவானமே விதானமாக, எளிமையும் அழகும் பொருந்திய உடை, ஒப்பனை பூண்டு தெய்வீகத் தோற்றத்துடன் அன்று ருக்மிணி தேவி ஆடியதைக் கண்டவர்கள் நாட்டியக் கலையின் உன்னதத் தன்மையை உடனே உணர்ந்தார்கள்.



• அருண்டேல்

ருக்மிணி தேவி நாட்டியம் கற்றதை எதிர்த்தவர்களும் 'நிகழ்ச்சிக்கு வர மாட்டோம்' என்று பகிஷ்காரம் செய்தவர்களும் கூட, நாட்டியம் என்பது மலிவான மனித கேளிக்கை அல்ல; இறையர்ப்பணமாக வேண்டிய கலை என்பதை உணரச் செய்தது இந்நிகழ்ச்சி.

ஒரே வருடத்தில் அரங்கேற்றம் செய்யும் அளவுக்குப் பயின்று தேர்ச்சியுற்ற ருக்மிணி தேவி, பிரும்ம ஞான சபை வளாகத்திலேயே (அடையாறு) கலாக்ஷேத்ரா நாட்டியக் கல்லூரியை விரைவில் ஆரம்பித்தார். (ஜனவரி 6, 1936). அவருடைய சகோதரன் ஸ்ரீராமின் மகள் ராதா (இப்போது பிரும்ம ஞான சபை தலைவராக விளங்கும் ராதா பர்னியர்) முதல் மாணவி. 'அத்தை' என்று அவர் ருக்மிணி தேவியை அழைக்கப் போக, அப்பெயரே நிலைத்துப் போயிற்று.

"Today it is a cottage; tomorrow it will be a community" என்று இந்த முயற்சி குறித்துக் குறிப்பிட்டார் டாக்டர் அருண்டேல். மனைவியின் முயற்சிக்கு உற்சாகமும் ஆதரவும் கொடுத்த அவர் 1945ல் காலமாகி விட்டார். ஆனால் ருக்மிணி தேவியின் பணி தொடர்ந்தது, விரிவடைந்தது. அவரது கடைசி மூச்சு வரையில் அவருடைய வாழ்வின் இலக்காக – அழகிய இலட்சியமாக விளங்கியது.

"நாட்டியக் கலைக்கு ஒரு பயிற்சித் திட்டம் (syllabus) வகுத்து, பட்டதாரிகளை அல்லது (டிப்ளோமா பட்டதாரிகளை) உருவாக்குவதென்பது மட்டும் கலாக்ஷேத்ராவின் நோக்கம் அல்ல. நாட்டியக் கலையைக் கற்றுத் தந்து, ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கிற அழகுணர்ச்சியைத் தூண்டி, கலையின் உன்னத நிலையைக் கண்டு உணரச் செய்ய வேண்டும் என்பதே அத்தையின் இறுதி இலக்கு" என்கிறார் அவருடைய மாணவராகப் பயின்று இன்று நாட்டிய குருவாக விளங்கும் சந்திரசேகர்.

'பெரிய சாரதா' என்று நாட்டிய வட்டாரங்களில் அறியப்படும் எஸ். சாரதா, தமது

பத்தொன்பதாவது வயதில் கலாக்ஷேத்தி ராவில் வந்து சேர்ந்தார். அப்போது ஸ்தா பனம் ஆரம்பிக்கப்பட்ட புதிது.

சம்ஸ்கிருத பண்டிதரான சாரதா தஞ்சையில் தாம் பார்த்திருந்த நாட்டியத்துக்கும் ருக்மிணி தேவி யின் நடனத்துக்கும் ஏராளமான வித்தியாசம் இருக்கக் கண்டார். "நட்டுவனார்கள் நாட்டியக் கலைஞரைப் பின் தொடரும் முறையை மாற்றி, மேடை அமைப் பையே கலையுணர்வோடு செய்தி ருந்தார் ருக்மிணி தேவி. உடை, ஒப்பனை எல்லாவற்றிலுமே உயரிய நேர்த்தி. கோயில் சிற்பங்களின் அலங்காரங்களை அடிப்படை யாகக் கொண்டு அவை அமைக்கப் பட்டிருந்தன. ருக்மிணி தேவி ஆடியபோது காத்த அங்க சுத்தமும் சரி, நுண்ணிய பாவ மாற்றங்களில் வெளிப்படுத்திய நுணுக்கமான உணர்வுகளும் சரி... வேறு எந்த கலைஞரி டமும் நான் கண்டதில்லை. ஆனால் அவரு டைய நடனத்தின் உயர்வு தோற்றப் பொலிவினாலும் கச்சிதத்தினாலும் விளைந் தது என்று சொல்லிவிட முடியாது... அது உள்ளிருந்து ஊற்றெடுத்த உயர்வு. பரம் பொருளை உணர்ந்து, அதன் ஜீவாதார சக்தி சகலத்திலும் வியாபித்திருப்பதை அனு பவித்த முதிர்ந்த மனத்தின் வெளிப்பாடு. மேடையில் அவர் பிரவேசிக்கும்போதே ஒரு தெய்வீகச் சூழலை எழுப்ப வல்லவராக இருந்தார்."

ருக்மிணி தேவியின் படைப்பாற்றலிலும் இந்த தெய்வீக சக்தியும் ஸ்புரிப்பும் தென்பட்டதை உடனிருந்து பார்த்தவர்கள் விவரித்திருக்கிறார்கள். 'குமாரசம்பவம்' நாட்டிய நாடகத்தில் அவருடன் நடன மாடிய அடையாறு லக்ஷ்மணன் சொல் கிறார்: "பயிற்சி நேரங்களில் அவர் தன்னை மறந்து ஆடுவதைப் பார்க்கும்போது இன் னொரு உலகத்துக்கே போய்விடுவோம். நம்மை மறந்து, அவர் சொல்ல வருகிற விஷ யத்தோடு உணர்வு பூர்வமாக ஒன்றிப்போ வோம்."

சாரதா ஹாஃப்மன். இவரும் ருக்மிணி தேவியிடம் பயின்று கலாக்ஷேத்ராவில் ஆசிரியராகப் பணியாற்றியவர். "நடனம்



• அனைத்துப் பணிகளிலும் உறுதுணையாயிருந்த சங்கர மேனனுடன் ருக்மிணி தேவி

அமைக்கும்போது ஒவ்வொரு பாத்திரத் துக்கும் உரிய குணமும் வெளிப்பட்டு விடும். ஒரு சிறு அசைவு கூட அனாவசியமாகவோ அதிகமாகவோ இராது. உணர்ச்சிகளின் வெளிப்பாடு கச்சிதமாக இருக்க வேண்டும் என்று முக்கியத்துவம் அளித்துப் பாடு பட்டார். நாட்டியம் அதிகம் பார்த்திராத போதும் பாரம்பரிய வரம்புகளை மீறாமல் புதுப் புதுப் புனைவுகளை உருவாக்கி விடுவார். மேடையிலானாலும் சரி, வாழ்க்கை முறையிலும் சரி ரசனை மிக்கதாக இருக்கும் அவர் வெளிப்பாடுகள். உடை களுக்கான துணிகளும் வண்ணங்களும், பின்னணி, திரைச்சீலை நிறங்களும் அடக்க மான அழகுடன் மிளிரும்...."

பாரம்பரிய மிக்க வண்ணங்களையும் வடிவங்களையும் காப்பாற்றிப் பிரபலப் படுத்த ஒரு நெசவுப் பிரிவையே ஆரம் பித்தார் ருக்மிணி தேவி. தாம் பெரிதும் போற்றிய மான்டிஸோரி கல்வி முறைப்படி குழந்தைகள் பயில்வதற்காக, கலாக்ஷேத்ரா

வளாகத்திலேயே பெசன்ட் மான்டிஸோரி, பெசன்ட் அருண்டேல் பள்ளிகளை ஆரம்பித்தார். பள்ளிகளுக்கும் கலாக்ஷேத்ரா கலைக் கல்லூரிக்கும் இடையே பரிமாற்றங்கள் நிகழ வசதியாயிருந்தது. கலை, கல்வியின் ஓர் அம்சமாயிற்று. கல்வி, கலைச் சூழலில் வழங்கப்பட்டது.

நடனம் என்பது பல கலைகளின் சேர்க்கை என நாட்டிய சாஸ்திரமே குறிப்பிடுகிறது. அந்தக் கலைகள் அனைத்தையும் பரிச்சயப்படுத்திக் கொள்ளும் வகையில், கலாக்ஷேத்ராவை உருவாக்கி, வளர்த்து, தழைக்கச் செய்தார் ருக்மிணி தேவி. இத்தனைக்கும் அவர் நாட்டிய சாஸ்திரத்தைப் படித்தவர் அல்ல! கலையின் ஆற்றலை உள்ளுணர்வால் அறிந்து அதைப் போற்றினார்; அதற்குத் தலை வணங்கினார். அந்தக் கலையும் அவருக்கு வசப்பட்டு வாழ்க்கை முறையாகவே ஆயிற்று.

**(நன்றி: 'ஸ்ருதி' ஆங்கில இதழில் கௌரி ராம்நாராயண் எழுதிய கட்டுரை)**

## நாட்டிய நாடகங்கள்

**பா**கவத மேளா நாடகங்களுக்குப் பிறகு, நாட்டிய நாடகம் என்ற ஒரு நவரச காவியத்தை முழு வடிவில் உருவாக்கித் தந்தவர் ருக்மிணி தேவி என்பதை மறுக்கவோ மறக்கவோ முடியாது.

தமிழ் மொழியில் கலாக்ஷேத்திராவில் ஆண்டாள் சரித்திரம் ஓர் அரிய நாடகம். சிருங்காரம், பக்தி, கதையம்சம், ஆன்மிகம், மொழியின் அழகு, பாபனாசம் சிவன் அவர்கள் அமைத்துக் கொடுத்த சிறப்பான இசை எல்லாம் சேர்ந்து, அதற்கு ஒரு தனி இடம் பெற்றுத் தந்திருக்கிறது. தமிழ்ப் பண்பாடு என்கிறார்களே, அதன் முழு வடிவத்தையும் இந்தப் படைப்பில் பார்க்கலாம். எளிமையான உடை, தூய்மையான இசை, பொருத்தமான, ஆடம்பரமே இல்லாத காட்சி ஜோடனை, ஆர்ப்பாட்டம் இல்லாத நாட்டியம், கவிதை எல்லாம் சேர்ந்து இது திரும்பத் திரும்பப் பார்க்கத் தூண்டும் வகையில் சம்பிரதாய வழுவே இல்லாமல் அமைந்திருக்கிறது.

ருக்மிணி தேவி 25 நாட்டிய நாடகங்களைத் தயாரித்தார். ஒவ்வொன்றும் வித்தியாசமாக இருக்கிறது.

இவற்றின் தனிச்சிறப்புக்கு முக்கியமான காரணம் மரபு வழுவாத நாட்டியம் மட்டுமல்ல இசையமைப்பும் கூட. இந்தக் கலை வடிவத்துக்கு ருக்மிணி தேவி செய்துள்ள மிகச் சிறந்த சேவை என்று ஆறு பாகங்கள் கொண்ட ராமாயணத்தைச் சொல்லலாம்.

## இசையே ஜீவன்!

**ஸ்ரீ** ராமவனகமனத்தில் பாட்டுக்கள் ஒன்றையொன்று மிஞ்சும்படி அமைந்திருக்கின்றன. கைகேயியின் வார்த்தைகளைக் கேட்டுக் குழம்பிய தசரத மன்னருடைய மனக் கலக்கத்தை எப்படிப் பாட்டில் கொண்டு வருவது என்று கலங்கினார் ஆச்சாரியார். பிறகு சித்தப்ரமரீ என்றே ஒரு ராகம் உண்டு பண்ணினார்.

"இது ஸ்வப்பனமா? எனக்குச் சித்தப்ரமையா? மனத்தில் ஏற்படும் ஏதோ உபத்ரவமா?" என்று ஏங்கி நடபைரவி ராகத்தில் கிம் க்ருதம் தவரா



• மயிலாப்பூர் கௌரி அம்மாள் வகுப்பு எடுக்கிறார். பெரிய சாரதா, சாரதா ஹாஃப்மன் மாணவிகள்...

மேணா? என்று கைகேயியைப் பார்த்துக் கேட்டு விட்டு, "உன்னை நமஸ்காரம் செய்கிறேன் கைகேயி" என்று தசரதர் கூறும் போது நம்மையுமறியாமல் கண்ணீர்த் ததும்பும். ஸாத்விகாபிநயத்தின் திறமை முழுவதையும் காட்ட வேண்டிய கட்டம் இது.

பாதுகா பட்டாபிஷேகத்தில் கங்கையைத் தாண்டும் படலத்துக்காக 'கங்காலஹரி' உற்பத்தி ஆயிற்று.

பரதன் குஹனிடம் பேசுகிறபோது, "இந்தக் கஷ்டத்தைத் தாங்க முடியாது" என்று அலறுகிறான். "மாபூத்ஸ காலோ யத் கஷ்டம்" என்ற இந்த வரிக்கு அடுக்கடுக்காக ஸங்கதி அமைத்திருக்கிறார் வாசுதேவாச் சாரியார். ஒவ்வொரு ஸங்கதியிலும் பரதனுடைய துயரம், தன் மீது சந்தேகபடும்படியாக நேர்ந்து விட்டதே என்ற தாபம், அதிகரித்துக் கொண்டே போகும்.

என்னால் தாங்க முடியவில்லை இந்தக் கஷ்டம். தாங்கவே முடியவில்லை.

ஐயோ! தாங்க முடியவில்லையே! என்று நினைத்து நினைத்து விம்முவது போலத் தோன்றும். அதற்கு ஏற்ற அபிநயம் ஸாத்விகா பாவத்துடன் செய்யும் போது நாமும் பரதனுடைய மனநிலையை அனுபவிக்கிறோம்.

சீதையிடம் ராமன் தான் காட்டுக்குப் போவதாகக் கூறும் கட்டம்.

ஆனந்த பைரவியில் "சீதே!" என்று ராமர் அழைக்கும் போதே அவருடைய தயக்கம் தெரியும். "பதினான்கு வருஷம் காட்டுக்குப் போய்த் திரும்புவேன். நீ இங்கே இரு" என்று ராமர் சொல்கிறார்.

"எப்படி இவ்வளவு உருக்கத்தை உங்களால் நாடகத்தில் கொண்டு வர முடிகிறது" என்று ருக்மிணி தேவியிடம் கேட்டதற்கு,

"நான் கைதான் சேர்த்தேன். உருக்கம் எல்லாம் தாத்தா பாட்டிலேயே கொண்டு வந்து விட்டார்" என்றார். தாத்தா என்பது மைசூர் வாசுதேவாச்சாரியார்!

ஒரு பெரியவர் ஆண்டுதோறும் பெங்களூரிலிருந்து டிசம்பர் மாதம் சென்னை வருவார். அவரும் அவருடைய மனைவியும் கலாக்ஷேத்ராவில் ராமாயணம் நடந்தால் கட்டாயம் வருவார்கள். அவருக்குக் கண் தெரியாது. ராமாயணத்தைப் பாடலாகக் கேட்பதற்கே அவர் வந்து கொண்டிருந்தார். வடமொழி படித்திருந்ததால் ஒவ்வொரு வார்த்தையையும் கேட்டு ரசிப்பார். "என்னமாய்த்தான் மெட்டுப் போட்டிருக்



• சந்திரசேகர்

கார்?" என்று சொல்லி வியப்பார்.

## கற்பனைத் திறன்

யுத்த காண்டத்தில் திரும்பத் திரும்ப போர்தானே. ஒவ்வொருவராக இறந்து போவதை எப்படிக் காட்டுவது? 'கந்தர்வ அப்ஸரஸ்த்ரீகள் இந்த யுத்தத்தைப் பார்த்து வியந்தார்கள்' என்று ஒரு வரி வருகிறது. அதை வைத்துக் கொண்டு அப்ஸர ஸ்த்ரீகளின் அபிநயமாகவே யுத்தத்தைச் சொல்லியாகி விட்டது. 'கந்தர்வாப்ஸர' என்று தொடங்கும் ச்லோகங்களை ப்ருந்தாவன ஸாரங்காவிலிருந்து சிறிது வேறுபடுத்தி ஸாரங்கப்ரகாசினி என்ற ராகத்தில் அமைத்

திருக்கிறார் ராஜாராம். அதைப் பார்த்தவர்களுக்குத்தான் இசையின் பொருத்தமும், கதை சொல்லும் உத்தியும் அப்ஸரஸ்களுடைய ஆடையலங்காரமும் சேர்ந்து எவ்வளவு சுவாரஸ்யமாக இருக்கிறது அந்தக் காட்சி என்பது புரியும்.

## அளவான அலங்காரம்

நாட்டிய நாடகம் சோபிப்பதற்கு மேடையின் அலங்காரமும், விளக்குகளும் அவசியம் என்பது எலோருக்கும் தெரியும்.

மிக எளிமையான மேடை, திரைகள், மென்மையான ஒளி இவற்றையே கலாக்ஷேத்திரத்தில் காண முடியும். வெளிச்சம் ஆடையின் வண்ணங்களை அடித்து விடாமல் சோபிக்கச் செய்ய வேண்டும். அதே போல மேடையில் உள்ள பொருள்களும், திரைச்சிலை உள்பட, நாட்டியம் செய்யும் கதாபாத்திரத்தைத் தூக்கி நிறுத்த வேண்டும். பார்ப்போரின் கண்கள் நடனமாடுபவரை விட்டு அலையாமலிருக்க வேண்டும். மேடை மீது கவனம் திரும்பக் கூடாது. மேடையலங்காரம் என்பது உப்பு மாதிரி! ருசி பரவி இருக்க வேண்டும்.



• நாட்டிய நாடகத்தில்...

ஒளி அமைப்பில் புதிய சாதனைகளைத் தோற்றுவித்தவரும் ருக்மிணி தேவியே. பால்ஸ்டார்ம் என்ற நடிகர் ஹாலந்து நாட்டிலிருந்து கலாக்ஷேத்திராவில் தங்கிப் பணிபுரிந்தார். ஆண்டாளுக்கு ஒளியமைப்புச் செய்தவர். பால் மாமா என்று எல்லோரும் அவரை அழைப்பார்கள்! அவர் டைரக்டராகவும் இருந்தபடியால் மேடையில் நாட்டியமாடுபவரைச் சிறப்பாக எடுத்துக்காட்டும் வகையில் ஒளியமைப்புச் செய்தார்.

கங்கையைக் கடக்கும் காட்சியில் ஒளியின் அமைப்பிலேயே கங்கையின் குளுமையையும், அலைகளையும் படகு நீரில் செல்வதையும் உணர முடியும். அதே போல அக்னிப் பிரவேசக் காட்சியில் ஒளி அமைப்பினால் உடலே சிலிர்க்கும்படி செய்து விடுவார்கள்.

நாட்டிய நாடகத்தில் இன்றியமையாதது உடைகளும் அலங்காரங்களும். எனினும், நடனத்தையும் பாவத்தையும் எடுத்துக் காட்டும்படி அளவாக அவை அமையும் போதுதான் சோபிக்கிறது.

இதற்கு ராமாயணத்திலேயே சில உதாரணங்களைச் சொல்ல முடியும். விசுவாமித்திரருடைய பாத்திரம் பால காண்டத்தில் மிக முக்கியமானது. அவருக்குத் தாடி வைக்க வேண்டும் என்று சிலர் சொன்னார்கள். ருக்மிணிதேவி, 'தாடி வைத்தால் பாவம் தெரியாது. விசுவாமித்திரர் இளமையானவராகவே இருக்கட்டும்' என்று சொல்லி விட்டார். அதே போல சூர்ப்பனகையும் தன்னை அழகான பெண்ணாக மாற்றிக் கொண்டு வந்தாள் என்பதை அவர் ஏற்கவில்லை.

"சூர்ப்பனகையின் மனத்தில் தான் ரொம்ப அழகு என்றுதான் எண்ணம்" என்று கூறி விட்டார். அசுர ஸ்த்ரீயானாலும் அளவான மேக்-அப், உடைகளிலேயே ராஜஸ குணம் எடுத்துக்காட்டும்படி அமைத்திருந்தார்.

**கல்கி தீபாவளி மலர் – 1998ல்**
**ஆனந்தி எழுதிய கட்டுரை**

## அமரர் கல்கி விமர்சனம்

ஸ்ரீமதி ருக்மிணி தேவி மேடையில் வந்து நின்றதும், இது தேவலோக நாட்டிய அரங்கம்தானோ என்று ஒரு கணம் பிரமை உண்டாயிற்று.

சாதாரணமான பரத நாட்டியக் கச்சேரி களில் நட்டுவனார்கள் நாட்டியக்காரிகளின் பின்புறம் நின்று மகா கோரணியான சேஷ்டைகளையெல்லாம் காட்டிக் கொண்டிருப்பது வழக்கம். அநேகருக்கு நாட்டியக்காரி யின் அபிநயங்களைவிட, நட்டுவர்களின் சேஷ்டைகளே அதிக ரஸமாயிருக்கும். இங்கு அப்படியின்றி, நட்டுவர்களும், பக்கப் பாட்டுக்காரர்களும் மேடையில் ஒரு பக்கத்தில் நாகரிகமாய் அமர்ந்திருந்தார்கள்....

ஒரு கலையில் தேர்ச்சி பெறுவதற்கு அதனிடம் அபிமானமும், அதில் பயிற்சி பெற ஆர்வமும் மட்டும் இருந்தால் போதாது. ஒவ்வொரு கலைக்கும் இன்றிய மையாத சில அம்சங்கள் இயற்கையில் அமைந்திருக்க வேண்டும். நடனக் கலைக் குரிய தேக அமைப்பு ருக்மிணி தேவி பெற்றி ருக்கிறார்.

அவருடைய உடையும் அலங்காரமும் மிகப் பொருத்தமாக அமைந்திருந்தன. தமிழர்களின் பழைய நாகரிகத்துக்குரிய உடையும் அலங்காரங்களும்தான்; ஆனால் அவற்றில் புதுமையும் கலந்திருந்தது. கறுத்த கூந்தலில் வெண்ணிற மல்லிகைப்பூ, காதில் ஜிமிக்கி, நெற்றியில் குங்குமம், கழுத்தில் ரத்தின ஹாரம், கால்களிலும் உள்ளங் கையிலும் செம்பஞ்சுக் குழம்பு ஆகிய எல்லா வற்றிலும் நமது பழைய நாகரிகம் புதுமை பெற்று விளங்கிற்று.

உடையும் அப்படித் தான். நடனத்துக்கு வசதியானது; அதே சமயத்தில் அசப்பிலே



பார்த்தால், புராதனத் தமிழ்ச் சிற்பி ஒருவன் செய்த தேவ மாதின் சிலை உயிர்பெற்று வந்தது போல் தோன்றும்...

வீழ்ச்சி அடைந்திருக்கும் இந்த அரிய பெரிய கலையை உத்தாரணம் செய்வது ஸ்ரீமதி ருக்மிணி தேவியின் நோக்கம் என்று அறிகிறேன். இந்த நோக்கத்துக்காகவே தமிழ் நாட்டில் ஏற்கெனவே சிலர் பெரு முயற்சி செய்து வருகிறார்கள்.

**(ஆனந்த விகடன் 22.3.36)**

## "ஒரு கோடி பவுன் கொடுக்கலாமே!"

ராமாயண நாட்டிய நாடகம்



• வீணை சாம்பசிவ அய்யர் - மைசூர் வாசுதேவாச்சார்யார்

உருவாகிக் கொண்டிருந்தது. வால்மீகி ராமாயண சுலோகங்களுக்கு மைசூர் வாசுதேவாச்சார்யார் இசையமைத்துக் கொடுத்துக் கொண்டிருந்தார். 'சீதா சுயம்வரம்' நாட்டிய நாடகத்தில் ஒரு சுலோகம் முதலில் யதுகுல காம்போதி ராகத்தில் மெட்டமைக்கப் பட்டது. ருக்மிணி தேவிக்கு அது திருப்தியாய் இல்லை என்பதால் சில மணி நேரங்களுக்குள்ளேயே 'அடாணா'வில் வேறு மெட்டு போட்டுக் கொடுத்தார் வாசுதேவாச்சார்யார். அந்த மெட்டைக் கேட்ட மாத்திரத்தில் வீணை வித்வான் காரைக்குடி சாம்பசிவ அய்யர் சொன்னார் : "நான் மட்டும் மகாராஜாவாக இருந்திருந்தால் இந்த அடாணாவுக்காக ஒரு கோடி பவுன் கொடுத்திருப்பேன்!"

இப்படி கோடி பவுன் பெறுமானமுள்ள மெட்டுக்களை இயற்றவல்ல மகா வித்வான்களும், அவர்களுடைய திறனறிந்து அந்தக் கணமே பாராட்டி மகிழ்ந்த மகாவித்வான்களும் குழுமிய ஜீவ கலாலயமாகத் நிகழ்ந்தது கலாக்ஷேத்ரா. திறமையும் தகுதியும் வாய்ந்த, சம்பிரதாயத்தில் ஈடுபாடு கொண்ட கலைஞர்களை அழைத்து வந்து அவர்களைக் கலாக்ஷேத்ராவில் குடியமர்த்திப் பாடம் எடுக்கச் செய்வதில் கண்ணும் கருத்துமாக இருந்தார் ருக்மிணி தேவி.

முன் குறிப்பிட்ட இரு வித்வான்கள் தவிர, பாபனாசம் சிவன், வீணை கிருஷ்ணமாச்சார்யார், டைகர் வரதாச்சார்யார், பூதலூர் கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள், துறையூர் ராஜகோபால சர்மா, எம்.டி. ராமநாதன் என்று இசை சிம்மங்களும் மயிலாப்பூர் கௌரியம்மாள், கல்யாணி அம்மாள், பந்தநல்லூர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை போன்ற நாட்டிய ஜாம்பவான்களும் கலாக்ஷேத்ராவில் வகுப்பு எடுத்தார்கள். ருக்மிணி தேவியின் அர்ப்பணிப்பு உணர்வு அவர்களை அங்கே ஈர்த்தது, இணைத்தது, அவர்களுடைய தலைசிறந்த படைப்புகளையும் முழுமையான உழைப்பையும் வழங்கத் தூண்டியது.



• பாபநாசம் சிவன் - துறையூர் ராஜகோபால சர்மா

கலாக்ஷேத்ரா நாட்டிய நாடகங்களின் வெற்றிக்கு இக் கலைஞர்களின் பங்களிப்பு மிகப் பெரிய அளவில் காரணம். பல நாட்டிய நாடகங்களுக்குப் பாபனாசம் சிவன் பாடல்கள் கூட புனைந்து கொடுத்தார். துறையூர் ராஜகோபால சர்மா உதவினார்.

இசைக் கலைஞர்கள் தங்கள் தனித்தன்மையைக் கரைத்துக் கொண்டு இவ்வாறு ஒரு நாட்டியப் படைப்பு உருவாகிப் பிரகாசிக்க உதவுவதென்பது சுலபத்தில் நிகழ்ந்து விடாது. ருக்மிணி தேவியின் ஆளுமை பிற கலைஞர்களைக் கட்டிப் போட்டது எனில், அவருடைய கலைக் கனவுகளும், கற்பனா சக்தியின்



• பாபநாசம் சிவன் - காளிதாஸ நீலகண்டர்

கலைஞர்களாக ருக்மிணி தேவியின் பாதிப்பை நடை, உடை, பாவனைகளில் பெற்றுள்ள மனிதர்களாக.

## அன்பே அழகு

கேரளச் சுற்றுப் பயணம் முடித்து விட்டு அப்போது தான் திரும்பியிருந்தார் ருக்மிணி தேவி. சில நாட்களாகவே உடல் நலம் சரியில்லை. ஆனாலும் தினமும் ஒரு முறை கலாக்ஷேத்ராவுக்கு வந்து மாணவி களை உற்சாகப்படுத்திவிட்டுப் போய்விடு

• ஸ்ரீ சுப்ரமணிய சாஸ்திரிகள் - பந்தநல்லூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை



வலிமையும் அவர்களைத் தொற்றிக் கொண்டு தூண்டி விட்டது.

மாபெரும் கலைஞர்களின் நிழலில் மிகச் சிறந்த சிஷ்யர்கள் உருவானார்கள் : யாமினி கிருஷ்ணமூர்த்தி, லீலா சாம்சன், தனஞ்சயன், அடையாறு லட்சுமணன், சி.வி. சந்திரசேகர், கிருஷ்ணவேணி என்று சில தெரிந்த பெயர் களைக் குறிப்பிடலாம். இன்று திரையுலகப் புள்ளிகளாக அறியப்படும் சுகன்யா, அமலா ஆகியோர் கலாக்ஷேத்ரா மாணவிகள். இன்னும் உலகம் முழுதும் இருக்கிறார்கள் கலாக்ஷேத்ரா தயாரிப்புகள் - இசை, நடனக்

• பூதலூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகள்



வார். அதுவும் இயலாமல் போன நிலையில் டாக்டர் திருவேங்கடம் அவரைப் பரிசோதித்து, மருத்துவமனையில் சேரும்படி கூறினார். நுரையீரலில் கட்டி உருவாகியிருந்தது. திரவம் வேறு சேர்ந்து போய் அதை உடனடியாக வெளியேற்ற வேண்டிய நிலைமை. ருக்மிணி தேவிக்கோ மருத்துவமனை செல்வதில் துளியும் இஷ்டமில்லை. மிருகங்களைக் கொண்டு தயாரித்த மருந்து வகைகளைப் பயன்படுத்தித் தமக்குச் சிகிச்சை அளிக்கக் கூடாது என்று நிபந்தனை போட்டார். ருக்மிணி தேவி பேரில் மிகுந்த மரியாதை கொண்ட டாக்டர் செரியன் அந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொள்ள, மருத்துவமனையில் சிகிச்சை ஆரம்பமாயிற்று.

ருக்மிணி தேவி, சிகிச்சைக்குப் பின் உடல் தேறி வரவில்லை. இறுதி மூச்சு மருத்துவமனையிலேயே பிரிந்தது. (25 பிப்ரவரி 1986) ஆனால் இறுதி வரை தமது விருப்பப்படி பிராணி மித்ரராகவே வாழ்ந்தார்.

வாயில்லா ஜீவன்களிடத்தில் அவருக்கு ஏன் இவ்வளவு பரிவு...? அவை இரக்கத்துக்குரியவை என்ற பச்சாதாப உணர்வு அல்ல அந்த உணர்வு; சகல ஜீவராசிகளுக்கும் இப் பூமியில் ஓர் இடம் உண்டு என்ற உயர் சிந்தனையும், பிற உயிர்களைக் கொல்லுதல் துன்புறுத்தல் போன்றவை நம் மன விகாரத்தின் வெளிப்பாடு என்ற உணர்வும் இணைந்து விளைவித்த அன்புப் பெருக்கு அது. அதனால்தான் ஒவ்வொரு செயலிலும் அழகைத் தேடி வாழ்ந்த அவர், கழுதைக் குட்டியையும் செல்லப் பிராணியாக அன்போடு வளர்த்தார்.

விலங்குகள் நல வாரியம் ஒன்று அமைக்கப்படக் காரணமாக விளங்கி. அதற்குத் தலைவராகவும் விளங்கினார் ருக்மிணி தேவி. பத்து ஆண்டுகள் ராஜ்ய சபை உறுப்பினராக இருந்தபோது 'பிராணிகள் வதை தடுப்புச் சட்டம்' கொண்டு வரப் பாடுபட்டு அது நிறைவேறச் செய்தார்.

சைவ உணவுப் பழக்கத்தை வலியுறுத்தும் உலகளாவிய இயக்கத்தில் அவர் பங்கேற்றதும் இந்த மெய்யன்பின் வெளிப்பாடுதான். "பிராணிகள் என் நண்பர்கள். அவை எப்படி என் உணவாக முடியும்?" என்று கேட்பார்!

## ஆலமர நிழலில் ஐம்பதாண்டுகள்...

— கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்

**து**ஷ்யந்தனைச் சந்தித்துவிட்டு காட்டு வழியே நடந்து வருகிறாள் சகுந்தலை. நெஞ்சில் படபடப்பு, முகம் நிறைய நாணம்; தயங்கித் தயங்கி வரும்போது புடைவைத்



• கலாக்ஷேத்ராவில் இன்று...



• இறைவழிபாடு...

தலைப்பு ஒரு முள்ளில் மாட்டிக் கொண்டு விடுகிறது. அந்த ஒரு கணத்தில் சட்டென்று முகபாவங்கள் எப்படி மாறும்..?

நாட்டிய வகுப்பில் இருந்த அத்தனை மாணவிகளும் ஒவ்வொருவராக இந்த முகபாவ மாற்றத்தை அபிநயித்துக் காட்டினோம். கடைசியில் அத்தை (ருக்மிணி தேவி) முன் வந்து அதையே செய்து காட்டியபோது அத்தனை பேரும் ஸ்தம்பித்துப் போனோம். ஓர் இளம் பெண்ணின் மன உலகம் விழிகளின் வழியே மட்டுமின்றி, உடலின் ஒவ்வொரு அணுவிலும் விகசிப்பதை அனாயாசமாக வெளிப்படுத்த அவரால் முடிந்தது. அது தான் ருக்மிணி தேவியின் அபூர்வ ஆற்றல். பாவம் என்பது முகத்தோடு முடிந்து விடுவதல்ல – அங்கங்களின் அசைவுகள் அசைவற்ற நிலைகள் மூலமும் அது வெளிப்படுகிறது என்பதை முழுமையாய் உணர்ந்து, மிகத் துல்லியமாகவும் கண்ணியமாகவும் உணர்வுகளை வெளிப்படுத்தினார்.

இத்தனை பாவம் ததும்ப நடனமாடியவர் நடனம் அமைத்தவர், 'சிருங்கார ரஸத்தை மழுங்கடித்தார்' என்று குற்றம் சாட்டப்பட்டதுண்டு. 'கலாக்ஷேத்ரா பாணி நடனம் வெறும் சைவ ஹோட்டல் சாப்பாடு' என்று நிந்தனையாகவும் சொன்னவர்களுண்டு. சிருங்காரத்தை இரண்டாம் பட்சமாகக் கருதியிருந்தால் அவர் கீத கோவிந்தத்தை ஒரு நாட்டிய நாடகமாக்க முயன்றே இருக்க மாட்டாரே! ஆரம்பம் முதல் கடைசி வரை கண்ணன் – ராதையின் காதலையும் தாபத்தையும் சொல்லும் அந்தக் காவியம் அவர் முயற்சியில் எவ்வாறு ஓர் உயரிய மேடைக் கலைப் படைப்பாக உருமாறியது..? ஜீவாத்ம – பரமாத்ம ஐக்கியத்தை உருவகப்படுத்திய கதையம்சம் என்பது ஒரு காரணம் தான். காதலின் – சிருங்காரத்தின் – ஈர்ப்புகள் அன்பின்பாற்பட்டவை, அந்த உன்னதமான உணர்வுகளின் வெளிப்பாடுகளைச் சித்திரிக்கும்போது வெளிப்பாடுகளைக் காட்டிலும் உணர்வுக்கு முக்கியத்துவம் தரப்பட வேண்டும் என்று நம்பிச் செயல் பட்டார்.

மன விகாரங்களுக்கு இடமளிக்கும் எதுவுமே அவருடைய அழகியல் கொள்கைக்கு விரோதமானது. பாரம்பரியத்தைப் போற்றிப் பாதுகாக்கும் ஆசை கொண்டவர் அத்தை. பெண்களுக்கு அழகுணர்ச்சி இயல்பாகவே அமைந்திருக்க வேண்டும் என்று சொல்வார். புடைவை தான் உடுத்த

வேண்டும். அதிலும் கைத்தறிப் புடைவை. கல்யாணம் செய்து கொண்டு குடித்தனம் ஆரம்பிக்கும் மாணவிகளின் வீட்டுக்குப் போய், திடீரென்று சமையலறை வரைக்கும் சென்று ஒரு நோட்டம் விடுவார். அவ்வறை நேர்த்தியாகவும் சுத்த மாகவும் இருந்தால் பாராட்டு. இல்லாவிட் டால் நெற்றிச் சுருங்கி விடும் அத்தைக்கு!



• கிருஷ்ணவேணி லக்ஷ்மணன்

அதே போல், கலா க்ஷேத்ரா நிகழ்ச்சி தினங் களில் மேக் - அப் அறைக்குள் திடீரென்று நுழைந்து விடுவார். எல்லாருடைய ஆடை, ஆபரணங்களையும், முக ஒப்பனை, சிகை அலங்காரத்தையும் ஒரு நோட்டம் விட்டுச் சரி பார்த்து விடுவார். யாராவது கொண்டை யைத் தப்பாகப் போட்டிருந்தால், 'என்ன இது?' என்று அவிழ்த்து விட்டுவிட்டுப் போய் விடுவார். உடனே அங்கே பதற்றம் தொற்றிக் கொள்ளும். விறுவிறுவென்று மீண்டும் கொண்டையைச் சரியாகப் போட்டு நிகழ்ச்சிக்குத் தயாராவோம்.

எதிலும் உச்சகட்டமான நேர்த்தி வேண் டும் என்று பிடிவாதமாய் இருப்பார் அத்தை - அதை அடைய கடுமையான பயிற்சியும் கொடுப்பார். எட்டு மணிக்கு ஒத்திகை என்றால் ஐந்து நிமிடம் முன்னதாகவே அவர் வந்துவிடுவார்.

இப்படிப்பட்ட குருவி டம் முப்பது வருடங்கள் பயின்றதும், அவர் கீழ்ப் பணியாற்றியதும் பெரிய பாக்கியம். நினைத்தால் இன்றளவும் பிரமிப்பா கவும் பெருமிதமாகவும் இருக்கிறது. கலாக்ஷேத்ரா என்ற ஆலமரத்தின் நிழலில் ஐம்பது ஆண்டு கள் இயங்கியிருக்கிறேன் - எனக்கு ஐந்து வயதான போது என் தந்தை பெசன்ட் தியோசாபிகல் பள்ளியில் ஆசிரியர் பணியில் சேர்ந்தார். அதன்பின் தியோசாபிகல் சொஸைடி வளாகமே எங்கள் உலகமாயிற்று. பள்ளி வகுப்புகள் முடிந்ததும் நாட்டிய வகுப்பு களை ஜன்னல் வழியே எட்டிப் பார்ப்பேன். அத்தையின் கரங்களும் பாதங்களும் தென்ற லாகவும் புயலாகவும் மாறி மாறிச் சுழன் றாடிக் கொண்டிருக்கும். அப்போது துளியும் நினைக்கவில்லை, நானும் அவர் சிஷ்யை யாகி, கலாக்ஷேத்ரா ஆசிரியையாகி, பின்னர் அதன் தலைமையாசிரியராகவும் பொறுப் பேற்பேன் என்று...

அத்தை என்னை உயர்த்தினார் - நல்ல கலைஞர் என்ற நிலைக்கு உயர்த்தினார். அதனினும் முக்கியமாக - ஒரு சிறந்த மனுஷியாகத் திகழ்வது எப்படி என்று கற்றுத் தந்தார்.

## கூத்தம்பலம்!

திருவான்மியூரில் உள்ள கலாக்ஷேத்திரா வளாகத்தின் மொத்தப் பரப்பளவு நூறு ஏக்கர். ஒவ்வொரு ஏக்கர் நிலத்தையும், குருவி பணம் சேர்ப்பது போல் சேர்த்து வாங்கி னார் ருக்மிணி தேவி. இசை, நடன வகுப்பு கள் இயற்கைச் சூழலில் மரங்களுக்கு அடியில் சிறு குடில்களில் நடந்தன. நுண் கலைகள் சொல்லிக் கொடுக்கும் ஒரு கலைக் கூடத்துக்கு அரங்கம் ஒன்று கட்டாயத்

• ஒத்திகை...



தேவையல்லவா! அதை உணர்ந்து தற்காலிகமாக ஓர் அரங்கத்தைக் கட்டினார் ருக்மிணி தேவி. ஒரு புயலின் போது அரங்கம் சரிந்து விட்டது. "சரி.. இதுவும் நல்லதாகப் போயிற்று; புது அரங்கம் கட்டிவிடலாம்" என்று தீர்மானித்து நிதி சேர்க்கத் துவங்கினார் அவர்.

கேரளாவில் சில கோயில்களை ஒட்டி நடனம் மற்றும் பிரவசனங்கள் நிகழ்த்த ஓர் அரங்கம் இருக்கும். அதை கூத்தம்பலம் என்பார்கள். அந்த அமைப்பை திருச்சூர் கலாமண்டலம் கலைப் பள்ளியில் பார்த்துவிட்டு, அதே போல் கலாக்ஷேத்ரா வளாகத்திலும் கட்ட வேண்டும் என்று முடிவு செய்தார். அவரது ஆசையை நிறைவேற்ற உதவியாக இருந்தவர் தலைமைப் பொறியாளராக இருந்த அப்புக்குட்டன் நாயர்.

கூடிய மட்டும் கான்க்ரீட் கட்டுமானம் தவிர்க்கப்பட்டது. மின்விசிறி இல்லாவிட்டாலும் காற்றோட்டம் இருக்கும்படியான அமைப்பு, பார்வையாளர்களுக்குத் தடங்கல்களாகத் தூண்கள் கிடையாது. முதல் வரிசையில் இருப்பவர்களும், நடனக் கலைஞரின் பாத அசைவுகளை நன்கு பார்க்க ஏதுவாக, அகன்ற அரைவட்ட வடிவத்தில் தாழ்வான மேடை அமைக்கப்பட்டது. வெளியிலிருந்து பார்க்கும்போது, ஒரு கோயிலையே நினைவு படுத்துகிறது அந்த அரங்கம். கலைஞர்கள் மட்டுமல்ல; பார்வையாளர்களுக்கும் செருப்புடன் உள்ளே நுழைய அனுமதி கிடையாது. இங்கிலாந்து அரசி எலிசபெத் வந்தபோது கூட காலணிகளைக் கழற்றி விட்டுத்தான் உள்ளே நுழைந்தார்!



• கூத்தம்பலம்

## பிரம்ம ஞான சபை

ருக்மிணி தேவியின் தந்தை நீலகண்ட சாஸ்திரி பொதுப்பணித் துறையில் பொறியாளராக இருந்தவர், வேதம், உபநிஷத் ஆகியவற்றை கற்றுத் தேர்ந்தவர். இருப்பினும், பல புரட்சிகரமான எண்ணங்கள் கொண்டவர். உதாரணமாக அந்தக் கால கட்டத்தில் சமுதாயத்தில் வழக்கத்திலிருந்த குழந்தைத் திருமணத்தை எதிர்த்தவர். அதே போல் பிரும்ம ஞான சபையின் (Theosophical Society) தத்துவங்களில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவர்.

"ஜாதி, மதங்களைவிட 'உண்மையே' உயர்ந்த தத்துவம். மனித குலம் முழுவதும் சகோதர, சகோதரிகளே" என்ற கொள்கையை அடிப்படையாகக் கொண்டு, உயர்ந்த ஆன்மீகத் தேடலுக்கு வழி காட்டியது பிரம்ம ஞான சபை.

அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றதும் சென்னைக்கு வந்து, பிரம்ம ஞான சபை வளாகத்தின் எதிரிலேயே வீடு வாங்கிக் குடியேறினார் நீலகண்ட சாஸ்திரி. சபையின் ஸ்தாபகர் கர்னல் ஆல்காட் முன்னிலையில் உறுப்பினரானவர் அவர்.

சபையின் தலைவராக இருந்த டாக்டர் அன்னிபெசன்ட் ஆங்கிலேயரான போதிலும் முழுக்க, முழுக்க இந்திய மனத்துடன் வாழ்ந்தவர். பூரண சுதந்திரத்தோடு ஒவ்வொரு மனிதனும் தனது நாட்டில் வாழ உரிமையுண்டு என்ற நோக்கில் ஹோம் ரூல் இயக்கத்தையும் நடத்தி வந்தார் பெசண்ட். அவருக்கு உறுதுணையாகப் பல ஆங்கிலேய

நண்பர்கள். அவர்களில் மிக முக்கியமானவர் டாக்டர் ஜார்ஜ் அருண்டேல்.

நீலகண்ட சாஸ்திரி குடும்பத்தில் இருந்த அனைவருமே அன்னிபெசண்ட்டின் அன்பைப் பெற்றவர்களாக இருந்தார்கள். அதிலும், பத்து வயதுச் சிறுமி ருக்மிணி தேவி, பெசண்ட் அம்மையாரை மிகவும் கவர்ந்தார். சபையின் விழாக்களில் ஆர்வமுடன் கலந்து கொள்வார் ருக்மிணி.

ஒரு முறை சபையின் சார்பாக தாகூரின் 'மாலினி', நாடகம், விக்டோரியா ஹாலில் நடைபெற்றது. நாடகத்தின் ஒரு காட்சியில் சிறுமி ருக்மிணி தேவி, கேதாரகௌளை ராகத்தில் பாடிய ஒரு பாட்டு அனைவரையும் அசத்தியது. மைக் வசதி இல்லாத அந்த மேடையில், ருக்மிணி தேவியின் இனிமையான குரல் ஒவ்வொரு பார்வையாளரின் உள்ளத்திலும் ஊடுருவி சந்தோஷத்தை உண்டாக்கியது. அதிலிருந்து சபையின் விழா எதுவென்றாலும் ருக்மிணியின் பாட்டு இடம் பெற்றது. அதே நேரத்தில் பிரம்ம ஞான சபையில் உயர்ந்த தத்துவங்கள், இந்தியக் கலாசாரம், நமது பாரம்பரியம் ஆகியவற்றைப் பற்றிப் பேசுவதிலும் தேர்ந்தவராகி விட்டார் ருக்மிணி.

1920ல் டாக்டர் அருண்டேலை மணந்தார் ருக்மிணிதேவி. 1923ல் பிரம்ம ஞான சபையின் இளைஞர் பிரிவுக்குத் தலைவரானார். அதன் பிறகு 1924ல் அருண்டேலுடன் உலகைச் சுற்றும் பயணம் துவங்கியது. சபையின் செயல்பாடுகளையும் வேலைத் திட்டங்களையும் பல்வேறு நாடுகளில் கூட்டங்களில் விளக்கும் வாய்ப்பைப் பெற்றார். பிரம்ம ஞான சபைக்கும் அவருக்குமான தொடர்பு இறுதிவரை நீடித்தது.



• அருண்டேல் பள்ளி...

## பச்சைத் தாத்தாவும் பள்ளிச் சிறுமியும்

– கௌரி ராம்நாராயண்

"ஏ குடை! இங்கே வா!"

மஞ்சள் பாவாடையும் நீலச் சட்டையும் அணிந்து, வானவில் வண்ணங்களில் மின்னிய குட்டிக் குடை ஒன்றை சுழற்றிக் கொண்டே துள்ளல் நடை போட்டுக் கொண்டிருந்த ஆறு வயதுச் சிறுமி, குரலைக் கேட்டு திரும்பிப் பார்க்கிறாள். திண்ணையில் ஒரு பெரியவர்.

சிறுமிக்கோ அவசரம். மணி அடிப்பதற்கு முன் வகுப்புக்குச் சென்றால்தானே புதுக் குடையை நண்பர்களுக்குப் பெருமையோடு காட்டலாம்!

"என்ன தாத்தா?" என்று தயங்கி நிற்கிறாள்.

தாத்தா விடுவதாக இல்லை.

"இந்தப் பாட்டைக் கேள்! ஜனக மகாராஜா சீதையை ராமனுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தபோது சொன்ன சுலோகம் இது" என்று "இயம் ஸீதா மம ஸுதா" என்று ஹரிகாம்போதியில் பாடத் தொடங்குகிறார். சிறுமியின் தவிப்பைக் கண்டு, "கிளாஸுக்கு போகணுமோ? எல்லாம் போகலாம்... கணக்கும் இங்கிலீஷும் எங்கும் ஓடிப் போய்விடாது" என்று சொல்லுகிறார்.

அந்தப் பெரியவர் வேறு யாரும் இல்லை. பச்சை சால்வை போர்த்தியதால் 'பச்சைத் தாத்தா' என்று அழைக்கப்பட்டவர், ராஜா மகாராஜாக்கள் என்ன, பண்டிதர்கள் என்ன,

சங்கீத விற்பன்னர்கள் என்ன என்று அனை வரும் கொண்டாடிய சங்கீத வித்வானும், உத்தம வாக்கேயகாரருமான மைசூர் வாசு தேவாச்சார்யார் அவர்கள்தான். ஒற்றைக் காலில் நின்று அரை மனது டன் கேட்கத் தொடங்கி, பிறகு வகுப்பை மறந்து (குடையையும்தான்!) கலா க்ஷேத்ரா வளாகத்தில் நின்ற சிறுமி நானேதான்!

**டை**கர் வரதாச்சார்யார் தாத்தா ஜமுக்காளம், கூஜா சகிதம் வகுப்புக்கு வருவாராம். கையில் நாலாயிர திவ்யப்பிரபந்தம். அதை தலைகீழாகப் பிடித்துக் கொண்டு படிப்பாராம்.

"அவருக்குப் புத்தகம் எதற்கு? நூல் முழுவதும் மனப்பாடம்தானே!" என்று அக்காலத்து மாணவி சின்ன சாரதா (பிறகு கலாக்ஷேத்திரத்தில் நாட்டிய ஆசிரியர்) சிரித்துக் கொண்டே விளக்குவார். பழைய படிக்கட்டுகளிலும், கேட்டருகே கிடக்கும் சுமைதாங்கிக் கல்லின் மேலும் அமர்ந்து, தம்மை மறந்த நிலையில் அவர் பாடிக் கொண்டிருப்பதைக் கேட்ட அதிர்ஷ்டசாலிகள் அவரை வர்ணிக்க உப யோகிக்கும் ஒரே சொல், 'கந்தர்வன்!'

வீணை சாம்பசிவய்யர் தோளில் சிவப்புத் துண்டு போட்டிருப்பார். அதனால் 'சிவப்புத் தாத்தா' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தார். பக்திமான். வகுப்பில் கறார் பேர்வழி. மற்ற பல ஆசிரியர்களைப் போல சாம்பசிவய்ய ருக்கும் கலாக்ஷேத்திர காம்பவுண்டிலேயே வீடு இருந்தது. காலையில் பார்த்தால், தாத்தா திண்ணையில் அட்சதைக்கு, உடையாத அரிசி மணிகளைப் பொறுக்கிக் கொண்டி ருப்பார். மத்தியானம் திண்ணையிலேயே படுத்திருப்பார். வீணையை மார்பின் மேல் குறுக்குவாட்டாக வைத்திருப்பார். நடுநடுவே தூக்கம் கலையும் போதெல்லாம் தந்தியை மீட்டி சுருதியோடு இயைந்த நாதத்தை அனுபவிப்பார்.

நான் கலாக்ஷேத்திரத்தில் மாணவியாக இருந்தபோது டி.கே. ராமஸ்வாமி அய்யங் கார், துறையூர் ராஜகோபால சர்மா, எம்.டி. ராமநாதன் போன்ற பெரியவர்கள் இருந் தார்கள். இந்த பழுத்த கலைஞர்கள் சீனியர்



• கலாக்ஷேத்ரா பட்டுப் புடைவை

களுக்கு எப்படி ராகம் – தானம் – பல்லவி யெல்லாம் கற்றுக் கொடுத்தார்களோ, அதே ஈடுபாட்டுடன் சிறுவர்களுக்கு ஸரளி வரி சையும் போதித்தார்கள். ஆரம்பப் பாடங் களை நடத்த சிஷ்யர்களையோ கத்துக்குட்டி வித்வான்களையோ நியமிக்கும் வழக்கம் கலாக்ஷேத்திராவில் கிடையாது.

இதுபோன்ற தேர்ந்த கலைஞர்களிடம் பாடம் கற்பது எப்பேர்ப்பட்ட பேறு என் றெல்லாம் அந்த வயதில் தெரியாது. பட்டுப் பூச்சிகளைத் துரத்திக் கொண்டே அதிகாலை வகுப்புக்குள் நுழைந்தால், அங்கு நமக்கு முன்பே நாமம் துலங்கும் நெற்றியுடன் தம்பூராவை மீட்டிக் கொண்டு ராமஸ்வாமி அய்யங்கார் உட்கார்ந்திருப்பார். அவருக்குத் திருப்தியாக(!) ஸா - பா - ஸா சொன்னதும் ஸரளி - ஜண்டை - தாட்டு - ஹெச்சுஸ்தாயி வரிசைகள் என்று முடிவில்லாமல் நீளும். ஆசிரியர் சில சமயம் எழுந்து வாசலுக்குச் செல்வார். ஆனால் ஸ்வரஸ்தானத்தில் இம்மி பிசகினாலும் சரக்கென்று உள்ளே வந்து திருத்துவார். அவர் அசட்டையாக இருக் கிறார் என்று நாம் ரிலாக்ஸ் செய்ய

முடியாது.

**ரா**ஜகோபால சர்மா ஒரு நாள் நான் நாவல் பழம் தின்பதைப் பார்த்து விட்டார். ''தூர எறி! 'நாவல் பழம் தின்றால் தொண்டை கெட்டுப் போய்விடும். பாட்டே வராது" என்று கண்டித்தார்.

"எனக்கு பாட்டே வேண்டாம் சார்! நாவல் பழம்தான் வேண்டும்" என்று நான் சொன்னதும் அவருக்குச் சிரிப்பு வெடித்துக் கொண்டு வந்து விட்டது. ''சரியான



அவ்வைப் பாட்டிதான் போ!" என்றவர் ரொம்ப நாள், "உனக்கு சுட்டப் பழம் வேணுமா, சுடாத பழம் வேணுமா?" என்று கேலி செய்து கொண்டிருந்தார்.

கோட்டு வாத்தியம் பூதலூர் கிருஷ்ண மூர்த்தி சாஸ்திரிகள் வயதான காலத்தில் உச்சிக் குடுமியும் பஞ்சகச்சமுமாய் கலா க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தார். நான் அவர் வகுப்பில் பயின்ற வருடம் அவருக்கு சரியான மாணவர்கள் அமையவில்லை. நானோ சிறுமி. புடைவை கட்டிய இரண்டு மூன்று சீனியர்களும் இருந்தார்கள். அவர்கள் நாட்டியம் கற்க, அஸ்ஸாம், மணிப்பூர், ஸ்ரீலங்காவிலிருந்தெல்லாம் வந்தவர்கள். கர்னாடக சங்கீதம் அவர்களுக்கு ரொம்பப் புதுசு, புரியாததும் கூட.

ஒரு நாள் எங்கள் கோரஸ் கேட்டு பூதலூர் ஸாருக்குத் தலைவேதனை யாகிவிட்டது. "இது என்ன ருக்மிணியம்மா, இப்படி பார்த்துப் பார்த்து பசங்களை என்னிடம் அனுப்பியிருக்கிறார்! சிலோனி லிருந்து லங்கிணி, அஸ்ஸாமிலிருந்து காட்டு மிராண்டி, போதாததற்கு ஒரு அனுமார் வேறே!" என்று அலுத்துக் கொண்டார். (அனுமார் நான்தான் என்று சொல்ல வேண்டுமா?)

**"நா**ட்டியத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லையே!" என்று நீங்கள் கேட்பது காதில் விழுகிறது. சின்ன சாரதா, வஸந்தா, தங்கமணி, ஜயலக்ஷ்மி போன்ற ஆசிரியர்கள் அரை மண்டியில் அரை அங்குலம் குறைந்தாலும் விட மாட்டார்கள். அப்போது இளைஞராக இருந்த சி.வி. சந்திரசேகர் (இப்போது போலவே) மண்டியடவு செய்யச் சொல்லி பெண்டு கழட்டி விடுவார். ஒவ்வொரு அடவையும் நூறுதரம் செய்யும் போது உழைப்பு என்ற சொல்லின் முழு அர்த்தமும் புரிந்து விடும்!

சில சமயம் ஜன்னல் வழியே சீனியர்கள் வகுப்புகளை எட்டிப் பார்த்துக் கொண்டிருப்போம். கதகளி ஆசான் சந்து பணிக்கர் மாணவர்களை விரட்டி விட்டு தானே கிருஷ்ணனாகவும், அர்ச்சுனனாகவும் அவர்களுக்கு ஆடிக் காண்பிப்பார். காட்டில் திரியும் சிங்க ராஜா பிடரியைச் சிலிர்த்துக் கொண்டு நம் முன் நிற்பது போன்ற உணர்வு ஏற்படும்! அதேபோல, மைலாப்பூர் கௌரி யம்மாள் "பாலவினவே" என்ற பதத்திற்கு உட்கார்ந்தபடியே கைபிடித்துக் காட்டுவார். நம் குழந்தை உள்ளத்திற்கு அதன் சிருங்காரம் புரியாது. ஆனால் கௌரியம்மாளின் குழி விழுந்த கண்ணிலும், சுருக்கம் விழுந்த முகத்திலும், சின்னக் கண்ணனின் குறும்பைக் கண்டதும் களுக்கென்று சிரிப்பு வரும்.

'அத்தை' நாட்டிய நாடகம் தயாரிக்கிறார் என்றால் சிறுவர்களுக்கு குஷி. கிளாஸைக் கட்டடித்து விட்டு ஒளிந்து ஒளிந்து எட்டிப் பார்ப்போம். புராண நிகழ்ச்சிகளை

அசாதாரண கற்பனைத் திறனுடன் அத்தை உருவகப்படுத்துவதைக் கண்டால் பிரமிப்பாக இருக்கும். மலைகளின் மேலே நடனமாடும் கின்னரர்களைக் கண்டு மூச்சு விட மறந்து போகும். லக்ஷ்மணன் கோபப்படும் போது நமக்கும் நரம்பு புடைக்கும். பிறகு ராமர் பரதனை அணைத்துக் கொள்ளும் போது நம் கண்களிலும் நீர் வழிந்தோடும்.

இந்தியப் பண்பாட்டையும் மதிப்பீடுகளையும் இதைவிட அழகான சூழ்நிலையில், இதைவிட சிறந்த முறையில் சிறுவர்களுக்குச் சொல்லிக் கொடுக்க முடியுமா என்ன?

## உலகமே கொண்டாடும் நூற்றாண்டு!

— கலாக்ஷேத்ரா இயக்குனர் ராஜாராம்

**பிரபல இசைக் கலைஞர், வாக்கேயக்காரர், மைசூர் வாசுதேவாச்சாரியாரின் பேரன் ராஜாராம். ருக்மிணி தேவி தயாரித்த ஆறு பாகங்கள் கொண்ட ராமாயணம் நாட்டிய நாடகத்திற்கு, முதல் மூன்று பாகங்களுக்கு சாஹித்யங்கள் அமைத்து இசையமைத்த நிலையில் வாசுதேவாச்சாரியார் காலமாகி விட்டார். தாத்தா விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து பூர்த்தி, செய்து ருக்மிணி தேவியின் பேரன்புக்குப் பாத்திரமானவர் ராஜாராம். கலாக்ஷேத்ராவின் இன்றைய இயக்குனர். அவருடன் ஒரு சந்திப்பு:**

*ருக்மிணி தேவியின் பெரிய சாதனையாக எதைக் கருதுகிறீர்கள்?*

கலாக்ஷேத்ரா என்ற கலைக் கோயிலை உருவாக்கியிருக்கிறாரே; அதை விட எது பெரிய சாதனையாக இருக்க முடியும்? ஒரு குறிப்பிட்ட வட்டத்துக்குள், சிதிலமடைந்து சுற்றி வந்த நாட்டியக் கலை, இன்று சிறப்பாகப் பேசப்படுகிறதென்றால் அதற்குக் காரணம் அத்தை தானே!

*பாரம்பர்யத்தை உடைத்தவர் என்ற பெருமை அத்தைக்கு உண்டல்லவா?*

அவரது அணுகு முறையை வேறு கோணத்தில் பார்க்க வேண்டும். பாரம்பரியத்தைப் போற்றிப் பாதுகாப்பதில் பெருமையடைந்தவர் அத்தை. ஆனால் இங்கு என்ன சிக்கல் என்றால், பரதத்தைப் பொறுத்த மட்டில் நமது பாரம்பரியத்தில் பல இடைச் செருகல்கள் வந்து, தவறுகளும், முறையற்ற அணுகுமுறைகளுமே பாரம்பரியமாக மதித்து போற்றப்பட்டன. இவற்றை மாற்றி உண்மையான பாரம்பரியத்தை அடையாளம் காட்டியவர் ருக்மிணி தேவி. இப்போது கலாக்ஷேத்ராவில் கற்கின்ற, இதுவரை கற்று வெளியே போயிருக்கிற ஆயிரக்கணக்கான மாணவ மாணவிகள் இப்படிப்பட்ட ஒரிஜினல் பாரம்பரியத்தைப் பிரதிபலிக்கிற வைரங்கள்தான்.

*இப்போது கலாக்ஷேத்திராவின் கீழ்வரும் அமைப்புகள் என்னென்ன?*



• ராஜாராம்

"பெசண்ட் தியோசாபிகல் பள்ளி, பெசண்ட் அருண்டேல் ஸீனியர் செகண்டரி பள்ளி, ருக்மிணி தேவி நுண்கலைக் கல்லூரி, கைவினை கல்வி மற்றும் ஆராய்ச்சி நிலையம், இவைதான் இப்போதுள்ள அமைப்புகள். உ.வே. சாமிநாதய்யர் நூல் நிலையம் தனியாக இயங்குகிறது. அருண்டேல் ஆசிரியர் பயிற்சிப் பள்ளி இப்போது இல்லை.

*ருக்மிணி தேவியின் நூற்றாண்டு விழா கொண்டாட்டங்கள் பற்றி...*

ஒரு வருடம் கொண்டாட இருக்கிறோம். கலாக்ஷேத்ரா கலைஞர்கள் வெளிநாடுகளுக்கே சென்று கலை நிகழ்ச்சிகள் நடத்த இருக்கிறார்கள். நிறைவு விழா தில்லியில் நடக்கிறது. கலாக்ஷேத்ரா வளாகத்தில் ருக்மிணி தேவி மியூஸியம் திறக்கப்பட்டிருக்கிறது. அது ஒரு கலைப் பொக்கிஷம். எல்லோரும் பார்த்துப் பயனடைய வேண்டும்.

தொகுப்பு : **ப்ரியன்**
படங்கள் : **ராஜன்**
கறுப்பு வெள்ளை படங்கள் உதவி:
**நாச்சியப்ப தேசிக ஸ்வாமிகள்**

**ச**மீபத்தில் என்னுடைய நண்பரின் மகள் உஷாவுக்கு, பிறந்த நாள் வந்தது. அவள் நீண்ட நாளாகக் கேட்டுக் கொண்டிருந்த கைக்கடிகாரம் ஒன்றைத் தேடித்தேடி வாங்கி வந்து பரிசளித்தார். மிகவும் ஆசையுடன் பரிசை வாங்கிக் கொண்ட அந்த இளம் பெண்ணின் முகம் இலேசாக சுருங்கியது... அதைக் கண்டு என் நண்பரும் பதைத்தார்.

"என்னம்மா... உனக்கு இந்த மாடல் பிடிக்கலையா?"

"இல்லப்பா... இதுலே செகன்ட்ஸ் டிஜிட்ஸ் தெரியணும். அப்பத்தான் காம்படிடிவ் எக்ஸாம் எழுதறப்போ, இதைப் பார்த்துக்கிட்டே வேகமா எழுத முடியும்" என்றாள் உஷா.

பதினெட்டு வயதுப் பெண்... பரீட்சைகளில் இருக்கும் வேகத்துக்கான விஷயத்தை, எவ்வளவு அருமையாக உணர்ந்திருக்கிறாள் என்று அறிந்து பெருமைப்பட்டேன்.

# போட்டித் தேர்வுகளில் வெல்வது எப்படி?

**கா**ம்படிடிவ் எக்ஸாம்ஸ் - போட்டித் தேர்வுகள்! கேள்விப்பட்டிருப்பீர்களே? இதில் பங்கு பெறுவதன் நோக்கம், பிரபலமான கல்விக் கூடங்களில் சேர்வது. அல்லது பிரபல நிறுவனங்களில் வேலைக்கு அமர்வது. இந்தப் போட்டித் தேர்வுகள் எல்லாமே 'பிரிலிமினரி' எனப்படும் முதல் கட்டத் தேர்வுக்குத்தான்.

இன்றைய உலகம் போட்டா போட்டி உலகம். போராடினால்தான் வெற்றி. நல்ல வேலையில் அமர, நல்ல படிப்பு அவசியம். பள்ளி - கல்லூரிப் படிப்பு முடித்து, வேலைக்கான காம்படிடிவ் தேர்வுகள் எழுதும்போது, வாழ்க்கையில் அவை மிக முக்கியமானவையாக இருக்கின்றன. நீங்கள் எந்தக் கல்விக் கூடத்தில் படித்தீர்கள் என்பதும், எந்தத் துறையில் பட்டம் பெற்றீர்கள் என்பதும்தான் உங்களுக்கு நல்ல வேலை வாங்கித் தரும். இந்தத் தேர்வுகளில் வெற்றி பெற, சில குறிப்பிட்ட கோர்ஸ்களைப் படித்தாக வேண்டும்.

ஒன்றை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். இந்த மாதிரித் தேர்வுகளில் பங்கெடுப்பது என்பது, விளையாட்டு வீரர்கள் வெற்றி பெற எப்படி எல்லாம் உழைக்கிறார்களோ அதைப் போலத்தான், தேர்வுகளில் பங்கு பெறுகிறவரும் தன்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும்.

### மற்றத் தேர்வுகளுக்கும் காம்படிடிவ் தேர்வுகளுக்கும் என்ன வேறுபாடு?

பள்ளி - கல்லூரித் தேர்வுகள் போல் அல்லாமல், இந்தத் தேர்வுகளில் உங்களை மதிப்பீடு செய்வதே வேறுபடும். ஏதோ எழுதிச் சமாளித்துவிட்டால் போதாது. இதில் 'ராங்க்'கிங் முறையே



வித்தியாசமானது. அதாவது, உங்களோடு போட்டியிடும் பிறர் எப்படிச் செய்திருக்கிறார்கள் என்பதைப் பொறுத்தே உங்கள் பதில்கள் கணிக்கப்படும்.

அதிக பட்சம் ஆப்ஜக்டிவ் டைப் கேள்விகளாகவே இருக்கும். அதிலும் கூட 'மல்ட்டிபிள் சாய்ஸ்' கேள்விகளே அதிகமாக இருக்கும்.

### இந்தத் தேர்வுகள் எதைக் கணிக்கின்றன?

சப்ஜெக்ட் தொடர்பான கேள்விகள் தவிர, காம்படிடிவ் தேர்வுகளில் நியூமரிக்கல், அனலடிக்கல், லாஜிக்கல், காம்ப்ரஹன்ஷன், வெர்பல் ஸ்கில்ஸ் மற்றும் ஜெனரல் நாலஜ் இவை பற்றித்தான் இந்த மாதிரித் தேர்வுகளில் உங்களை எடை போடுகிறார்கள்.

வேகம்தான் இந்த மாதிரித் தேர்வுகளில் மிக முக்கிய அம்சம். அதனால் அந்த வேகத்துக்கு உங்களைத் தயார் பண்ணிக் கொள்வது அவசியம். சில தேர்வுகளில், பல பகுதிகளுக்கும் ஒதுக்க வேண்டிய நேரத்தைத் தேவையான அளவுக்குக் கொடுப்பார்கள். சில தேர்வுகளிலோ, அதற்கான நேரம் குறிப்பிடப்பட்டிருக்கும். அதற்குள் முடித்தாக வேண்டும்.

### இதோ, சில டிப்ஸ்

சில கேள்விகளுக்கு விடைகாண, குறுக்கு வழி - ஷார்ட்கட் - பயன்படுத்துங்கள். அதாவது சரியான விடை காண எத்தனையோ வித உத்திகள் இருக்கின்றன. இந்த உத்திகள், இம் மாதிரித் தேர்வுகளில் பங்கு பெறுவோருக்காக எழுதப்பட்ட புத்தகங்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

மல்ட்டிபிள் சாய்ஸ் கேள்வியில் உங்களுக்குச் சரியான விடை தெரியாதபோது, தவறான விடை எது என்று பாருங்கள். சில வேளைகளில் அது எளிதாக இருக்கும். அப்படி சாய்ஸ்களில் தவறான விடையைக் காணும்போது, அதை ஒதுக்கிவிடுங்கள். இதை பிராஸஸ் அஃப் எலிமினேஷன் என்பார்கள்.

பல தேர்வுகளில், ஊகங்களுக்கு அபராதம் (பெனால்ட்டி) கொடுப்பார்கள். ஒன்றுமே எழுதாமல் விடுவதைவிட, தவறான சாய்ஸுக்கு அதிக அபராதம் கிடைக்கும். அதனால் ஊகிக்கிறபோது கூடுமானவரை சரியாக 'கெஸ்' பண்ணுங்கள்!

சில கேள்விகள் ரொம்பவும் கடினமாக இருக்கும். இந்தக் கேள்விகளை வைத்துக் கொண்டு, நேரத்தை வீணாக்காதீர்கள். அதை விட்டு அடுத்த கேள்விக்குப் போய்விடுங்கள். அதைவிட எளிதான கேள்விகளுக்கு நகர்ந்து விடுங்கள் என்கிறோம்.

### 'இந்தத் தேர்வுகளுக்கு நான் எப்படி என்னைத் தயார் செய்து கொள்ள வேண்டும்?'

இப்படிப்பட்ட தேர்வுகள் ஏதோ திடீரென்று நடந்து விடுவதில்லை. பெரிதாகத் திட்டமிடப்பட்டு, பல மாதங்கள் முன்பே அறிவிக்கப்பட்டு விடுகின்றன. சாதகமான முடிவுகளை எதிர்பார்த்தால், நீங்களும் அப்போதே உங்கள் திட்டங்களையும் ஆரம்பித்துவிட வேண்டும். அப்போது அதிகம் சிரமமாக இருக்காது. இதனால் உங்கள்

தன்னம்பிக்கையும் கூடும். 'அட, இது நாம் ஏற்கெனவே படித்த சப்ஜெக்ட் ஆச்சே!' என்ற உற்சாகமும் கூடும்.

பிராக்டிஸ். அதுதான் மிக மிக முக்கியம். படித்துப் பழகுங்கள். அதுதான் முழுமையான வெற்றி தரும்.

## எதன் மீது குறி வைக்க வேண்டும்?

எல்லா சப்ஜெக்ட்டுகளிலும் நீங்கள் ராஜா ஆகவேண்டுமே! முதலில் உங்கள் பலமான டாபிக் எது, பல வீனமான டாபிக் எது என்று அடையாளம் கண்டு கொள்ள வேண்டும். எத்தனை விரைவாக இந்த விஷயத்தில் நீங்கள் கவனம் செலுத்த ஆரம்பிக்கிறீர்களோ, அத்தனை விரைவில் உங்கள் மனசும் உறுதியான முடிவு எடுக்கும். உங்கள் திறனும் கூடும். கிடைக்கிற கூடுதல் நேரத்தை உங்கள் பலவீனமான பகுதிக்குச் செலவிடுங்கள். தீவிரமாக நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ளும்போது, இந்த அடையாளம் காணும் உத்தி மிகுந்த பலன் அளிக்கும்.

## தயார் செய்து கொள்ள என்னென்ன வழிமுறைகள் இருக்கின்றன?

ஏராளமான வழிமுறைகள் இருக்கின்றன. இதோ சில :

### புத்தகங்கள் :

இம்மாதிரித் தேர்வுகளில் பங்கு கொள்ளுவோருக்காக, நிறையப் புத்தகங்கள் இப்போது வெளியாகின்றன. கற்பனையாக ஒரு தேர்வுச் சூழலை உருவாக்கிக் கொள்ளுங்கள். உங்களுக்கு அதிக இடைஞ்சல் இல்லாத நேரமாகப் பார்த்து இதற்காக ஒதுக்குங்கள். நீங்களே சில தேர்வுகள் எழுதி, எத்தனை நேரம் ஆகிறது என்று கணக்கிடுங்கள். ஒவ்வொரு தேர்வின் போதும், கேள்விகளைச் சரியாகப் புரிந்து கொண்டு, குறைந்த நேரத்திலேயே பதிலளிக்கும் திறமை மெல்ல மெல்ல உருவாகும்.

### கம்ப்யூட்டர் :

உங்களிடம் கம்ப்யூட்டர் இருந்தால், ஸிடி - ரோம்களில் ஒன்றைப் பயன்படுத்தி, உங்கள் படிப்பைத் திட்டமிட்டுக் கொள்ளுங்கள். நூல்களைவிட, கம்ப்யூட்டர் மென்பொருளில் சில அனுகூலங்கள் கூடுதலாக இருக்கின்றன. பல மாணவ _ மாணவிகள் இப்போது மௌஸ், கீ போர்டு, மானிட்டர் இவற்றை வெகு இயல்பாக இயக்குகிறார்கள்.

### ஆன் லைன் சர்வீஸ் :

இன்டர் நெட் இப்போது தேர்வுகளுக்குத் தயார் செய்து கொள்ளுவதில் நிறைய உதவுகிறது. சில வெப் - தளங்கள், பிராக்டிஸ் டெஸ்ட்டுகள் கூடத் தருகின்றன.

### கோச்சிங் கிளாஸ் :

தேர்வுக்குத் தயார் செய்வதற்கு என்றே நிறைய கோச்சிங் வகுப்புகள் நடத்தப்படுகின்றன. ஆனால் எது சிறந்தது என்று முடிவெடுப்பது உங்கள் கையில்தான் இருக்கிறது. இதில் சேர்வதற்கு முன், நடத்துகிறவர்களுடைய கல்விச் சிறப்பு என்ன, தகுதி என்ன, என்ன முறையைக் கையாளுகிறார்கள் என்பதை எல்லாம் கட்டாயம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். இந்த கோச்சிங் வகுப்புகளில் கிடைக்கிற இன்னுமோர் ஆதாயம், வகுப்பில் மற்றவர்களை ஒப்பிடும்போது உங்கள் நிலை என்ன என்பது புரிந்து விடும். ஆனால் உங்கள் வெற்றியில் கோச்சிங் வகுப்புகளின் பங்கு 25 சதவிகிதம்தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். மீதி 75 சதவிகிதம், உங்கள் உழைப்புக்கும், தீவிர ஆர்வத்துக்கும் கிடைப்பது.

எனவே, படிப்பையும் தேர்வையும் மகிழ்ச்சியான உணர்வோடு எடுத்துக் கொண்டு செயல்பட்டால், முடிவும் பிரமாதமாக இருக்கும். உங்கள் மனம் ஒரு சக்தி வாய்ந்த கருவி. அதனால் தேர்வுகள் குறித்து இருக்கும் எதிர்மறை சிந்தனைகளை ஒதுக்கி, பாஸிடிவ் ஆக நினைக்கத் தொடங்கினால், அமைதியாகவும், அலட்டிக் கொள்ளாமலும் தேர்வுகளில் வெற்றி கொள்ளலாம்.

அடுத்த வாரம் :
என்சாய் பண்ணுங்க படிப்பை!

படம் : **யோகா**

---

"நேற்று உம்மிடம் ஆயிரம் ரூபாய் கடன் வாங்குவது போல் கனவு கண்டேன்..."

"அடப்பாவி! அது கனவு இல்லை. உண்மையிலேயே வந்து வாங்கிட்டுப் போனே!"

- நாஞ்சில் கு. நாகராஜன்



ஜாதகம் எப்படியிருப்பினும் தன்னை வணங்குபவர்களுக்கு நன்மையே செய்யும்

# நவக்ரஹ க்ஷேத்ரங்களில் உங்கள் ராசிப்படி ப்ரீதி செய்ய அன்னதானம் செய்வோம் வாருங்கள்!



அன்புடையீர்! சித்திரபானு வருஷம் முடிந்து சுபானு ஆண்டு சித்திரையில் பிறக்க, நாடெங்கும் மாற்றங்கள் நடைபெறப் போகின்றன. வருகிற சனிப்பெயர்ச்சியின் போது ஒவ்வொரு ஜாதகருக்கும் கிரஹ மாற்றங்கள் மிகப்பெரிய அளவில் நிகழும். ஒவ்வொரு ஜாதகரின் வாழ்விலும் நவக்கிரஹங்கள் முக்கிய பங்காற்றி வாழ்வில் கஷ்டத்தைப் போக்கி சுபீக்ஷத்தை உண்டாக்குகின்றன. ஜாதகரின் அசுப ஸ்தானங்களில் இருக்கும் நவக்ரஹங்கள் கூடத் தன்னை வழிபடும் அனைவருக்கும் நற்பலனையே அளிக்கின்றனர். இது பிரம்மதேவனின் ஆணை. கிரஹங்கள் ஒரு ஸமயம் பிரம்மதேவனை வணங்கிப் பிரார்த்தித்தனர். ஐயனே! ஒரு ஜாதகனின் அசுப ஸ்தானத்தில் இருக்கும் நாங்கள் அவனுக்குத் தீய பலனையே அளிக்கும்படி தாங்கள் கட்டளையிட்டுள்ளீர்கள். அவ்வாறே நாங்களும் செய்கிறோம். ஆயினும் தீமையை அனுபவிப்பவர்கள் எங்களைச் சபிக்கின்றனர். எனவே, எங்களுக்கு அபயமளியுங்கள் என்றனர். அப்போது, பிரம்மதேவன் கஷ்டங்களை அனுபவிப்பவர்கள் உங்களைப் பூஜித்து அன்னதானம் அளித்தால் அவர்களுக்கு நீங்கள் நற்பலனை அளியுங்கள் என வரமளித்தார்.

"யஸ்ச யஸ்ச யதா துஸ்த: தத்தம் யத்னேன பூஜயேத்:!
ப்ரம்ஹணைஷாம் வரோதத்த: பூஜிதா: பூஜயிஷ்யத"

என்று மாந்தாரு கர்மவிபாகம் கூறுகின்றது.

ஆகவே, உங்கள் ஜாதகத்தில் கிரஹ மாற்றங்களினால் ஏற்படும் கஷ்டத்தைப் போக்க, உரிய கிரஹங்களுக்கான ஸ்தலங்களில் அன்னதானம் செய்ய கோபுரதரிசனம் அன்னதான அறக்கட்டளை விரிவான ஏற்பாடுகளைச் செய்துள்ளது. அந்தந்த கிரஹங்கள் அமர்ந்தருளும் க்ஷேத்ரங்களில் அன்னதானம் செய்வதில் பங்கேற்று அற்புதமான பலன்களை அடைய பிரார்த்திக்கிறோம்.

| நவக்ரஹங்கள் | க்ஷேத்ரங்கள் |
|---|---|
| சூரியன் | - சூரியனார்கோயில் |
| சந்திரன் | - திங்களூர் |
| செவ்வாய் | - வைத்தீஸ்வரன் கோயில் |
| புதன் | - திருவெண்காடு |
| வியாழன் | - ஆலங்குடி |
| சுக்கிரன் | - கஞ்சனூர் |
| சனீஸ்வரன் | - திருநள்ளாறு |
| ராகு | - திருநாகேஸ்வரம் |
| கேது | - கீழப்பெரும்பள்ளம் |

★ *சிறிய தொகை மற்றும் அரிசி போன்ற உணவுப் பொருட்களும் ஏற்றுக் கொள்ளப்படும்.*
★ *ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*
★ *ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு, கோபுர தரிசனம் இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.*

நன்கொடையாளர்களின் இல்லங்களில் மகாலக்ஷ்மி நிரந்தரமாக வசிக்க ஸ்ரீகுபேர யந்திரம் வழங்கப்படும். அல்லது 'கிரிகோ'வின் ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் புத்தகம் அல்லது கேசட் அனுப்பி வைக்கப்படும். நமது வாழ்வில் ஏற்படும் தீராத பிரச்சனைகள் பல. கடன் தொல்லை, குடும்ப வாழ்வில் குழப்பம் - மனக்கவலை - வேலைவாய்ப்பின்மை - கல்வியில் மந்தம் என ஜாதகக் கோளாறால், நவக்ரஹங்களின் மாறுபாட்டால் பல பிரச்சனைகளுக்குத் தீர்வு காண உங்கள் சார்பாக **கவி-ந்யாய-மீமாம்ஸ சிரோன்மணி ஸ்ரீமான். திருவெண்காடு டி.கே. முத்துஸ்வாமி சாஸ்திரிகள்** தலைமையில் அன்னதானம் செய்து பிரஸாதம் அனுப்பி வைக்கப்படும்.

**நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். லோக க்ஷேமார்த்தமாக அன்னமிடும் அரிய பணிக்கு உங்களது ஒத்துழைப்பை நல்கிட வேண்டுகிறோம்.**



*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*


## கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை
## GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST
**M-11/F-4, RAGAM APTS., I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR, THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA**
☎: (044) 24900303, 24900603, 24416122 E-mail : gopuradarshanam@yahoo.co.in

# சினிமா ஆண்களின்

ஓர் இளம் கதாநாயகனைச் சந்திக்கிற வாய்ப்புக் கிடைத்துவிட்டால் போதும். அவசர அவசரமாய் ஆட்டோகிராஃப் வாங்கி, பக்கத்தில் நின்று படம் எடுத்துக் கொண்டு, முடிந்தால் அவர் பற்றிய கிசுகிசுவை நிஜம்தானா? எனக் கேட்டுத் தெரிந்துக் கொள்கிற கல்லூரி மாணவிகளும் இருக்கவே செய்கிறார்கள்.



நாம் அழைத்துப் போன கல்லூரி மாணவிகளிடம் இந்தக் கனேபரத்தை யெல்லாம் எதிர் பார்த்த நடிகர் ஸ்ரீகாந்துக்கு இன்ப அதிர்ச்சி! பெண், பெண்ணியம், சினிமாவில் பெண் ணுரிமை என்று மாணவிகள் வீசிய ஃபாஸ்ட் பவுலிங் கேள்விகளைச் சிக்ஸர்களாய் விளாசினார் 'பார்த்திபன் கனவு' - படப்பிடிப்பிலிருந்த ஸ்ரீகாந்த்!



**ஜமுனாராணி: -** அம்மா தவிர உங்களுக்குப் பிடிச்ச பெண்ணைப் பத்திச் சொல்லுங்க?

**ஸ்ரீகாந்த்: -** என்னங்க! அம்மா தவிரன்னு அவ்வளவு ஈஸியாச் சொல்லீட்டீங்க. அப்பா வங்கி ஊழியர். அவருக்கு ஊர் ஊரா பணி மாற்றம் வந்துகிட்டே இருக்கும். ஆனால் அம்மா எங்களை எந்தக் கவலையும் இல்லாமல் வளர்த்தாங்க. அது மட்டுமில்லே, பெண்கள் வேலைக்குப் போறதைப் பத்தி தப்பா பேசுற அந்தக் காலத்தில், இருபத்தைஞ்சு

நட்சத்திர சந்திப்பு

# கோட்டையா?

விடுதலையைப் பெண்கள் அவங்களே எடுத்துக்கணுமே தவிர, குடு குடுன்னு கேட்டுக்கிட்டு இருக்கிறது சுத்த பைத்தியக்காரத்தனம்!

**பிரமீளா:** - பிரச்னையோட ஆழம் தெரியாமப் பேசறீங்க ஸ்ரீகாந்த்! அப்பா, அம்மா, கணவன், மாமியார்ன்னு ஒரு பெண்ணை இங்கே எவ்வளவு பேர் அதிகாரம் பண்ண இருக்காங்க... நாங்க அவுங்க சொல்றபடி ஆடுறோம் அவ்வளவுதான்... இதுலே நாங்களே எங்க விடுதலையை எடுத்துக்க முடியும்!

**ஸ்ரீகாந்த்** :- இதான்! இந்தத் தாழ்வு மனப்பான்மைதான் நம்ம ஜீன்ல கலந்து கிடக்கு. நீங்க மத்தவங்களைச் சார்ந்து இருக்கிறதை விட்டுட்டு, உங்கச் சொந்தக் கால்லே நின்னு பாருங்க. அப்புறம் உங்களுக்கு, எவ்வளவு தன்னம்பிக்கை பிச்சுக்கிட்டு வருதுன்னு பாருங்க...

**மீனாட்சி:** - அய்யய்யோ! நீங்க சொல்லித் தர்றதைப் பார்த்தா, குடும்பம், சொஸைட்டி எல்லாத்தையும் தூக்கி எறிஞ்சுட்டு வேலையைப் பாருங்கன்னு தூண்டி விடுற மாதிரியில்லே இருக்கு...

வருஷம் தொலை தொடர்புத் துறையிலே வேலைக்குப் போய் குடும்பச் சுமையைப் பகிர்ந்துகிட்டாங்க. அப்பா, அம்மா இரண்டு பேரும் வேலைக்குப் போனதுனால தான், நான் என்ஜினீயரிங் படிக்க முடிஞ்சது. அதனாலே எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிச்ச பெண்மணி அம்மாதான். அம்மாவுக்கு அடுத்த நிலையிலே அன்னை தெரசா. பிறருக்காக வாழணும்னு, நாம பக்கம் பக்கமா டயலாக் பேசுவோம்... ஆனால் அவங்க செயலில் காட்டினாங்க.

**பிரவீணா:** - பெண்ணியம் பத்தி ஏதாவது தெரியுமா?

**ஸ்ரீகாந்த்:** - என்ன இப்படிக் கேட்டுட்டீங்க? நல்ல தாய், நல்ல சகோதரி, நல்ல மனைவியாக, எந்தப் பிரச்னையும் இல்லாமல் ஒரு பெண்ணால வாழ்ந்து காட்ட முடியும்ன்னா



அதுதாங்க பெண்ணியம். இதையெல்லாம் விட்டுட்டு, பெண் விடுதலை வேணும்ன்னு பேசறதிலையோ, குரல் கொடுக்கிறதிலையோ எனக்கு நம்பிக்கை இல்லீங்க. பெண்களை ஆண்கள் ஒடுக்குறாங்கன்னு சொல்றதை ஒத்துக்கிறேன். ஆனால் தங்களுக்கான

**ஸ்ரீகாந்த்** :- என்ன சொஸைட்டி! நீங்க ஜெயிச்சுட்டீங்கன்னா உங்களைத் தூக்கி வெச்சிக்கிட்டு ஆடும். தோத்துட்டீங்கன்னா, தூக்கிப் போட்டு உடைச்சிடும்! சொஸைட்டி, சொஸைட்டின்னு எவ்வளவு நாளைக்குச் சொல்லிக்கிட்டே இருப்பீங்க... முதல்லே

உங்க மூளையிலே இருக்கிற பிளாக்கை ரப்பர் வெச்சு அழிங்க... அதை அழிச்சிட்டு துணிச்சலா வர்றப் பொண்ணுங்கதான் இன்னைக்குச் சாதிக்கிறாங்க. கிடைக்கிற சலுகையைப் பயன்படுத்திக்கிறாங்க. கூனிக்குறுகி வீட்டிலே உட்கார்ந்துகிட்டு இருந்தாலோ, இல்லே, அப்பா, அம்மாகிட்டே அனுமதி கேட்டுக் கிட்டு இருந்தாலோ, இப்படியொரு சினிமா ஸ்டுடியோக்குள்ளே வந்து, என்னை மாதிரி டூயட் பாடுற ஒரு நடிகனைப் பார்த்து, நீங்க கேள்வி கேட்க வந்திருப்பீங்களா?

**மகாலட்சுமி:** கூல்! கூல்! எங்க மூளையிலே இருக்கிற பிளாக்கை எடுக்கணும்னு சொல்றீங்களே தவிர, பெண்களைக் கட்டுப்பாட்டிலேயே வெச்சிருக்கணும்னு ஆண்கள் மூளையிலேயும் ஒரு பிளாக் இருக்கே, அதை எடுக்க வேணாமா?

**ஸ்ரீகாந்த்:** அந்தப் பிளாக்கை ஆண்கள் நிறையவே எடுத்துட்டாங்கன்னுதான் சொல்லணும்... அதனாலதானே இத்தனை மாற்றம். ஏராப்பிளேன் ஓட்டி, மிலிடெரியில துப்பாக்கி தூக்கி, நாட்டைக் காக்குற, வீராங்கனை மாதிரியான பெண்களை விட்டுடுவோம். இன்னொரு பக்கம் ஆண்களுக்கு நிகரா சிகரெட்டு பிடிச்சு, பீர் குடிச்சு, ஷார்ட் சர்ட்டும், ஜீன்சும் போட்டுக்கிட்டு பையன்ங்க கெட்அப்புலே நடமாடுறாங்க... ஆண்களோ முகத்தை மழிச்சுக்கிட்டு, பெண்கள் மாதிரி கூந்தலை வளர்த்து ரப்பர் பாண்ட் போட்டுக்கிட்டுப் போறாங்க. இப்படியொரு ஜோடியை, அவங்க முதுகு பக்கமா பார்த்தால், யார் ஆண், யார் பெண்ணுன்னு தெரிய மாட்டேங்குது!

**சசிதேவி:** - நீங்க சென்னையை மட்டும் பார்த்துட்டு இப்படிச் சொல்றீங்கன்னு தோணுது?

**ஸ்ரீகாந்த்:** - இருக்கட்டுமே, மாற்றம் இந்த மாதிரி நகரங்கள்ளேர்ந்து ஆரம்பிக்கட்டுமே..! அதுக்காக பீடி பிடிச்சு, பீர் அடிக்கிறவங்கதான் துணிச்சலான பெண்கள்ன்னு எடுத்துக்காதீங்க... ஒரு உதாரணத்துக்குச் சொன்னேன். இன்னொரு முக்கியமான விஷயம். ஆண் - பெண் ஈகோ. நம்மளை விட கணவன் அதிகமா சம்பாதிக்கிறானேன்னு எந்தப் பொண்ணும் வருத்தப் படுறதில்லே. ஆனால் கணவனை விட மனைவி அதிகமா சம்பாதிச்சா, கணவனுக்குப் பொறுக்குறதில்லே. இந்த மாதிரி நிறைய விஷயங்கள்லே கணவன், மனைவி இடையே ஈகோ புகைய ஆரம்பிச்சுடுது. நீங்களே பேசித் தீர்த்துக்குங்க... இல்லேன்னா, மூணாவது ஆள் புகைய ஊதி எரிய வெச்சுடுவாங்க.

**மோகனப்ரியா:** - இவ்வளவு பேச நீங்களே உங்க சினிமாத் துறையிலே பெண்களை ஏன் இத்தனை இழிவு படுத்துறீங்க?

**ஸ்ரீகாந்த்:** - எல்லாரும் அப்படிப் பண்றாங்கன்னு ஒட்டு மொத்தமா குத்தம் சொல்ல முடியாது. நான் எப்படி வேணா நடிக்கத் தயார்ன்னு சில பெண்கள் வராங்க! அந்த மாதிரி தப்பான ஆட்களுக்குத் தப்பான துணி கொடுத்தால் தப்பாத்தான் தெரியும்! படம் பார்க்கிற நாம,



## வாசகர்களே, ஐடியா கொடுங்கள்!

அரக்கப் பறக்க ஆபீஸ் போய்த்தான் நாலு காசு சம்பாதிக்கணுமா என்ன...? வீட்டிலிருந்தபடியே, சம்பாதிக்கவும் எத்தனையோ வழிகள் இருக்கே!

அப்பளம், வடாம் இடுவது, க்ரெச் நடத்துவது, டெய்லரிங் போன்ற எல்லோருக்குமே தெரிந்த விஷயங்களைத் தவிர, புதிய பயனுள்ள தகவல்களைத் தகுந்த விவரங்களுடன் எழுதுங்கள்.

உருப்படியான யோசனைகளுக்குப் பரிசும் உண்டு!

'வீட்டிலிருந்தே சம்பாதிக்கலாம்' என்று குறிப்பிட்டு 26.3.03க்குள் எழுதுங்கள்!

டியேட் டர்லே தெளியறோம்... இல்லேன்னா மன சுக்குள்ளே திட்டறோம். ஆனா சம்பந்தப் பட்ட நடிகைக்கோ, இயக்குனருக்கோ, தயாரிப்பாளருக்கோ, ஏன்யா இப்படி எடுக்கறீங்க. நாங்க இப்படிக் கேட்ட மான்னு அட்லீஸ்ட் ஒரு போஸ்ட் கார்டு போட்டுருக்கோமா? மத்தவங்களை விடுங்க, நாளைக்கு நான் ஒரு கவர்ச்சி நடிகைகூட அருவருப்பா டான்ஸ் ஆடினா ஏன்டா ஸ்ரீகாந்த் இப்படிப் பண்ணினேன்னு சட்டையைப் பிடிச்சுக் கேளுங்க!

**புவனேஸ்வரி:** -ஒரு நடிகையாக பெண்கள் சினிமாவிலே ஜெயிக்கிற மாதிரி, இயக்குனர்கள், தொழில் நுட்பக் கலைஞர்களாக அதிகம் வர முடிய லையே! சினிமா என்ன ஆண்களோட இரும்புக் கோட்டையா?

**ஸ்ரீகாந்த்:** - இப்போ சினிமா ரொம்ப ஓபனாயிடுச்சு... புரொபொஷனலாவும் மாறிப் போச்சு. திறமை இருந்தால், பொறுமையும் முயற்சியும் இருந்தால் ஜெயிக்கலாம். தீபா மேத்தா, மீரா நாயர், அபர்னா சென், இங்கே சுகாசினி, ரேவதி, ஜெயதேவின்னு நிறையப் பேர் சாதிச்சுக் காட்டியிருக்காங்க.

**பிரவீனா:** - அதெல்லாம் போகட்டும்! தமிழ்நாட்டுலே கதாநாயகிகளே கிடை யாதா? வணக்கம்ன்னு கூட சொல்லத் தெரியாத பஞ்சாபி, வங்காளி, மகாராஷ் டிரா பொண்ணுங்கதான் அழகிகளா?

**ஸ்ரீகாந்த்:** - இந்தக் கேள்விக்குக் கிட்டத் தட்ட எல்லோரும் பதில் சொல்லி யிருப்பாங்க! மத்தவங்களை விடுங்க! இப்போ உங்கள்லே எத்தனை பேர் நடிக் கத் தயாரா இருக்கீங்க! இப்போ வீரமா சொல்லிடலாம்! ஆனால் நமக்கு சினிமா வையும் சினிமா உலகத்தையும் தப்பாவே பார்த்துப் பழக்கப்பட்டுப் போச்சு! அதனாலதான் தமிழ்ப் பொண்ணுங்களுக்கு சினிமான்னா இன்னும் பயம் இருக்கு! தமிழ்நாட்டுல என்ன அழகுக்குப் பஞ் சமா? சினிமான்னா உடனே ஏன் தப்பா நினைக்கணும். கெட்டவங்க எல்லா இடத் துலேயும் இருப்பாங்க! வீட்டிலேகூட இருப்பாங்க... நாமதாங்க ஒழுங்கா இருக் கணும். இருந்துட்டா, கிசுகிசுவோ, வதந் தியோ வந்தா நமுத்துப் போயிடும்.

**ஜமுனா ராணி:** - கடைசியா ஒரு கேள்வி; எந்தப் பெண்ணையாவது கைநீட்டி அடிச்சிருக்கீங்களா?

**ஸ்ரீகாந்த்:** - ஆமாங்க! ரோஜா கூட்டம் படத்துலே நான் பூமிகாவை அறையற மாதிரி ஒரு காட்சி. ரெடி ஆக்ஷன்னு சொன்னதும்... வேகமா அறையற மாதிரி நடிச்சேன். ஆனால் பூமிகா நிஜமாவே என்னை அறைங்க... அப்போதான் மூடு வந்து நான் அழ முடியும்ன்னு சொன் னாங்க. அய்யய்யோ முடியாதுன்னு மறுத்துட்டேன். ஆனால் பூமிகா விடலே! டைரக்டர் சசியும் பூமிகா கட்சியிலே சேர்ந்துட்டார். பயந்துகிட்டே நிஜமா அறைஞ்சேன். பூமிகா அழுதுட்டாங்க. ஆனா கேமராமேன் ஷாட் சரியா வர லைன்னு சொல்லிட்டார். வேற வழியில்லா மல் இரண்டாவது அறை, மூணாவது அறைன்னு மொத்தம் நான்குமுறை அறைய வேண்டியதாப் போச்சு. ஷூட் டிங் பார்த்துக் கொண்டிருந்த யூனிட் ஆட்கள் 'நாசமா போக, பூ மாதிரியுள்ள பொண்ணை இத்தனை முறை அடிக் கிறான்'னு கரிச்சுக் கொட்டிட்டாங்க. நடிப் புக்காக அறைஞ்சாலும், அந்த உறுத்தல் இன்னும் அறுக்குது... ஆனால் ஷாட் முடிஞ்சதும் சூப்பரா அறைஞ்சிங்க... பெரிய நடிகரா வருவீங்கன்னு'' பூமிகா வாழ்த்திட்டுப் போயிட்டாங்க! அவங் களுக்குப் பூ மாதிரி மனசு!

**- விஷ்ணுவல்தாசன்**

படங்கள்: ஸ்ரீ ஹரி

## வியப்பூட்டு!



பூரி ஜெகநாதர் கோவிலுக்கு ஒரு விசேஷப் பூட்டு தயாரிக்கப் பட்டுள்ளது. அதன் எடை ஐம்பது கிலோ. சாவி பதிநாலரை அங்குல நீளம். இரண்டு அடி நீளமும் ஓரடி அகலமும் உள்ள இந்தப் பூட்டைத் தயாரிக்க ஆன செலவு சுமார் முப்பதாயிரம் ரூபாய்!

– ப. மூர்த்தி

மாலதி

# கடைசி நாள்

ஆப்பிரிக்கக் காடு கழனி நடுவில் இயங்கும் சதுப்பில்லாத சிறுபரப்பு அவன் அலுவலகம்.

துயரங்களின் வரைபடம் போல அவனுடைய தங்குமிடம் திசைகளின் வளைவுக் குழப்பங்களை மீட்டெடுத்தது. சொற்ப விலையில் அவனைக் குத்தகைக்கு எடுத்திருந்த கம்பெனி, அலுவலகம் போய் வர மட்டும் ஒரு வண்டி அமர்த்தியிருந்தது. மூன்று மாதங்களைக் கழித்து விட்டான். அன்று அவளுடைய பிறந்த நாள். வெகு ஆவலாக அவளுடைய தொலைபேசி நம்பரை ஒற்றினான். பதில் இல்லை. ஹாஸ்டல் நம்பர். "அப்படி யாருமில்லையே!' தூரத்திலிருந்து ஒரு குரல். 'காட்! ஷி ஈஸ் நாட் ஹியர்!" இரண்டாவது நிமிடத்தில் அவளே பேசினாள். "எனக்கு விஷ் பண்ண காத்திட்டிருந்திங்க இல்ல? ஓகே.! ஓகே! தாங்க்யூ! எனக்கு கிஃப்ட் கிடையாதா? அங்கே வரணுமா? வந்தாலும் வந்துடுவேன். இங்க தனியா இருக்க என்னால முடியல.."

உருகி உருகி அவனும் பேச, பதிலுக்கு அவள் அழ... தவறாமல் கடிதங்கள் வந்தன அவனிடமிருந்து. எல்லாமே நெஞ்சைப் பிழிவதாயிருந்தன.

ஆனால் இந்தியாவை விட்டுக் கிளம்பின தினத்தன்று அவளைப் பிரிந்த விதத்தைத்தான் அவனால் மறக்கவே முடியவில்லை. ஊசியை விழுங்கி உள் வைத்துத் தைத்தாற் போல, குத்து குத்தென்று வருத்திய அந்த ரணம் தாளவேயில்லை.

அவளும் மறக்காமல் ஒவ்வொரு கடிதத்திலும், ஈ-மெயிலிலும், போன் அழைப்பிலும் அவனைக் குற்றம் சாட்டினாள். கிளம்புகிற அன்று இருவருக்கும் நடந்த தகராறு வழக்கமான ஊடலாக இல்லை. அவன் கேட்கவில்லை, எதற்கு இத்தனை பராமுகம் என்று. "உன் ஆத்திரத்துக்குப் பதில் சொல்ல மாட்டேன். போகும் போது மூட் அவுட் செய்யாதே" என்றான்.

எதுவும் பேசாமல் தன் ரயில் வந்ததும் ஏறினான். அவளைப் பார்த்தபடியே நின்றிருந்தான். ஏதோ நினைத்தவள் போல பெட்டியருகே ஓடி வந்தாள். கையசைக்க மறந்து வெறித்து நின்றாள்.

அவன் போய் விட்டான். மறு நாள் இந்த நகரத்தையடைந்து தங்குமிடத்துக்கும் வந்து விட்டான். பெரிய, தாள முடியாத ஒரு சோகத்தை உணர்ந்தான். உடம்பு முழுவதும் மலைகளால் மிதிக்கப்பட்டது போல ஒரு வலி. காலை எழுந்து, குளித்து, பசியும் பட்டினியுமாய் வேலைக்கு வந்த போது, இன்னும் மிகுந்தது தாய் நாடு விடுத்த தனிமைத் துயரம்.

சூழ்நிலை பேய்ப் புழுக்கமாய்க் கவிந்தது. தேசத்து சகாக்கள் 'இப்படி வந்து மாட்டிக் கொண்டாயே!' என்று முகமன் சொன்னார்கள்.

பத்தே நிமிடத்தில் அவள் பேசினாள் தொலைபேசியில். குரலின் ஜிலுஜிலுப்பு பரவசத்தில் ஆழ்த்தியது. ஆனால் மொழியில் அழுகை இருந்தது. "ராஜூ! பத்திரமா போய்ச் சேர்ந்திங்களா? பிரயாணம் கஷ்டமாயிருந்ததா? நான்... நானா... நான் இல்ல இப்ப.. நான் அப்படியே.. அப்படியே... கிளம்பறப்ப நடந்ததை மறந்திடணுமா? அப்படித்தான் செய்திருக்கணும்..." கதறி அழுதாள்.

அடுத்து மறுநாள் தேதியிட்ட ஈ-மெயில் வந்தது. 'என்னவானாலும் நீங்க செய்தது தப்பு. என் மேல உங்க கரிசனம் அவ்வளவுதான். என்னை எப்பவும் நீங்க இரண்டாம் பட்சமாத்தான் நடத்துவீங்க. என்னைப் பிரிவதற்காக துளி துக்கம், கிளம்பும் போதும் உங்களுக்கு இல்லை' பதிலுக்கு அவன்



எழுதினான் 'நீ நினைக்கிறது தப்பு. நீ எனக்காக செய்த எல்லாவற்றுக்கும் நான் மிக அதிகமான அன்பைச் செய்கிறேன் உன் மீது. வார்த்தைகளில் சொல்ல வருவதில்லை, எனக்கு. பிரிவுகளில் சண்டை போடுவது உன்னுடைய சிண்ட்ரோம். தாள முடியாத பிரிவுத் துயரைச் சகிக்க, நீ அந்த வழியைச் சரணடைகிறாய்.'

அவள் பெரிய பட்டியல் தந்தாள் பதிலாக. அவர்களுடைய மூன்று வருடத்திய நெருக்கத்தில், எப்போதெல்லாம் அவன் சறுக்கியிருக்கிறான் என்று. எங்கெல்லாம் அவள் அவனினும் மேம்பட்டு அன்பு செய்திருக்கிறாள் என்று சூட்சுமமான விவரணைகளை வைத்திருந்தாள். அவளுடைய ஒவ்வொரு தொடர்பிலும் போலவே, அந்தக் கடிதத்திலும் மிகப் பெரிய சோகம் தொனித்தது. எப்படியாயினும் 'அதுவே கடைசி நாள்' என்று குறிப்பிட்டிருந்தாள்.

சமாதானம் செய்ய அவன் தொலைபேசியில் அழைத்தபோது அவள் கிடைக்கவில்லை. கடிதங்கள் திரும்பி வந்தன. ஆயினும் அவள் குரல் கேட்டவாறிருந்தது. ஈ-மெயில்கள் பதில் பெற்றன.

குரலில் உயிரும் ஒரு ஜிலுஜிலுப்பும் அவனைப் பரவசப்படுத்தி ஒரு நாள்

முழுக்கவும் அவனை நெம்பி விடும் ஏதுவாயிருந்தது. அவனும் உறுதியளித்தான். 'நான் வந்து விடுகிறேன். உனக்காக மட்டுமே வந்து விடுகிறேன்' என்கிறது போல பலவிதமாய் ஆறுதல் சொன்னான்.

மீண்டும் மீண்டும் அவன் தொடர்புகளில் கோபமும், ஆற்றாமையும், வெறி கொண்ட காதலும், அலை அலையாக அவனைக் கரைத்தன. ஒரு துரும்பைப் போலத் தன்னை உணர்ந்தான்.

ஒரு முறை சொன்னான், "எவ்வளவு நீ குற்றம் சாட்டினாலும், நிறுவினாலும் கடைசி நாள் நிகழ்வுக்கு நீ தான் காரணம். அன்றைய முழு நாளிலும் காரணம் புரியாத போதே நான் உன்னை எவ்வளவோ கெஞ்சினேன். காரணத்தை நீ வாசலில் சொன்னது முறையா? நான் என் மீது எந்தத் தப்பும்



"போகும் போது சண்முகா பவனில் நாலு செட் பூரியும், திரும்பும்போது லட்சுமி பவனில் இரண்டு தோசையும் சாப்பிட்டேன் கமலா!"

"போதும்! போதும்! வெயிட்டைக் குறைக்க நீங்க வாக் போகிற லட்சணம்!"

– உ. ராஜாஜி

இல்லாதிருந்தும், என்னைக் கடைசி நாளில் கொஞ்சி அனுப்புவாய் என்று எதிர்பார்த்தேன். கடைசி நிமிடத்திலாவது கையசைப்பாய் என்று காத்திருந்தேன். நம்பினேன். அந்த ஏமாற்றம் எப்படி இந்த மண்ணுக்குள் என்னைப் புதைய வைத்தது தெரியுமா? உனக்கு உன் நியாயங்கள் முக்கியம். நானில்லை. நான் உன் இடத்தை உனக்கு மறுத்ததே இல்லை. இதயம் கிழித்துக் காட்ட முடியுமா? உனக்கானால் குற்றம் சாட்ட மட்டுமே வருகிறது."

அவளுடைய குரலில் பதில் எதிர்பாராத விதமாக இருந்தது. "கடைசி நாளைக்கு நானே பொறுப்பு. அது கடைசி நாளாகவே இருந்து போகட்டும்."

ஈ மெயிலில் வாசகம் முரண்பட்டது. 'கடைசி கடைசி என்று மீண்டும் மீண்டும் சொல்ல வேண்டாம் – நாமிருவரும் இன்னொரு நாளை பெறப் போவதில்லை என்பது போல. சீக்கிரம் திரும்பி வாங்க. உங்களுக்குக் கையசைக்கிறேன் இந்த முறை'

பேச்சுக்கள் பெரும்பாலும் தேள் கொட்டினாற் போல அலைக்கழிப்பில் இருந்தன.

**ப**ருவங்கள், பண்டிகைகள், எல்லாவற்றிலும் மிதந்து மிதந்து துயரம். அதைக் கட்டிக் கொண்டபடி வாழ்க்கை நடந்தது. அவனுடைய பத்து நாள் லீவில் அவன் இந்திய மண்ணை மிதித்தான். ஓடோடி வந்து அவள் தொலைபேசி எண்களைத் தொடர்பு கொண்டான். அவளுடைய நண்பர்கள், உறவினர்கள் யாருமே பரிச்சயமில்லை அவனுக்கு. எங்கும் அவள் கிடைக்கவில்லை. அலுவலகங்களில், ஹாஸ்டலில், கிராமத்து வீட்டில் எங்கும் இல்லை. சலித்துப் போய் அவனை விட்ட அந்த ரயில் நிலையத்தில் போய் நின்றான். அவள் அதே புடைவையில்... அதே களைப்புடன்... மலர மலர நின்றிருந்தாள். அவனைப் பார்த்ததும் தூரத்திலிருந்து கையசைத்தாள். அவன் ஓடி ஓடி ஜன சமுத்திரம் கடந்து அவளை எட்டுகிறான். அவளில்லை. என்ன ஆச்சரியம்! அவள் இல்லவே இல்லை. எங்கு தேடியும் கிடைக்கவில்லை.

அவன் நேராக அலுவலகத்தில் அவளை அறிமுகம் செய்து வைத்த நண்பனைச் சென்றடைகிறான். விசாரிக்கிறான். "யார்? அந்த மாடலா? அவள் போன வருடம் ஒரு விபத்தில் இறந்து போனாள். ரயில் விபத்து கூட இல்லை. தற்கொலை என்றார்கள். வண்டிக்குக் குறுக்கே பாய்ந்து விழுந்தாளாம்!"

பத்திரிகை ஆபீஸிலும் போலீஸ் ஸ்டேஷனிலும் ஊர்ஜிதம் பெற்றான். சம்பவம் நடந்தது அவன் இந்தியாவை விட்டுக் கிளம்பிய அதே தினம்.

எல்லோரும் கேட்க இப்போதெல்லாம் உரத்துச் சொல்கிறான்.

"கடைசி நாள் நிகழ்வுக்கு நான் தான் காரணம். அவள் திரும்பி வருவாளாமா? கேளுங்கள்." ○

---

"காதலின் சின்னமே நான்தான்!"
- கர்வம் கொண்டது ரோஜா.
"அதன் சுகந்தம் என் இதழ்களில் சிறையிருக்கிறது"
- சிரித்துச் சொன்னது முல்லை
"அதன் மௌன சுகங்கள் என் மொட்டுக்குள் அடக்கம்"
- மென்மையாய் மொழிந்தது செண்பகம்
"தேடிச் செல்வானேன்...? தண்ணென்ற என்
இதழ்களைத் தொட்டுப் பாருங்கள்..."
- தாமரை தலை நீட்டிப் பேசியது

பூக்கள் மொழிந்ததை அவளிடம் சொன்னேன்
பூமி இதுவரை பார்த்திராத புதுமலர் போல் சிரித்தாள்...
எனக்குள் பூத்தது பேருண்மை -
அத்தனை மலர்களினும் மேன்மையானதன்றோ - இன்னும்
எழுதப்படாத எங்கள் காதல் கதை!

-சபரி

# புதுமலர்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka
Supplement to the Kalki issue Dated 23.3.2003